சரசுவதி மகால் வெளியீட்டு எண். 413

# பொன்னர் - சங்கர் அம்மானை




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

## சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

2000

விலை ரூ. 40—00

சரசுவதி மகால் வெளியீட்டு எண். 413

# பொன்னர் - சங்கர் அம்மானை

பதிப்பாசிரியர் :

புலவர் **ச. திலகம்,** பி. லிட்.,

*தமிழ்ப்பண்டிதர்,*

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

## சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

2000

விலை ரூ. 40—00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | பொன்னர்-சங்கர் அம்மானை |
| பதிப்பாசிரியர் | : | புலவர் ச. திலகம் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம். |
| வெளியீட்டு எண் | : | 413 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | மார்ச், 2000 |
| தாள் | : | 10. 9 கி. கி. சேஷசாயி |
| நூல் அளவு | : | 25 × 19 செ. மீ. |
| பக்கங்கள் | : | 154 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | அம்மானை இலக்கியம் |
| விலை | : | ரூ. 40—00 |




# வெளியீட்டாளர் முகவுரை



தஞ்சை மாமன்னர் சரபோஜியின் சரசுவதி மகால் நூலகம் பல்லாயிரக்கணக்கான பன்மொழிச் சுவடிகளையும் நூல்களையும் தன்னகத்தே கொண்ட தனிப்பெரும் கருவூலமாகத் திகழ்கிறது. சுவடிகளில் இடம் பெற்றுள்ள அரிய நூல்களை இந்நூலகம் பதிப்பித்து வெளியிடுகின்ற அரும் பணியையும் தொடர்ந்து ஆற்றிவருகின்றது.

இவ்வரும்பணியின் தொடர்ச்சியாகத் தற்பொழுது "பொன்னர் சங்கர் அம்மானை" என்னும் நூலைச் சரசுவதி மகால் நூலகம் ஓலைச் சுவடியிலிருந்து பதிப்பித்து வெளியிடுகின்றது. இந்நூல் இந்நூலகத் தமிழ்த் துறையில் இடம் பெற்றுள்ள 1701 எனும் எண்ணிட்ட சுவடியை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப் பெற்றதாகும்.

கொங்குநாட்டில் வீரத்தலைவர்களாக விளங்கி தெய்வ நிலை பெற்றவர்களாகக் கருதப்படும் பொன்னர்—சங்கர் என்பவர்தம் வரலாற்றை எளிய இனிய அம்மானை இலக்கியமாக இந்நூல் படைத்தளித்துள்ளது. நாட்டுப்புற இலக்கிய நடை நலத்தோடும் அழகிய உவமை, பழமொழிகள் இடம்பெறும் கவிநயத்தோடும் இந்நூல் திகழுகின்றது.

இவ்வரிய இலக்கியத்தை ஓலைச்சுவடியிலிருந்து சிறப்பான வகையில் நூலாகப் பதிப்பித்துள்ள இந்நூலகத் தமிழ்ப் பண்டிதர் திருமதி ச. திலகம் அவர்களுக்கு எனது பாராட்டுகள்.

இந்நூலுக்கு அடிப்படையாக அமைந்த ஓலைச் சுவடியை இந்நூலகத்திற்கு அன்பளிப்பாக வழங்கிய

தாளியாபட்டி திரு. வை. பாலார் கவுண்டர் அவர்களுக்கும் இந்நூல் வெளியீட்டுக்கான நிதியுதவியை நல்கிய மைய அரசுக்கும், நூலின் கையெழுத்துப் பிரதியை நுண்ணாய்வு செய்து வெளியிடப் பரிந்துரைத்த தமிழ்ப் பல்கலைக் கழக இலக்கியத்துறைப் பேராசிரியர் முனைவர் கு. வெ. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும் என்னுடைய நன்றியினை உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவன செய்துள்ள நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், நூலை நன்கு அச்சிட்டளித்த நூலக அச்சகப் பணியாளர்களுக்கும், நூல் வெளிவரத் துணை நின்ற ஏனையோர்க்கும் எனது பாராட்டுகள்.

இந்நூல் இலக்கிய அன்பர்களின் நல்வரவேற்பைப் பெறும் என நம்புகின்றேன்.

முனைவர் **மூ. இராசாராம்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,

19—3—2000.

# பதிப்புரை

உலகப்புகழ் பெற்ற பழம்பெரும் நூல் நிலையங்களில் ஒன்றாக விளங்கும் தஞ்சை சரசுவதி மகால் நூலகம் பல மொழிகளில் அமைந்த ஆயிரக்கணக்கான பழஞ்சுவடிகளையும், கையெழுத்துப்படிகளையும் கொண்டு விளங்குகின்றது. மத்திய மாநில அரசுகளின் பராமரிப்பில், ஆதரவில் நூலகத்தில் உள்ள பழஞ் சுவடிகளில் உள்ள பல்வேறு துறை நூல்களை இன்று அச்சு உருவில் நூலாக வெளிப்படுத்திவருகின்றது. அவற்றுள் ஒன்றாக அமைந்துள்ள "பொன்னர்—சங்கர் அம்மானை" என்பதே இங்கு நூலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

பொன்னர் சங்கர் அம்மானை நாட்டுப்பாடல் வகையுள் உடுக்கு முதலிய வற்றை வாசித்து அந்த இசையோடு பாடப்படும் கலிப்பா வகையில் அமைந் துள்ள பாடல், நாட்டுப்புறங்களில் கல்வி கேள்விகளில் முதிராத மக்கள் வாழும் சிற்றூர்களில் வல்லவர்கள் பாடிப்பரவசமூட்டும் நூல்களில் ஒன்றாக இது அமைந்துள்ளது. இந்நூல் 4097 அடிகளைக்கொண்டு விளங்குகின்றது. இந் நூலின் வரலாற்றைப் பற்றிய விபரங்கள் என்று பார்க்கும்போது இந்நூலின் இறுதியில் காணப்படும் குறிப்பைத்தவிர நூலில் வேறு எங்கும் கூறப்பட வில்லை. மேலும் இக்குறிப்பு படியெடுத்தெழுதிய வரலாற்றைச் சுருக்கமாகத் தெரிவிக்கிறதேயன்றி, இந்நூலை இயற்றியவர் பெயரோ இயற்றிய காலமோ பிற விபரங்களோ தெரியவில்லை.

விரோதிகிருது வருடம் மார்கழி மாதம் திருச்சிராப்பள்ளி மாவட்டம் கருவூர்த் தாலுகா வெள்ளியணைக் கிராமத்தைச் சேர்ந்த தாளியாப்பட்டியிலிருந்த நாச்சியப்பக்கவுண்டன் மகன் வண்டிக்காரன் என்கிற காளியப்பக்கவுண்டனுக்கு ஸ்ரீஹரிபுண்ணிய குமாரனாகிய மாரப்பக்கவுண்டனால் படி எழுதி முடிக்கப் பட்டது என்று தெரிகிறது.

இந்நூலின் கருப்பொருள் கொங்குநாட்டுப்பகுதிகளில் வாழ்ந்த கொங்கு வேளாளர் மரபில் தோன்றி நெல்லிவளநாட்டில் சோழமன்னனால் நாடாட்சி உரிமை வழங்கப்பெற்றுச் சிறப்பாக ஆண்டு வாழ்ந்து இறுதியில் தெய்வங்களாக ஆகிய பொன்னர்-சங்கர் நல்லதங்காள் என்னும் புகழ்பெற்ற மூவர் வரலாற்றை

விளக்குவதாகும். நல்லதங்காள் என்னும் தெய்வீகம் பெற்ற மங்கையின் முன் பிறந்தவர்களாகிய பொன்னர்—சங்கர் இருவரையும் அவள் அண்ணன்மார் என்றழைத்த வழக்காறு பற்றி அண்ணன்மார்கதை, அண்ணன்மார் சுவாமி கதை என்று பல பெயர்களில் இந்நூல் வழங்கலாயிற்று.

நாட்டுப்புற மக்கள் தங்கள் முன்னோர்களில் தெய்வாம்சம் பெற்று, அற்புதங்களை விளைத்தவர்களைக் குலதெய்வமாகக் கொண்டாடும் வழக்கு சரித்திர காலந்தொடங்கி நடைபெற்று வருவதோடு காத்தவராயன், காளியம்மன், அங்காளம்மன் முதலாகக் கிராமமக்கள் பூசிக்கப்படும் தெய்வங்களைச் சிறு தெய்வங்கள், குலதெய்வங்கள் என்னும் வழக்கு இற்றைநாள்வரை உள்ளது. அம்முறையில் கொங்குவேளாளர் தம் குலதெய்வமாக, வழிபடுதெய்வமாக விளங்குபவர்களே அண்ணன்மார் சுவாமிகள் ஆவர்.

## பொன்னர் சங்கர் கதைகூறும் நூல்கள்

அண்ணன்மார் சுவாமிகள் தெய்வாம்சம் பெற்ற வரலாறு பற்றிப் பல நூல்கள் வெளிவந்துள்ளன.

இந்நூல்களுள் பதிப்பாசிரியரின் பார்வைக்கு

1 அண்ணன்மார் சுவாமி கதை — பதிப்பாசிரியர் : சக்திக்கனல்.
2 கள்ளழகர் அம்மானை — ஸ்ரீமகள் கம்பெனி வெளியீடு.
3 பொன்னர் சங்கர் — கலைஞர் மு. கருணாநிதி.
4 வளநாடு பொன்னர் சங்கர் வரலாறு — அரு. மருததுரை.
5 வரகுண்ணாப் பெருங்குடிக் கூட்டம் பொன்னர் சங்கர் வரலாறு
   — தொகுப்பு : அ. பழனிசாமி.
6 ஆலாம்பாடி பொருள் தந்த குல வரலாறு
   — ஆசிரியர்: புலவர் செ. இராசு.

ஆகிய நூல்களே கிடைத்தன.

இவற்றுள் முதலிரு நூல்களும் செய்யுள் வடிவில் அமைந்து பொன்னர் சங்கர் வரலாற்றை எடுத்துரைக்கும் இலக்கியங்களாகும். இவைபோன்ற பொன்னர் சங்கர் வரலாறு கூறும் படைப்புகளின் அடிப்படையில் அழகிய புதினமாக உரைநடையில் தீட்டப்பெற்றதே மாண்புமிகு கலைஞர் அவர்களின் 'பொன்னர் சங்கர்' என்னும் நூலாகும். அரு. மருததுரையின் 'வளநாடு பொன்னர் சங்கர் வரலாறு' என்னும் நூல் உரைநடையில் பொன்னர் சங்கர்

வரலாற்றைக் கூறுவதாகும். பிற இரு நூல்களும் பொன்னர் சங்கர் வரலாற்றையும், வரலாற்றுத் தொடர்புடைய பல தகவல்களையும் தொகுத்தும், வகுத்தும் ஆய்வுப் போக்கிலும் கூறும் நூல்களாகும்.

## அந்நூல்கள் பற்றிய விபரம்

### பொன்னர் சங்கர்

இந்நூல் பரவலாக வழங்கிவரும் பொன்னர் சங்கர் கதைகளின் அடிப்படையில் — அழகு தமிழ் நடையில் மாண்புமிகு **தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்** அவர்களால் எழுதப்பெற்ற பொன்னர் சங்கர் கதை கூறும் புதினமாகும்.

இந்நூலில், நமது மாண்புமிகு முதல்வர் அவர்கள் "புராணிக பாணியில் பாடப்பட்டு மக்களிடையே புழக்கத்திற்கு வந்த ஒரு நாட்டுப்புறக் கதையில் பொதிந்துள்ள வரலாற்றுப் பெட்டகத்தைத் தேடியெடுத்து அதற்கோர் வடிவமைத்தேன், அதுதான், 'பொன்னர் சங்கர்' எனும் இந்த நூல்." (முகவுரை) எனக் கூறியுள்ளார்.

### அண்ணன்மார் சுவாமி கதை

ஏட்டுப்பிரதியில் செய்யுள் வடிவில் அமைந்திருந்த இந்நூலினைப் பதிப்பித்து வழங்கியவர் சக்திக்கனல் ஆவார். இவர் தமது நூலில், "இது ஒரு நாடோடி இலக்கியம். 'குன்றுடையான் கதை' என்று அழைக்கப்படும் இக்கதை கர்ண பரம்பரையாக வருவது. பாடகன் உடுக்கையடித்துக்கொண்டு இதைப் பாடுவதும், இதைக் கேட்டு மக்கள் நெஞ்சுருகி நிற்பதும் இந்த இலக்கியத்தின் மீது கொங்கு நாட்டு மக்களுக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுவதுடன் கொங்கு நாட்டு மண்ணில் இன்றும் வழக்கமாக இருந்து வருகின்றது" (பக். 6) எனக் கூறியுள்ளார்.

### வரகுண்ணாப் பெருங்குடிக் கூட்டம்-பொன்னர் சங்கர் வரலாறு

இந்நூலின் இவ்வாசிரியர் அ. பழனிசாமி அவர்கள் வேட்டம்பாடி வரகுண்ணாப் பெருங்குடிக் கூட்டத்தார்களின் குடிபாட்டுக் கோயிலின் காணி உரிமைகள் பற்றியும், அண்ணர்மார்களின் வரலாற்றையும் தொகுத்து அளித்துள்ளார்.

### வளநாடு பொன்னர் சங்கர் வரலாறு

இந்நூலின் ஆசிரியர் அரு. மருததுரை அவர்கள் ஆவார். இவர் பொன்னர்சங்கர் வரலாற்றை உரைநடையில் கூறும் தமது நூல் பற்றி "இந்நூல் நாட்டுப்புற மக்களிடையே உடுக்கடிக் கதைப் பாடலாகவும், நாடகமாகவும் வாய்மொழியாகவும் வழங்கும் வடிவங்களை அடிப்படையாகக்கொண்டு எழுதப் பெற்றுள்ளது. இறைவனின் கட்டளையின்படி மானுடர்களாய் மண்ணில் பிறந்து மக்களின் துயர்களைத் தீர்த்துக் கொடியவர்களைக் கருவறுத்தவர்களின் தெய்வக் கதை பொன்னர்—சங்கர் வரலாறாகும். மண்ணில் மக்கள் பிறருக்காக எவ்வாறு வாழவேண்டும் என்பதைக் கற்பிக்கும் மெய்வரலாறு. இவ்வரலாறு வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து மடிந்த வைரங்கள் வானுறைந்து தெய்வமாக விளங்குவதை விளக்குகிறது. இவ்வரலாற்றைப் படிப்பதினாலும் படிக்கக் கேட்பதினாலும் விழாவினை, நாடகத்தைக் காண்பதினாலும் அளவற்ற நன்மைகள் கூடும் என்பது இன்றுவரை நாட்டுப்புற மக்களிடையே நிலவும் அசைக்கமுடியாத நம்பிக்கை அவர்களுக்கு உதவும் வகையில் இந்நூல் மக்கள் எளிமையாக அனைவரும் வளநாடு பொன்னர்—சங்கர் வரலாற்றைப் படித்துப் புரிந்து பயன்பெற வேண்டும் என்ற எண்ணத்தில் எழுதப் பெற்றது" (முன்னுரை பக்,1) எனக் குறிப்பிட்டுள்ளார்.

### ஆலாம்பாடி பொருள்தந்த குல வரலாறு

இந்நூலின் ஆசிரியர் புலவர் செ. இராசு அவர்களாவார். இந்நூலாசிரியர் தமது நூலில் "காங்கேய நாட்டு ஆலாம்பாடி தொன்மையானதொரு பேரூர். அவ்வூரைக் காணியாகக் கொண்ட பொருள் தந்த குலத்துப் பெருமக்கள் அங்குச் சிறப்புடன் எழுந்தருளி அடியார்க்குக் கண்கண்ட கடவுளாக விளங்கும் அண்ணன்மார் சுவாமிகளைத் தம் குலதெய்வமாகக் கொண்டு வணங்கி வருகின்றனர்" (ஆசிரியர் உரை பக். 1) என்று குறிப்பிட்டு நூலில் அண்ணன்மார் வரலாற்றையும் தொடர்புடைய செய்திகளையும் எடுத்துரைத்துள்ளார்.

### கள்ளழகர் அம்மானை

"பொன்னழகரென்னும் கள்ளழகர் அம்மானை" என்னும் பெயரில் ஸ்ரீமகள் கம்பெனியால் வெளியிடப்பட்டுள்ள இந்நூலும் பொன்னர்—சங்கர் கதையையே கூறுவதாகும். இந்நூல் செய்யுள் வடிவில் அம்மானை இலக்கியமாக அமைந்துள்ளது.

## சுவடிபற்றிய வரலாறு

இந்நூலுக்கான சுவடியினைச் (சுவடி எண். 1701) சரசுவதி மகால் நூலகத்திற்கு அன்பளிப்பாக வழங்கியுதவியவர் திரு. வை. பாலார் கவுண்டர் (தாளியாப்பட்டி, வெள்ளியணை அஞ்சல்.) கரூர் வட்டம், திருச்சி மாவட்டம் என்பவராவார்.

சுவடியின் இறுதியில் "ஸ்ரீராமசெயம். சரசுவதி துணை உண்டாக வேண்டியது" எனத் தொடங்கிச் சுவடி எழுதியவர் பற்றிய குறிப்பு மட்டுமே இடம்பெற்றுள்ளது. நூலின் ஆசிரியர் பற்றிய விபரம் கூறப்படவில்லை. சுவடியின் நீள, அகலங்கள் முறையே 44 செ. மீ., 3. 3 செ. மீ. என்பதாகும்.

## நூலின் சிறப்புகள்

இவ்வம்மானையின் சில சிறப்புகளையும், குறிப்பிடத்தக்க சில செய்திகளையும் இனிக் காணலாம்.

குன்றுடையான் நாடான நெல்லிவளநாட்டை ஆசிரியர் கூறுமிடத்தில்,

"கட்டுங் கலங்காணும் கதிரொழக்கு நெல்காணும்
முத்து விளைஞ்சிருக்கும் முழுச்சம்பாப் போரேறும்
ஆனைகட்டத் தூர்விளையும் அழகுபொன்னின் வளநாடு
நெல்லு விளைஞ்சிருக்கும் நேருசம்பாப் போரேறும்
அஞ்சுக்கு ரெண்டு அரமணைக்கு மேல்வாரம்
வாரம் விடுவாரும் வயல்கணக்குப் பார்ப்பாரும்
நெல்லி வளநாட்டில் நெல்மிகுதி கோனாட்டில்
அப்படியாக் கொத்த அழகுதிருப் பட்டணத்தில்
காராளர் வீதியென்றால் கணக்கு வழக்குமில்லை
வெள்ளாளர் வீதியென்றால் வெகுதூர மாயிருக்கும்
செட்டியார்கள் தன்தெருவும் சேணியர்கள் தன்தெருவும்
பாப்பா ரகமும் பருவீதி ஆயிரமாம்
பலப்பட்டி டைத்தெருவும் பந்திபந்தி யாயிருக்கும்"

என்று அழகுற வருணித்துக் கூறியுள்ளார்.

அருக்காணி பந்து விளையாடும் இடத்தை ஆசிரியர் பின்வருமாறு மிக அழகாக வருணிக்கின்றார்.

" தங்காள் புரவியர்க்குத் தங்கமணி மேடைகளும்
ஓராந்தளமாம் புரவியர்க்கு ஓலைப்பூச் சாவடியாம்
ரெண்டாந் தளமாம் தங்கச் சிங்காதனமாம்
மூணாந் தளமாம் புரவியர்க்கு முத்துமணிச் சாவடியாம்
நாலாந் தளமாம் அரியபுரவியர்க்கு அலங்கார நாகரெத்தினச் சாவடி
அஞ்சாந் தளமாம் புரவியர்க்குஅலங்கார மேடைகளாம் [யாம்
ஆராந்தளமாம் புரவியர்க்கு அழகுமணிக் கோபுரமாம்
ஏழாந்தளமாம் புரவியர்க்கு இலகுமணி மண்டபமாம்
எட்டாந்தளமாம் புரவியர்க்கு ஏறும்பேறும் மண்டபமாம்
ஒன்பதாந் தளமாம் புரவியர்க்கு உசந்ததொரு மேடைகளாம்
பத்தாந்தளமாம் அரியபுரவியர்க்குப் பாம்பேறு மண்டபமாம் "

என்றும்,

" தூணுக்குத் தூணு சோதிவிடுஞ் சித்திரங்கள்
பத்தாம் பிறையைப் பதித்துவைத்த பாவினைபோல்
சாய்ந்து விளையாடச் சாய்பலகை பொன்னாலே
உத்திரமும் போதிகையும் ஒக்கநிழல் காட்டத்
தங்காள் புரவியர்க்குத் தங்கச்சித்திரமும் பொன்னாலே
அன்னமுந் தாராவும் அருகில்வந்து வார்த்தைசொல்ல
மயிலும் குயிலுடனே புரவியர்க்கு மருவிவிளையாட
பஞ்சவர்ண நற்கிளியும் புரவியர்க்குப் பாங்காக வார்த்தைசொல்ல
குங்கும நாக்கிளியும் புரவியரேகூடி விளையாடி
தாதியரும் மூப்பியரும் தனக்கேத்த பாங்கியரும்
கொண்ட லடித்துக் கூடிவிளை யாடிவர "

என்றும் சிறப்பித்துக் கூறுதல் கற்போர் மனங்கவரும் வண்ணம் அமைந்துள்ளன.

தங்கை கனவில் கண்ட தீய சகுனங்களை ஆசிரியர்,

" மேனாட்டு வேடுதளம் வெகுதளம் வரவுங்கண்டேன்
தலையூரு காளிமகன் சதிசெய்ய வேநினைந்து
வேடுதளங் கூடியங்கே மெய்யாய்ப் பகைநினைந்து
நாடுமெத்தக் கூடியங்கே அண்ணாவி நல்ல பகைநினைந்து
செம்பகொல்லாசாரி திருக்கொளத்துத் தட்டானே

மரமரக்கால் கொண்டுவந்து நம்மமாளிகையில் தானுவைச்சுப்
பொன்மரக்காலென்று சொல்லிப் போராடக் கண்டேன் நான்

*    *    *    *    *

நம்ம அரசாளு மண்டபமும் அடியோட சாயக்கண்டேன்
நீங்கள் கச்சைக்கட்டும் சாவடியுங் கரையானரிக்கக் கண்டேன்
நீங்கள் சிலம்பம் பொருதும் சித்திரச் சாவடியும்
அலறி யிடிந்துவிழ ஆதேசங் கண்டேன் நான்
நம்ம தலைக்கடையில் உறைக்கிணறு தகர்ந்து விழக்கண்டேன் நான்
நம்ம முத்தத்தில் முருங்கைமரம் முறிந்து விழக்கண்டேன் நான் "

என்று கூறும் பகுதி நயமுற அமைந்துள்ளது.

தட்டான் செம்பகொல்லன் தன் தாயின் பேச்சைக் கேட்காமல், அத்து மீறிச் சென்றபொழுது, போற தடந்தனிலே பொல்லாத நிமித்தங்கள் தோன்றின என்பதை,

" காகம் வலமாகக் கருக்குருவி தானிடமாக
கெருடன் வலமாக கௌட்டோரி முன்வர
வால்நீண்ட கரிக்குருவி வந்து வலமாக
நரையான் வலமாக நல்போத்து தானிடமாக
ஓரிகுறுக்கைவர ஒற்றைப்பார்ப்பான் எதிர்வாறான்
கருநாயு மோடிவந்து அவன்கண்ணு முன்பாகக்
கால்தூக்கி அவன்கண்ணு முன்பாக
எண்ணை தலையிட்டு எதுக்கவரக் கண்டாளே "

என்று கூறும்பகுதி வழிவழிவந்த மக்களின் சகுனங்குறித்த நம்பிக்கைகளை எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது.

ஆசிரியர் பொன்னர் சங்கரின் திருமணக் கோலத்தையும், மண்டபத்தையும் வருணிக்கும்பொழுது,

" நால்சதிரமாக நன்றாகத் திண்ணையிட்டுப்
பவளக்கால் நாட்டிப் பந்தலது தான்போட்டு
ஆச்சா மரம்பிளந்து அடிஅளந்து பந்தலிட்டுத்
தேக்கமரம் பிளந்து மாமமார்ப் பந்தலிட்டு
பந்தலிட்டு மணவறையில் பட்டுமேல் பட்டுகட்டி
பட்டுகள் மேலே பருமுத்துத் தொங்கல்விட்டு

மேல்கட்டுக் கட்டி விதவிதமாய் அலங்கரித்து
அம்மி வலமாக அரசாணி முன்னாகப்
பிரம்பு வலமாகப் பேய்க்கரும்பு முன்னாகச்
சாலுங் கரகமும் தண்ணீரும் முன்னாக
முளைப்பாரி போட்டு முன்பாகப் பந்தலிட்டு
ஓமம் வலித்து உத்தமர்கள் வேதியர்கள்
தேங்கா யொடைத்துத் திறமாக முன்னேவைத்து
ஓமம் புகை யிலுற்றரிச்ச மங்கிலியம்
அஞ்ஞூறு பாப்பாரும் தொட்டிட்ட மங்கிலியம்
நல்லவர்கள் பெரியோர்கள் நாதாக்கள் தானறிய

* * * * *

நாங்கள் ஈழத்து மஞ்சள்தேக மெங்குமே குளித்து
சருவாபரணமுடன் நாங்கள் தகதகென்று நின்றாலும்
இழையாயிரம் பொன்பெத்த இந்திர நீலப்பட்டுடுத்திக்
கரிக்குருவி வாலதுபோல் கடைக்கண்ணுக்கு மையெழுதி
நெத்தியிலே நீறணிந்து நேராகப் பொட்டுமிட்டு
நாங்கள் அரிபிளவும் வெத்திலையும் அள்ளியே கைபிடித்துக்
காசுண்டைக் கற்பூரம் கடல்கரையில் சுண்ணாம்பும்
அள்ளி எடுத்து அலர்ந்த மலர்க்கைப்பிடித்து

என்று அழகுபடச் சித்திரிக்கின்றார்.

அருக்காணி, ஆதிசிவன், மாயவரைத் தானினைந்து புலம்பினாள். அப்பொழுது பூமியில் ஏற்பட்ட சுழற்சிகளைக் கூறும்பொழுது,

"ஆங்கார மிட்டமுகத் தேவி அக்னியாய் மூண்டிடுமாம்,
அரமனையும் சாவடியும் அனல்பத்தி வெந்திடுமாம்
மாடமுங் கூடமும் மண்டபங்கள் சாவடியும்
அரக்குத் திருமாளிகையும் அக்கினிகள் மூண்டிடுமாம்
கொத்தவர்கள் அரமனையும் கொழுந்து விட்டெரிந்திடுமாம்
வெந்து தணிந்திடுமாம் வெண்தணலு நூந்திடுமாம்
நல்லதங்காளுத்தமியும் நாயகியாளப்போது
ஊசிபோல் மின்னல் மின்னி ஓங்கியே காலிறங்கிப்
பாசிபோல் படர்ந்தமேகம் புலபலென்று மழைபொழிய
வெந்து அரமனையும் வெந்தணலும் நூந்திடுமாம்."

என்று அடுக்கியுரைக்கும்பகுதி கவிச்சுவை கூயுழத் திகழ்கிறது.

பெரியக்காள் தவசிருக்கும் கோலத்தை ஆசிரியர் கூறுமிடத்து,

" அருமறியாமல் பெரியக்காள் அருந்தவசு பண்ணுகிறாள்
மாலிடச் சத்தமங்கே மனுசர் சத்தங் கேளாமல்
உரல்சத்தங் கேளாமல் பெரியக்காள் உத்தமியாள் தவசிருந்தாள்
சடைமுடியுடன் பெரியக்காள் சன்னாசி மார்க்கமதாய்ப்
போற்றும் புலித்தோலும் பெரியக்காளுக்குப் புள்ளிமானாசனமும்
மேலெல்லாம் வெண்ணீறு மேனியெல்லாம் உத்திராச்சம்
அங்கமெல்லாம் வெண்ணீறு ஆபரணம் உத்திராச்சம்
அய்ந்தலை நாகமங்கே பெரியக்காளுக்கு அரவங் குடைபிடிக்க
நாகங் குடைபிடிக்க பெரியக்காளுக்கு நற்பாம்புத் தாலாட்ட
வனத்திலுள்ள மிருகமெல்லாம் பெரியக்காளுக்கு வந்துபணி ஏவல்
செய்ய "

என்று வருணிக்கின்றார்.

## இந்நூலில் இடம்பெற்றுள்ள சகுனங்கள் பற்றிய குறிப்புகள் வருமாறு

| | | அடி எண் |
|---|---|---|
| 1 | காகம் வலமாகக் கரிக்குருவி இடமாக வரல் | 617 |
| 2 | கெருடன் வலமாக கெளட்டோரி முன்வரல் | 618 |
| 3 | வால் நீண்ட கரிக்குருவி வலமாக வரல் | 619 |
| 4 | நரையான் வலமாக நல்போத்து இடமாக வரல் | 620 |
| 5 | ஓரி குறுக்கைவர, ஒற்றைப்பாப்பான் எதிர் வரல் | 621 |
| 6 | நாய் கால் தூக்கி ஊளையிடல் | 622, 623 |
| 7 | எண்ணெய்த் தலையுடன் எதிர் வரல் | 624 |

## இந்நூலில் சில தொடர்கள், அடிகள் மீண்டும் மீண்டும் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

1 மூக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
அடி எண்: *103, 179, 3401, 3567*

2 அம்பலத்துக் காணுரெண்டு அடுக்கிளைக்குப் பெண்ணுமென்றும்
அடி எண்: *186, 195*

3 அந்த மொழிகேட்டு ஆனதொரு குன்னுடையான்
அடி எண்: *176, 188, 197*

4 உமிக்குத்திக் கடமைகட்டும் உத்தமர்கள் சிவசோழனுக்கு
அடி எண்: *646, 676, 725*

5 அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
அடி எண்: 243, 267, 1048, 1070, 2066, 2374, 2867

6 நான்கண்ட ஆதேசம் அண்ணாவி நமக்கெழுத்தோ பொல்லாது
அடி எண்: 354, 387

7 நான் பத்தினியாள் கண்டகினா பழுதொருநாள் போகாது
அடி எண்: 350, 388

8 நான் உத்தமியாள் கண்டகினா அண்ணாவி
ஒரு நாளும் பொய்யாது
அடி எண்: 351, 389

9 நெல்லி வளநாடு நேர்சூழ்ந்த கோனாடு
அடி எண்: 421, 467, 1063, 1124, 3933

10 சுத்தாலைப் பட்டணமுஞ் சூழ்ந்தநெல்லி வளநாட்டில்
அடி எண்: 433, 966, 1125

11 செம்பகொல்லன் ஆசாரி சிறிபே தான்பார்த்து
அடி எண்: 497, 516

12 சின்னண்ணான் வாள்வீரர் சிறுபுலி குமாரசங்கர்
அடி எண்: 1023, 1375, 2358, 2520, 2608, 3522, 3560

13 நாகங் குடைபிடிக்க நற்பாம்புத் தாலாட்ட
அடி எண்: 2544, 2597

14 அய்ந்தலை நாகம் புரவியர்க்கு அரவங் குடைபிடிக்க
அடி எண்: 2598, 2662, 2746

15 நாகமீன்ற கன்னியரே நல்லகன்னி மாதாவே
அடி எண்: 2566, 2756

16 அஞ்சாதே அஞ்சாதே தங்கையரே ஆனதுணை வாறமடி
அடி எண்: 2681, 2836

## இந்நூலில் இடம்பெற்றுள்ள பழமொழிகளில் குறிப்பிடத்தக்கன வருமாறு:

1 காசிக்குப் போனாலும் கம்மாளனாகாது
அடி எண்: 773

2 கொக்குத் திரளிலே ராசாளி பாய்ந்தாற்போல்
அடி எண்: 1516

3 ஓடுகிற தண்ணீயிலே ஒரு கோரை நின்றாப் போல
அடி எண்: 2500

4 அம்பலத்துக் காணுரெண்டு அடுக்கிளைக்கும் பெண்ணுமென்றும்
அடி எண்: 186

5 பிள்ளையில்லா வீடு பிசாசிருக்கும் வீடல்லவோ
அடி எண்: 75

## இந்நூலில் இடம்பெற்றுள்ள அடுக்குத்தொடர்கள்

இந்நூலின் நடையமைதி சிறக்க ஆங்காங்கு பயிலும் அடுக்குத் தொடர்கள் துணை செய்கின்றன.

கும்புகும்பு (அடி எண்: 2583)
அஞ்சாதே அஞ்சாதே (2681, 2836)
ஆண்டவரே ஆண்டவரே (697)
வெட்டி வெட்டி (1523)
கடகடன்று (3934)

முதலிய பல அடுக்குத்தொடர்கள் நூலில் இடம்பெற்றுள்ளன.

## பேச்சுவழக்குச் சொற்கள்

நாட்டுப்புற இலக்கிய நடையமைதியோடு திகழும் இந்நூலில் பேச்சு வழக்குச் சொற்கள் மிகுதியான அளவில் பயிலுகின்றன. அவற்றுள் சில வருமாறு:

விருமா, வாறதுக்கு, சன்னாசி, அரமணை, வம்முஷம், கன்னியாதானம், கலியாணம், அப்பனை, குளுந்த, பிலமுடையான், எதுத்தவர்கள், பொன்னருட, சங்கருட, பொன்னரண்டே, போறதுக்கு, விழுகுதல், சலவம், குத்தமில்லை, இத்தினை, வேதினை, வாங்கஎன்றேன், எறந்த,(இறந்த) அதுந்து, எதுத்து, பாத்தார், நிக்குறா.

## உவமைகள்

இலக்கிய வனப்புறு இந்நூலில் அழகிய பல உவமைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில வருமாறு:

| | | |
|---|---|---|
| 1 | இனம் பிரிந்த மானது போல் | 2441 |
| 2 | மயில் போல நடை நடந்து | 2581 |
| 3 | அன்னம் போல நடை நடந்து | 2672 |
| 4 | குயில்போலே தான் புலம்பி மயில்போல வருகிறாள் | 2711 |
| 5 | மிருண்ட சிங்கம் போல | 2935 |
| 6 | எள்ளுக்குள் எண்ணெயிருந்த கதை போலே | 3271 |

### அம்மானை எனும் ஈற்றுச்சீர் இடம்பெறல்

பொதுவாக அம்மானைக் கதைப்பாடல்களில் குறிப்பிட்ட அடி இடை வெளிக்குப் பிறகு ஆங்காங்கு அடிகளின் ஈற்றுச்சீர்களாக அம்மானை எனும் சொல் அமைந்து காணப்படும். இப்பொதுமரபுக்கு மாறாக இவ்வம்மானைக் கதைப்பாடல் நூலில் ஒரே ஓர் இடத்தில் மட்டும் "சந்தோஷ மாகத் தானடந் தார் அம்மானை" (அடி எண்: 210) என்னும் அடியில் "அம்மானை" எனும் சீர் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### நன்றியுரை

இந்நூலகத் தமிழ்த்துறையில் இடம்பெற்றுள்ள "பொன்னர் சங்கர் அம்மானை" எனும் சுவடியை நான் பதிப்பிக்க அனுமதியளித்த மேனாள் தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் நூலக இயக்குநர் அவர்களுக்கும், இந்நூலின் கையெழுத்துப் பிரதியை நுண்ணாய்வு செய்து வெளியிடப் பரிந் துரைத்த தமிழ்ப்பல்கலைக்கழக இலக்கியத்துறைப் பேராசிரியர் முனைவர் கு. வெ. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், இந்நூலுக்கு வெளியீட்டாளர் முகவுரை வழங்கிச் சிறப்பித்துள்ள பெருமதிப்பிற்குரிய தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவரும் நூலக இயக்குநருமான உயர்திரு முனைவர் மூ. இராசாராம், இ. ஆ. ப., அவர்களுக்கும், இந்நூல் நன்முறையில்வெளிவர ஆவன செய்துள்ள மதிப்பிற்குரிய நூலக நிருவாக அலுவலர் திருமிகு சாமி. சிவஞானம், எம். ஏ., அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் மற்றும் நூலகர் திரு அ. பஞ்சநாதன், எம். ஏ , எம். எல். ஐ. எஸ்., அவர்களுக்கும், நூலைச் செப்பமுற அச்சிட்ட நூலக அச்சகப் பணியாளர்களுக்கும், இந்நூல் வெளிவர உதவிய ஏனையோருக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியினை உரித்தாக்கி மகிழ்கிறேன்.

### நிறைவுரை

இவ்வாறு "பொன்னர் சங்கர் அம்மானை" எனும் இந்நூல், பொன்னர் சங்கர் எனும் வீரபுருடர்களின் வரலாற்றை—தெய்வமாகி நிற்கும் அவர்களின் சிறப்பை அழகிய வருணனைச் சிறப்போடும் உவமை நயத்தோடும் பழமொழி கள், அடுக்குத் தொடர்கள், பேச்சுவழக்குச் சொற்கள், மீண்டும் மீண்டும் இடம்பெறும் தொடராட்சிகள் ஆகியவற்றைக்கொண்ட தனிசிறந்த நடை யமைதியோடும் இனிது எடுத்துரைக்கின்றது. விழுமிய கதைப்பொருளை எளியநடையில் அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் இந்நூல் கூறி யுள்ளமை தனிச்சிறப்புடையதாகும்.

தஞ்சாவூர்,
11—3—2000.

ச. திலகம்,
தமிழ்ப்பண்டிதர்,

# தமிழ்நாட்டில் அண்ணன்மார் சுவாமி எனப்படும் பொன்னர் - சங்கர் கோயில்கள்



ஒரு புதிய கோயில் கட்டுவதைக் காட்டிலும் பழைய கோயிலைத் திருப்பணி செய்வது மிகவும் புண்ணியம் தரும் செயலாகும். அறத்தைப் புதியதாகச் செய்வதைக் காட்டிலும் முன்னோர்கள் செய்த அறங்களைப் பேணிப் பாதுகாப்பதே சிறந்தது என்று அறநூல்கள் கூறுகின்றன. பழைய கோயிலின் சிதைந்த பகுதிகளைச் சரிசெய்து புதியதாக அமைப்பதை

"கல்லினால் அமைத்த பேர்கள்
கைலை விட்டு அகலார் நாமே"

என்று ஒரு பழம் பாடலும் கூறுகின்றது.

அண்ணன்மார்கள் தெய்வாம்சம் பெற்ற செய்தியை அறிந்து சோழ அரசன் எழுவக்காரியன் என்ற தபசியிடம் பொன்னர்—சங்கர், தங்காள் அத்தை பிள்ளைகள். விரமலை சாம்புவான் ஆகியவர்களுக்குக் கோயில் கட்டிப் பூசை செய்யப் பொன்னும், பொருளும் கொடுத்து உதவினார்கள். அருள் வாக்கு மூலம் தமிழ்நாட்டில் ஆயிரக்கணக்கான அண்ணன்மார் கோயில்கள் கட்டப்பட்டுச் சிறப்பாகப் பூசை நடத்தி வருகின்றனர். அந்தக் கோயில்கள் பற்றிச் சிறு விளக்கம் இங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அவை தமிழ்நாட்டில் உள்ள அண்ணன்மார் கோயில்களை மூவகைப் படுத்தலாம்.

1 பொதுக்கோயில்கள்
2 சமுதாயக் கோயில்கள்
3 தனிப்பட்ட குடும்ப அல்லது தனிநபர் அண்ணன்மார் கோயில்கள்

என்பவையாகும்.

பின்வரும் அண்ணன்மார் கோயில்கள் குறித்த விரைங்கள் தமிழகத்தில் சாதிப்பிரிவுகள் கடந்த நிலையில் அனைத்து மக்களாலும் அண்ணன்மார் தெய்வங்களாக வழிபடப்பெற்ற உன்னதநிலையினைக் காட்டுகின்றன.

## நாமக்கல் வட்டத்தில் அமைந்துள்ள அண்ணன்மார் கோயில்கள்

### மின்னாம்பள்ளி அண்ணன்மார் கோயில்

சேலம் மாவட்டம்—நாமக்கல் வட்டம் நைனாமலை அருகில் உள்ளது.

### நடந்தை அண்ணன்மார் கோயில்

நாமக்கல் வட்டம் பரமத்தியில் இருந்து திருச்செங்கோடு போகும் சாலையில் வசந்தபுரம் என்னும் கிராமத்திற்கு மேற்கே அமைந்துள்ளது.

### ஏழூர் — தத்தாத்திரிபுரம்அண்ணன்மார்கோயில்

நாமக்கல்—சேலம் சாலையில் புதன் சந்தையிலிருந்து மேற்கே சுமார் 5 கல் தொலைவில் ஏழூர் தத்தாத்திரிபுரம் என்னும் ஊருக்கு வடபால் ஏரிக்குக் கிழ்ப்புறம் உள்ளது.

### பெரியப்பட்டி அண்ணன்மார் கோயில்

நாமக்கல் சந்தைப்பேட்டை புதூரிலிருந்து தெற்கில் சுமார் 2. கி. மீ தூரத்தில் பெரியப்பட்டி கிராமம் உள்ளது.

### தோகைநத்தம் அண்ணன்மார் கோயில்

நாமக்கல் வட்டம் ரெட்டிப்பட்டி, கந்தகிரிக்கும், கூலிப்பட்டிக்கு வடபுறம் தோகைநத்தம் உள்ளது.

### நகப்பாளையம் அண்ணன்மார் கோயில்

நாமக்கல் வட்டம் கபிலர் மலைக்கு வடக்கில் 5 கி. மீ. தூரத்தில் திடுமல் கிராமம் நகப்பாளையம் உள்ளது.

### நஞ்சை இடையார் அனிச்சம்பாளையம் அண்ணன்மார் கோயில்

நாமக்கல் வட்டம் வேலூர் ஈஸ்வரன் கோயிலிலிருந்து காவேரி வடபுறம் கரை ஓரமாகக் கிழக்கே 2 கி. மீ. தூரத்தில் அனிச்சம்பாளையம் உள்ளது.

### கொண்டமநாயக்கன்பட்டி அண்ணன்மார் கேகயில்

நாமக்கல்—சேந்தமங்கலம் சாலையில் மூத்துகாப்பட்டியிலிருந்து மேற்கே 2 கி. மீ. தூரத்தில் கொண்டமநாயக்கன்பட்டி உள்ளது.

### துத்திக்குளம் அண்ணன்மார் கோயில்

நாமக்கல்—சேந்தமங்கலம்—ராசிபுரம் சாலையில் சேந்தமங்கலத்தி லிருந்து வடக்கே 6 கி. மீ. தூரத்தில் உள்ளது.

### திருமலைப்பட்டி அண்ணன்மார் கோயில்

சேலம்—நாமக்கல் சாலையில் கலங்காணி என்ற ஊரிலிருந்து கிழக்கே சுமார் 4 கல் தொலைவில் உள்ளது.

### லக்கபுரம் தேவேந்தர் அண்ணன்மார் கோயில்

நாமக்கல்—சேலம் சாலையில் புதுச்சத்திரத்திலிருந்து மேற்கே 3 கி. மீ. தொலைவில் உள்ளது.

### பாய்ச்சல் பள்ளர் அண்ணன்மார் கோயில்

நாமக்கல்—சேலம் மெயின் ரோட்டில் தாசங்கோடு என்ற நிறுத்தத்திலிருந்து கிழக்கே சுமார் $1\frac{1}{4}$ கி. மீ. தொலைவில் உள்ளது.

### பெரியூர் நல்லக்கன்னியம்மன் செட்டியார் அண்ணன்மார் கோவில்

இக்கோயில் நாமக்கல்லுக்கு மேற்கே தும்மங்குறிச்சி சாலையில் 6 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. 100 வருடங்களுக்கு முன்பு ஆற்றில் இருந்து சிலைகள் கொண்டு வரப்பட்டுக் கோயில் கட்டியுள்ளனர். முழுவதும் பித்தளைச் சிலைகள். 3 வருடத்திற்கு ஒருமுறை ஆடிமாதம் திருவிழா, முப்பூசை நடைபெறும்.

### ஆண்டாபுரம் முத்துராஜா அண்ணன்மார் கோயில்

நாமக்கல்—திருச்சி சாலையில் வளையப்பட்டியிலிருந்து மேற்கே சுமார் 6 கி. மீ. தொலைவில் உள்ளது.

### கரூர் காமாட்சியம்மன் மூப்பனார் அண்ணன்மார் கோயில்

இக்கோயில் வளையப்பட்டி காட்டுப்புத்தூர் சாலையில் சுமார் 8 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## இராசிபுரம் வட்டத்தில் அமைந்துள்ள அண்ணன்மார் கோயில்கள்

### காக்காவேரி விளையன்குலம் கொங்குவேளாளர் அண்ணன்மார்கோயில்

இராசிபுரம்—சேந்தமங்கலம் சாலையில் சிங்களாந்தபுரத்திலிருந்து வடக்கில் 2 கி. மீ. தொலைவில் ஏரிக்குத் தென்கரையில் அமைந்துள்ளது.

### கீரனூர் கண்ணன் கூட்டத்தார் அண்ணன்மார் கோயில்

சேலம் — நாமக்கல் சாலையில் மல்லூரிலிருந்து சாலைக்கு மேல்புறம் 2 கி. மீ. தொலைவில் உள்ளது. இங்கு மாசிமாதம் சிவன்ராத்திரி பச்சபூசையும், அடுத்தநாள் கருப்பனாருக்கு வேல்டுதலைக்காரர்கள் பலிபூசையும் நடத்துவார்கள். வெள்ளி, திங்கள் கிழமைகளில் பூசை நடத்தப்படுகிறது.

### மல்லூர் செக்காரத்தெரு அண்ணன்மார் கோயில்

சேலம்—திருச்சி சாலையில் சேலத்திலிருந்து 7ஆவது மைலில் மல்லூர் உள்ளது.

### அளவாய்ப்பட்டி நாடார் அண்ணன்மார் கோயில்

இராசிபுரம் ஆட்டையாம்பட்டி சாலையில் சுமார் 11 கி. மீ. தூரத்தில் உள்ளது. சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் இலச்சிபாளையம் பங்காளிகளுக்குள் மனஸ்தாபம் ஏற்பட்டுப் பெரியண்ண நாடார் முப்பாட்டன் நல்லைய நாடாருக்கு அருள்வந்து அவரால் இங்குக் கோயில் ஸ்தாபிக்கப்பட்டது. இங்கு 5 வருடங்களுக்கு ஒருமுறை ஆடிமாதம் 18இல் திருவிழா நடைபெறும்.

### வெண்ணந்தூர் சாணார் அண்ணன்மார் கோயில்

சேலம் மாவட்டம் இராசிபுரம் வட்டம் வெண்ணந்தூர் சாணார் குடியிருப்பில் 3 அங்கண ஓட்டு வில்லையில் தங்காள், அண்ணன்மார், சாம்பான் முதலிய எல்லா சாமிகளும் உள்ளன. ஆவணி மாதம் பன்றிக்குத்து, படுகளம் முதலியனவும் மட்டும் நடக்கும்.

### வெண்ணந்தூர் ராக்கியண்ணன் அண்ணன்மார் கோயில்

இந்தக் கோயிலும் நாடார்களுடையது. தாமரை குன்றுடையார், தங்காள், தாதிமார், சாம்பவான் வெங்கலச் சிலைகள் உள்ளன.

### வெண்ணந்தூர் சேரி அண்ணன்மார் கோயில்

இராசிபுரம் ஆட்டையாம்பட்டி சாலையில் வெண்ணந்தூரில் நாகர் பாளித் தெருவில் சேரி அண்ணன்மார் கோயில் அமைந்துள்ளது.

### இராசிபுரம் தெற்கு குலாலர் அண்ணன்மார் கோயில்

இராசிபுரம் கடைவீதிக்குத் தெற்கில், தெற்கு குலாலர் தெருவில் இக்கோயில் அமைந்துள்ளது. இங்குப் பூசை ஆடி 18 மற்றும் அமாவாசை தினங்களில் நடைபெறும்.

### இராசிபுரம் வடக்கு குலாலர் அண்ணன்மார் கோயில்

இராசிபுரம் புதுப்பட்டி சாலையில் உள்ளது. இது சுமார் நாற்பது குலாலர் குடும்பத்தார்களுக்குச் சொந்தமானதாகும்.

### புதுப்பட்டி குலாலர் அண்ணன்மார் கோயில்

இராசிபுரம் புதுப்பட்டி பேருந்து நிலையத்துக்கருகில் அமைந்துள்ளது. இக்கோயிலில் ஆடி 18 மற்றும் அமாவாசை தினங்களில் விசேஷம்.

### ஒடுவங்குறிச்சி குலாலர் அண்ணன்மார் கோயில்

புதுப்பட்டி சீராப்பள்ளியிலிருந்து பேளுக்குறிச்சி சேந்தமங்கலம் போகும் சாலையில் ஒடுவங்குறிச்சி மேல்புறம் அமைந்துள்ளது.

### தொப்பம்பட்டி குலாலர் அண்ணன்மார் கோயில்

R. புதுப்பட்டியிலிருந்து பேளுக்குறிச்சி சேந்தமங்கலம் போகும் வழியில் தொப்பம்பட்டியில் ஊருக்கு மேல்புறம் உள்ளது.

### கொமாரபாளையம் கண்ண குலத்தார் அண்ணன்மார் கோயில்

மல்லூரிலிருந்து கீழ்ப்புறம் 1 கி. மீ தூரத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

### பிள்ளாநல்லூர் நாடார் அண்ணன்மார் கோயில்

இக்கோயில் இராசிபுரம் திருச்செங்கோடு சாலையில் மேற்கே 5 கி. மீ. தொலைவில் இக்கோயில் கிழக்குப்பார்த்தபடி அமைந்துள்ளது.

## பெரியார் மாவட்டம் அண்ணன்மார் கோயில்கள்

பெரியார் மாவட்டம், ஈரோடு வட்டத்தில் சித்தோடு கிராமம், வெள்ளோடு, கண்ணிடையான் பாளையம், நரிக்காட்டு வலசு, விளக்கேத்தி கிராமம், மொடக்குறிச்சி, கஸ்பா பேட்டை முதலிய ஊர்களில் அண்ணன்மார் கோயில்கள் அமைந்துள்ளன.

கோபி வட்டத்தில் கவுந்தபாடி பொம்மன்பட்டி, நாயக்கன்காடு, நஞ்சை தொட்டிப்பாளையம், வெள்ளாபாளையம், முத்துகாளிமடை, பரியூர் நஞ்சை கவுண்டர் பாளையம். பொலவக்காளி பாளையம், கடுக்காம்பாளையம் வஞ்சி மூப்பன்புதூர், பிச்சாண்டம்பாளையம், அய்யம்பாளையம் முதலிய ஊர்களில் அண்ணன்மார் கோயில்கள் அமைந்துள்ளன.

தாராபுரம் வட்டத்தில் செட்டியார்பாளையம், எழுமாத்தூர் முதலிய ஊர்களிலும், காங்கேயம் வட்டத்தில் பூளாம்பரப்பு, ஆலாம்பாடி, பரஞ்சேர்வழி அப்பியபாளையம் ஆகிய ஊர்களிலும் பல்லடம் வட்டத்தில் ராக்கியாம்பட்டி பெருமாநல்லூர், தொரவநல்லூர் முதலிய ஊர்களில் அவிநாசி வட்டத்தில் காசிகவுண்டன்புதூர், காடம்பாடி, சின்னேரிப்பாளையம், பிச்சாண்டம்பாளையம், தேவம்பாளையம், ஆயிகவுண்டம்பாளையம், அம்மாபாளையம், கோயில் பாளையம், தெக்கலூர், கணியம்பூண்டி, முத்துசெட்டிபாளையம், சேயூர், முதலிபாளையம், வடுகபாளையம், பொத்தப்பாளையம், சூரியம்பாளையம் பெருநாதபாளையம், புதுப்பாளையம் முதலிய ஊர்களிலும் அமைந்துள்ளன.

### திருச்சி, தென்னார்க்காடு மாவட்டங்களில் அண்ணன்மார் கோயில்கள்

திருச்சி மாவட்டத்தில் கடம்பங்குறிச்சி, மாரிகவுண்டன்பாளையம் வாங்கல் மாரிகவுண்டன்பாளையம் முதலிய ஊர்களிலும், முசிறி வட்டத்தில் கீழ்சீனிவாசநல்லூர், வேந்தம்பட்டி, ஊர்களிலும்,

தென்ஆர்க்காடு மாவட்டத்தில், கள்ளக்குறிச்சி வட்டத்தில் வீரபயங்கரம் வன்னியர் அண்ணன்மார் கோயிலும் அமைந்துள்ளன.

[மேற்கூறிய விவரங்கள் அனைத்தும் அ. பழனிசாமி, வேட்டாம்பாடி அவர்கள் எழுதிய " தமிழ்நாட்டில் அண்ணன்மார் கோயில்கள் " என்ற நூலிலிருந்து தொகுக்கப்பட்டவையாகும்.]



# கதைச் சுருக்கம்



கொங்குமண்டலத்தில் இயற்கை நலமும் நிலவளமும் நிறைந்த நாடு நெல்லிவள நாடு. அதன் கோட்டங்களில் ஒன்று கோனாடு. கோனாட்டில்செழிப்புடன் விளங்குவது ஆலத்தூர்பட்டினம். அப்பட்டினத்தைக் காராளர் மரபினர் பரம்பரையாக ஆண்டுவருகின்றனர். அப்பரம்பரையில் தோன்றியவர் குன்றுடையான் என்னும் காராளர் இவருடன் பிறந்தவள் ஒருமங்கை நல்லாள் குன்றுடையான் பருவகாலத்தில் தன் உறவின்முறையில் வந்த மங்கை நல்லாள் பெரிய நாச்சியார். இருவருக்கும் சுற்றஞ்சூழ முறைப்படி திருமணம் நடைபெறுகிறது. மனம் ஒத்த இரட்டையராய் இவர்கள் இல்லறமேற்று முறைப்படி வாழ்ந்து வருகின்றனர். மக்கட்பேறு உரிய காலத்தில் வாய்க்கப் பெறாமையால் பல்வேறு தானதருமங்களைச் செய்து இறைவனிடம் மகப்பேறு வேண்டுகின்றனர். பன்னாட்கள் மகப்பேறு வாய்க்காமையால் கணவன் மனைவியிருவரும் கடுந்தவத்தை மேற்கொண்டு கயிலையங்கடவுள் பரமேஸ்வரனையும் வைகுந்தப் பெருமான் மாயவனையும் துதித்து முறையிடுகின்றனர். எல்லாத் தெய்வங்களையும் வரம் வேண்டிப் பாடுகின்றனர். குலதெய்வமாகிய வீரமலை மாதாவையும் வேண்டுகின்றனர்.

இவர்களுடைய உறுதியான தூய தவத்தையும் வேண்டுகோளையும் மெச்சிப் பரமசிவனும் பார்வதியும் மகிழ்ந்து உலகளந்தானாகிய திருமாலோடு வந்து தோன்றிப் பிள்ளை வரமருளுகின்றனர். பரமசிவனும் பார்வதியும் இரண்டு ஆண்மக்களையும் மாயவனார் ஒரு பெண்மகளையும் பெறுவீர்கள் என்று வரந்தருகின்றனர். ஆண் மக்கள் பதினாறு பிராயமும் அளவற்ற பலமும் நற்குணங்களும் பெற்று விளங்குவார்கள். பெண்மகள் அளவற்ற நற்குணவதியாய் விளங்குவாள் என்று வரமருளுகின்றனர்.

இருவரும் மிக்க மனமகிழ்ச்சியோடு அரண்மனைக்கு வந்து சேர்ந்து முறைப்படி ஊரையாண்டுவருகின்றனர். அக்கால கட்டத்தில் குன்றுடையான் உடன்பிறந்தவளாகிய மலைக்கொழுத்தி இறைவனை வேண்டிப் பல கோயில்

களில் வழிபட்டுத் தீர்த்தங்களாடிவந்து சேர்ந்தாள். கணவனுடன் வாழ்ந்து வருகிறாள். கடவுள் அருளால் அவளுக்கு மூன்று குமாரர்கள் பிறக்கிறார்கள். அம்மான் பெருமாள், செய்யபெருமாள், சிலைக்கேத்த வன்னியன் என்னும் பெயரோடு குன்றுடையானுக்குத் துணையாக வாழ்ந்துவருகின்றனர்.

குன்றுடையானும் பெரியநாச்சியாரும் தவத்திற்குச் செல்லும்போது அவர்களிடம் பணியாற்றிவந்த பறையர் குலப்பெண் ஒருத்தித் தனக்கும் பிள்ளைப்பேறு வாய்க்கத்தவம் செய்ய வேண்டிக்கொள்கிறாள். கடவுளருளால் அவளுக்கும் பிள்ளைப்பேறு வாய்க்கிறது. குன்றுடையான் தன்மக்களுக்குப் பொன்னர்–சங்கர் என்றும் மகளுக்கு நல்லதங்காள் என்றும் பெயரிட்டுவளர்த்து வருகிறான். பறையர்குலப்பெண் தன் மகனுக்குச் சாம்பான் என்று பெயரிட்டு வளர்த்து வருகிறாள். சாம்பான்; பொன்னர் சங்கர், அத்தைப்பிள்ளை மூவர்க்கும் உற்ற தொண்டனாக உயிர்கொடுத்துக் காக்கும் ஊழியனாகப் பணியாற்றி வருகிறான். பொன்னர்சங்கர் இருவரும் நல்ல தங்கையை உயிரினும் மேலாகப் போற்றி வளர்த்து வருகின்றனர்.

ஒருநாள் நல்லதங்காள் ஒரு தீய கனாக்கண்டு வருந்தி அதை அண்ணன் மார்க்குச் சொல்கிறாள். அதாவது மேனாட்டுப் பகுதியிலே வேடர்களின் தலைவனாய் ஆண்டு வரும் தலையூர்க்காளி என்பவன் காராளர்மேல் அழுக்காறு கொண்டு அவர்கள் ஆட்சியைச் சிதைக்க பகை கொண்டிருக்கிறான். செம்ப கொல்லான் என்னும்ஒரு ஆசாரியைத் தூதுவிட்டுப் பகைமூட்டிவிடத் தொடங்கி யுள்ளான். அந்தத் தட்டான் தங்க முலாம் பூசிய மரக்காலொடு வந்து சதி செய்கிறான். சங்கரும் அத்தைப்பிள்ளை மூவரும் நாட்டைவிட்டு போய் விடுகின்றனர், அரசாளும் மண்டபம் முதலியவை அழியவும் கண்டேன், என் கனவு தப்பாது என்று கூறிக் கதறியழுது புலம்புகின்றாள்.

நல்லதங்காள் கனவிற்கண்ட யாவும் முறையாக நடைபெறுகிறது. செம்பகொல்லனுக்குத் தலையூர்க்காளி நீ எப்படியோ சதி செய்து பொன்னர் சங்கரை அழித்துவிடவேண்டும். அப்படிச் செய்தால் நிறைய பொன்னும் மணியும் சிற்றூரும் மானியமாகத் தருவேன் என்று ஆசைக்காட்டுகிறான். பொன்னர் சங்கர் மீது முன்பே அழுக்காறு கொண்டிருந்த செம்பகொல்லன் காளி கூறியதை ஏற்று அவ்வாறே செயல்படுகிறான். தட்டானின் தாய் காராளர் பகை வேண்டாம் அவர்கள் சாமியை ஒத்தவர்கள். நீ உன் அழிவைத் தேடிக்

கொள்ளாதே எனத்தடுக்கிறாள். கொல்லன் அவளை அடித்து உதைத்துத் துன்புறுத்தி நான் எண்ணியதை முடிப்பேன் என்று சூளுரைக்கிறான். பின்னர் மரத்தால் ஒரு மரக்காலைச் செய்து அதற்கு தங்கமுலாம் பூசி எடுத்துக்கொண்டு பொன்னர் சங்கர் அரண்மனைக்கு வருகிறான். காவலர்கள் தடையையும் மீறிப் பொன்னரின் கருணையால் அரண்மனைக்குள் செல்கிறான். சங்கர் மிகவும் கோபித்துக்கொள்கிறான். பொன்னர் அவனைச் சமாதானப்படுத்திக் கொல்லனை விசாரிக்கும்போது-நான் கரிகாற்சோழனுக்குக் காணிக்கையாக இந்தப் பொன்னா லாகிய மரக்காலை எடுத்துச் செல்கிறேன் பொழுதுபோய் இருட்டிவிட்டமையால் அரண்மனையில்தங்கிக்காலையில்செல்லநினைத்துவந்துள்ளேன். இந்தப்பொன் மரக்காலைக் காத்து நாளை என்னிடம் ஒப்படைக்க வேண்டுகிறேன் என்று வஞ்சகமாகப்பேசி அரண்மனையில் தங்குகிறான். போலியாகிய பொன் மரக் காலை நல்லதங்காள் வாங்கிப் பத்திரமாகவைக்கிறாள். தான் கனவை எண்ணி அஞ்சுகிறாள். இரவு யாவரும் படுத்துறங்கும்போது செம்பகொல்லன் மெதுவாக எழுந்து ஒரு பெரியகல்லை எடுத்து வந்து பொன்னர் சங்கர் தலையில் போட்டுக் கொல்ல நினைக்கும்போது கொல்லனைக் கண்ட காவல் நாய்கள் குரைத்துச் சத்தமிடுகின்றன. அச்சத்தத்தை கேட்டுவிழித்த பொன்னர் கொல்லனைப் பார்த்து ஏன் கல்லைச் சுமந்துகொண்டு நிற்கிறாய் என்று கேட்க. தூக்கம் வர வில்லை தலைக்கு உயரமாக வைத்துக்கொள்ள எடுத்தேன் என்று கூறித் தந்திரமாகப் பேசி மயக்குகிறான்-பின்னர் விடிந்தது கொல்லன் நான் ஊருக்குப் புறப்படுகிறேன் பொன்மரக்காலைத் தாருங்கள் என்று கேட்கிறான். பொன்னர் நல்லதங்காளிடமிருந்த மரக்காலை வாங்கி வந்து தருகிறான்.

செம்பகொல்லன் சதி எண்ணப்படி அதை வாங்குபவன் போல் வாங்கிக் கீழே நழுவ விடுகிறான். அது சுக்கலாக உடைந்து சிதறுகிறது. கொல்லன் அய்யோ என்று அலறி பொய்யாக அழுது புலம்பி என் பொன் மரக்காலை எடுத்து மறைத்துக்கொண்டு இந்த மரமரக்காலை கொடுத்தாயே இது தர்மமா நீதியா தெய்வத்திற்கு அடுக்குமா என்று புலம்பி ஓலமிடுகிறான். நீ தர்ம வான் என்று ஊரே சொல்கின்றது. நீ இப்படி என் வயிறெரியச் செய்தாயே என்று வாதிடுகிறான். பொன்னர் செம்பகொல்லா நீ கொடுத்ததுதான் இந்த மரக்கால், இது சத்தியம். உன் மரக்காலை எடுத்துக்கொண்டு நான் இதைத் தர வில்லை என்று சத்தியம் செய்கிறான். நீ எப்படிக் கேட்கிறாயோ அப்படிச் சத்தியம் செய்துதருகிறேன் என்கின்றான்.

கொல்லன் பொன்னரை விநாயகர் கோயிலில் வந்துச் சத்தியம் செய்து தரச் சொல்கிறான். பொன்னர் விநாயகர் கோயிலுக்குச் சென்று சத்தியம் செய்து கொடுத்துவிட்டு வீடு திரும்பிவிடுகிறார். அப்போது பொன்னருக்கு விநாயகர் காட்சி கொடுத்துத்தட்டான் அழைத்தானென்று நீ போய்வந்தாய், உன் மீது குறையில்லை என்று கூறினார். கொல்லன் ஒத்துக்கொள்ளாமல் காளி கோயிலில் வந்து சத்தியஞ்செய்யச் சொல்கிறான். காளியும் காட்சிக் கொடுத்து நீ குற்றமற்றவன் என்று கூறுகிறாள். கொல்லன் பின் அஞ்சி நீ காளியை விட்டு என்னைக் கொல்ல நினைக்கிறாய். நான் ஒத்துக்கொள்ளமாட்டேன். வெள்ளாங்குளத்திற்கு வந்து இக்கரையில் மூழ்கி அக்கரையில் எழுந்துவந்து சத்தியஞ் செய்தால் ஒப்புக்கொள்வேன் என்றான். அந்தக் குளத்தில் ஏராளமான பாம்புகள் வசிக்கின்றன. அவை பொன்னரைக் கொன்றுவிடுமென்று கொல்லன் நினைக்கிறான்-பொன்னர் குளத்தில் மூழ்கிப் பாம்புகளை எல்லாம் கொன்று விட்டு மேல் வருகிறான். மீண்டும் ஒருமுறை மூழ்கச் சொல்லுகிறான் கொல்லன்-பொன்னர் மறுபடியும் மூழ்கியபோது கொல்லன் ஒரு பெரிய பாறாங்கல்லைக் கொண்டுவந்து தலையில் போட எண்ணி எடுத்துவருகிறான். மூழ்கி எழுந்த பொன்னர் அதைப் பார்த்து இவன் சதிகாரன் என்னைக் கொல்லவே இந்த உபா யங்களை எல்லாம் செய்திருக்கிறான் என மிகச் சினந்து வந்து கொல்லனைக் கண்ட துண்டமாக வெட்டிக் காளிக்குப் பலியிடுகிறான்.

இங்ஙனம் பொன்னர் கொல்லன் பின் போனதை அறிந்த தலையூர்க் காளி தனது வேடர்படைகளைத் திரட்டிக்கொண்டு வந்து. ஆலத்தூர் பட்டி னத்தை முற்றுகையிட்டு அழித்துவருகிறான். சாம்பானால் இதையறிந்த சங்கர் தன் மைத்துனர்களுடன் சூழ்ந்துவந்து வேடர்களைச் சின்னாபின்னமாக வெட்டித் துரத்துகிறான். அவர்களை ஓட ஓடத் தொடர்ந்து சென்று அழிக் கிறான். இந்தப்போரில் அத்தை மக்கள் இறந்துவிடுகின்றனர். மீளாக்கோப முற்ற சங்கர் வேடர்படை, நாட்டார்படைகளை எல்லாம் அழிக்கிறான். அவர்கள் காடு நோக்கி ஓடுகிறார்கள். சங்கர் பின்தொடர்ந்து கொல்கிறான். சங்கருக்கு வயது பதினாறு நிரம்பிவிடுகிறது. மாயவனார் இனிச் சங்கரை உயிரோடு விட்டால் உலகையே அழித்துவிடுவான் என்று கருதி மறைந்துநின்று சங்கரைக் கொன்றுவிடுகிறார். சங்கர் உயிர் போகாமல் குற்றுயிரோடு வீரமலையடிவாரத் தில் தோகைமலைக் கீழ்ப்புறமாய்த் தொப்பம்பட்டி கணவாயில் வேங்கைமரக் காட்டினுள் சங்கர் போய் மறைந்தான். கனைப்போதிருந்த சங்கரை வீரபோகச்

சாம்பான் பார்த்துப் புலம்புகிறான். பொன்னருக்கு அபயக்குரல் கேட்கும்படியாகப் பறையடிக்கச் சொல்கிறான். சாம்பான் பறை முழக்குகிறான். பின்னர் சங்கர் தன்னுயிரைவிட்டான்.

பொன்னர் ஆலத்தூர் பட்டினம் நோக்கி விரைந்து வருகிறான். நல்ல தங்காள் அரண்மனையில் அழுதுபுலம்பி அரற்றிக்கொண்டிருக்கிறாள். பொன்னர் வந்து நிலைமையையறிந்து மிகச் சினங்கொண்டு வேடுபடையத் தனையும் அழித்துவருவேன் எனப் புறப்படுகிறான். அவ்வாறே ஊர் ஊராகச் சென்று வேட்டுவக் கருவை எல்லாம் அறுத்துவிட்டுத் தம்பி சங்கரைத் தேடி மலைக்கு ஓடுகின்றான். காணாமல் பலவாறு பேசிப் புலம்பித்தவிக்கின்றான். இறைவனிடத்தில் நம் தந்தையார் நமக்கு வயது பதினாறு வேண்டி வரம் பெற்றுவந்தார். இப்பொழுது பதினாறு வயது நிரம்பிவிட்டதோ என்று புலம்புகிறான். பின்னர் அக்கானகத்தில் தானும் மறைந்துவிடுகிறான்.

அண்ணன்மார் மறைந்துவிட்டதைக் கேள்வியுற்று அறிந்து நல்லதங்காள் புலம்பி அரண்மனைக்குச் செல்லுகின்றாள். சென்று அண்ணன்மார் மனைவியரையழைத்துத் தான் முன்பு கண்ட கனவைக் கூறி எல்லாம் அப்படியே நடந்துவருகிறது. நாம் எல்லோரும் சென்று அண்ணன்மார் பட்ட களத்தைக் கண்டு முறைப்படி சடங்குகளைச் செய்யவேண்டுமென்று அண்ணன் மனைவியரை அழைக்கின்றாள். அதற்கு அவர் உன் அண்ணன்மார் எங்களை இதுவரை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. எம்மைத் தீண்டவில்லை. எம்மைத் தீண்டினால் அவர்கள் பலத்திற்கும் வீரத்திற்கும் பங்கம் நேருமென்று எங்களை ஒதுக்கியே வைத்திருந்தார். அதனால் நாங்கள் எப்படி அங்கு வரமுடியும் என்று மறுத்துக் கூறுகின்றனர்.

எங்களுக்கு மூன்று வயதிலும் உன் அண்ணன்மார்க்கு ஐந்து வயதிலும் கோலாகலமாகத் திருமணம் நிகழ்ந்தது. திருமணத்திற்குப்பின் அவர்கள் எங்களை அந்தப்புரத்திலே சிறைவைத்துவிட்டனர். நாங்கள் ஏதுமறியோம் என்று பூர்வ நிகழ்ச்சிகளை எல்லாங்கூறி நல்லதங்காளுடன் வர மறுத்ததைக் கேட்டு நல்லதங்காள் அவர்களைக் கடுத்து நோக்குகிறாள். அவர் ஓர் அறைக்குள் சென்று தாழிட்டுக்கொண்டார்கள். நல்லதங்காள் சபிக்கிறாள். உடனே தீப்பற்றி எரிகிறது. பின்னர் நல்லதங்காள் வருணனை வேண்ட மழை பொழிந்து தீயை அடக்குகிறது. அண்ணன் மனைவியர் இறந்துவிடுகின்றனர். அவர்களுக்கு

ஆகவேண்டியதைச் செய்துவிட்டு நல்லதங்காள் கானகம் நோக்கிப் புறப் படுகிறாள்.

நல்லதங்காள் பின்னர் அக்கினிக்குண்டத்தை ஏந்திக்கொண்டு புறப் பட்டுப் பல ஊர்களைக் கடந்து வீரமலைநோக்கிச் செல்கின்றாள். அங்கு அண்ணன்மார் சடலங்களைத் தேடுகிறாள். அழுது புலம்பி ஆங்காரமாகச் சத்தமிடுகிறாள். பெரிய தவம் மேற்கொண்டாள். வீரமலை மாதாவை வேண்டி ஓலமிடுகிறாள். வனமெல்லாம் ஆங்காரச் சத்தத்துடன் தேடுகின்றாள். நாக மலை தோகைமலைகள் எல்லாம் நடுங்குகின்றன. வீரமலை மாதா அக்காண்டி, சப்தகன்னியர்களைவிட்டு அழித்துவரச்சொல்கிறாள். சப்தகன்னியர் வந்து பார்த்து இவள் பேயல்லள், பிசாசல்லள் அண்ணன்மாரைப் பறிகொடுத்து அலமருகின்றாள் என்று கண்டு அவளைத் தீண்டாமல் உடன்செல்கின்றனர்— பின்னர் அக்காண்டி அம்மலையிலுள்ள மூலிகளை ஏவி அவளை அழித்துவரச் சொல்கிறாள், அவர்களும் வந்து அவள் துயரங்கண்டு அவளைப் பின்பற்று கின்றனர். பின்னர் இவர்கள் பெரியக்காள் என்றும் அக்காண்டி மாதாவிடம் சென்று பொன்னர் சங்கர் நல்லதங்காள் முதலானோர் வரலாற்றைச் சொல்ல அக்காண்டி சினம் நீங்கி நல்லதங்காளைக் காக்கத் தேரேறி வருகிறாள். வந்து நல்லதங்காளைக்கண்டு செய்தி தெரிந்து இறைவனிடம் முறையிடுகின்றாள். சத்த கன்னியர்களைப் பார்த்து இவள் அண்ணன்மார் அத்தைமக்கள் சடலங்கள் இருக்குமிடம் கண்டீர்களோ என்று கேட்கச் சத்தகன்னியர் தாங்கள் கண்ட காட்சி களை விளக்கமாக எடுத்துக் கூறுகின்றனர். அக்காண்டி தேவியுடன் சென்று நல்லதங்காள் அண்ணன்மார்களையும் மற்றவர்களையும் கண்டு அழுது புலம்பு கின்றாள். சத்தகன்னியர் தேறுதல் கூறி ஆற்றுவிக்கின்றனர்.

நல்லதங்காள் எல்லோருக்கும் இறுதிச்சடங்கு செய்ய வீரமலைமாதாவின் கிருபையால் பலவித சடங்குகளைச் செய்கிறாள். நல்லதங்காளின் தவத்தை மெச்சிய ஆதிசிவனும் மாயவனும் குன்னுடையார் முதலாகப் பொன்னர் சங்கர் எல்லோரையும் கயிலாயத்திலிருந்து பூலோகத்தில் வந்து உயிருடன் தோன்றும்படிச் செய்கின்றனர். கானகத்தில் சடலமாகக் கிடந்தவர்கள் யாவரும் உயிர்பெற்று எழுகிறார்கள். பொற்கலச நீரைத்தெளித்து மாதா யாவரையும் உயிர்ப்பிக்கிறாள். எல்லோரும் ஆனந்தமடைகின்றனர்கள். நல்லதங்காள் பெருமகிழ்ச்சி அடைகின்றாள்.

அப்போது பொன்னர் சங்கர் எங்கள் அப்பன் எங்களை வரம் வாங்கி வந்தபோது பதினாறு பிராயம் வாங்கி வந்தார். பதினாறு பிராயம் முடிந்த பின்னரும் நாங்கள் பூலோகத்தில் வாழ விரும்பவில்லை. கைலைக்குச் சென்று கடவுளோடு இருக்க விரும்புகிறோம் என்கின்றனர். அதைக்கேட்டு எல்லோரும் வருந்திக்கொண்டிருக்கும்போது கயிலாசநாதனும் மகாவிஷ்ணுவும் அந்தப் படுகளத்திற்கு வந்து காட்சியளிக்கின்றனர். பொன்னர் சங்கரைப் பார்த்து உங்களுக்கு என்றும் பதினாறாக வரம் தந்தோம். ஆகையால் நீங்கள் இங்கேயிருந்து நல்லரசு புரிந்து ஆசையெல்லாந் தீர்ந்த பின்பு எம்முடைய சீர் பாதத்தை வந்து அடைவீர்களாக என்று கூறுகின்றனர்.

அண்ணன்மார் என்று தேசங்கள் தோறும் சிறப்பாகப் பூசைகொண்டு திகழுங்கள் என்று வரங்கொடுத்தனர். மாயவனார், ரகுராமன், அத்தைபிள்ளை மூவரையும் நீங்கள் இந்த தேசத்தில் அவர்களோடு பூசைகொண்டு திகழுங்கள் என்று வரங்கொடுத்தார். பின்னர் வீரமலை முடியில் இனித்தெய்வமாக வாழ் வோம் என்று பொன்னர் சங்கர் முதலானோரை அழைத்தான். அவர்களும் உடன் சென்றனர். சப்தகன்னியரும் முனிகளும் உடன் சென்றனர். அண்ணன் மார் புடைசூழ ஆத்தாள் கொலுவிருந்தாள்.

பொன்னர் சங்கர் முதலானோர் மலைவளம் தரும் காய் கனிகளை உண்டு வரும் நாளில் ஒருநாள் பொன்னர் சங்கர் எல்லோரும் மாதாவே எத்தனை காலம் இந்தக் காய் கனிகளை உண்டு வாழ்வோம். எங்கள் பசிபோக்க வரம் தருவாய் என்று கேட்டார்கள். மாதாவும் இனி நீங்கள் மலையைவிட்டுச்சென்று கம்பையநாயக்கன் ஆளும் ஊருக்குச் சென்று அவன் கனவிலே தோன்றிப் பூசை முதலியவை செய்யச் சொல்லுங்கள் என்றாள். அவர்கள் கம்பையநாயக்கன் கனவில் தோன்றினார்கள். அவன் அஞ்சி நடுங்கித் தன் மனைவியருக்குச் சொல்லுகிறான். அவர்கள் ரகுராமன் நமக்குத் தெய்வம். அவர் அருள் செய்வார் என்று தேற்றுகின்றார்கள். அதை உணர்ந்த பொன்னர் சங்கர் கம்பையன் ஆலயத்திற்குச் சென்று குதிரைகளை எல்லாம் வெட்டி வாருங்கள் என்று சாம்பனுக்குக் கட்டளையிட அவன் சென்று குதிரைகள் எல்லாம் புல் தின்னாமல் செய்கிறான். அதனைக் குதிரை லாயம் காக்கும் கொண்டப்பன் வந்து கம்பையனிடத்தில் கூறுகிறான். உடனே கம்பையநாயக்கன் கொங்கிலியத்தொட்டியர் புதுவாடி பொம்மனநாயக்கர் சரக்கோடங்கி நாயக்கர் முதலானோரை அழைத்து நிகழ்ந்ததை எல்லாம் கூறுகின்றான். அப்பொழுது

கோடங்கி ஒருவன் வந்து பெரிய மலை மாதாவுக்கு விழா எடுத்துப் பந்தலிட்டு தெய்வங்களை எழுந்தருளச்செய்து ஆடு கோழி முதலியவற்றைப் பலியிட்டுப் பூசை நடத்தச்சொல்கிறான். அவ்வாறே கம்பையநாயக்கன் ஊராருக்கெல்லாம் சொல்லி மிகச்சிறப்பாகப் பூசை நடத்துகின்றான். தேவி முதல் பொன்னர் சங்கர் முதலானோர் மகிழ்ந்து கம்பையநாயக்கனுக்கு அருள்புரிகின்றனர். வரங்கள் அளிக்கின்றனர். புத்திர சந்தானமும் அருளுகின்றனர். கம்பைய நாயக்கன் தன் ஆட்சிக்குட்பட்ட எல்லா ஊர்களிலும் இவ்வாறு பூசையிட்டு அண்ணன்மாரை வணங்கி அருள்பெறச் செய்கிறான். பிற ஊராரும் விழா எடுத்து அண்ணன்மார்களையும் அருக்காணி அத்தைபிள்ளை மூவர் சாம்பான் எல்லோரையும் வழிபட்டு நல்வாழ்வு பெறுவாராயினர். இவ்வாறு இந்த அம்மானை நூலின் கதை அமைந்துள்ளது.



# பொன்னர் - சங்கர் அம்மானை



மூந்தி விநாயகனே முக்கண்ணார் தன்மகனே
சத்தி விநாயகனே சங்கரனார் புத்திரனே
வித்தைக்கு நல்ல வேத முடையோனே
ஆயன் மருகோனே ஐங்கரனார் புத்திரனே
5 சத்தரிஷி ஈஸ்பரர்க்கு சதாசிவர்க்கு முன்னோனே
வேதம் விளங்கும் விருமாவுக்கு மூத்தோனே
ஆலடியில் பிள்ளையரே அரசடியில் விநாயகனே
வேலடி விநாயகனே விண்ணோர்க்கு முத்தோனே
அயிந்து கரத்தோனே ஆனைமுக வேதியனே
10 ஒற்றைநல்ல கொம்பனே உமையாள்பெற்ற புத்திரனே
சத்திக் கணபதியே தையல்நல்லாள் புத்திரனே
எருத்துமே லேறிவரும் ஈஸ்பரனார் குஞ்சரமே
தாயார் வடிவுதேடித் தடத்தில் அமர்ந்தகண்ணே
மாதாவடிவெடுத்து வழியில் அமர்ந்த மன்னா
15 கச்சி விநாயகனே கற்பகமே முன்னடவாய்
வீரமலை பிள்ளையரே எனக்கு வேறுவினைவாராமல்
தங்காள் புலம்பல் தயவாகப் பாடுதற்குச்
சிந்தை கலங்காமல் சீருதப்பிப் போகாமல்
அஞ்சுபஞ்ச பூதம் அவரும் விலகாமல்
20 பக்கத்துணையிருந்து பாருதங்கள் தானடத்திக்
காராளர் பொன்னர்சங்கர் கதைதனைப் பாடுதற்கு
ஆதி பராபரியே அகிலாண்ட நாயகியே
நாகமீன்ற கன்னியரே நல்லகன்னி மாதாவே
ஆதிசிவன் குமாரத்தி அரனார் திருமகனே
25 வரத்தால் மிகுத்தவளே வல்லவளே மாதாவே
ஏழுபேர் சத்தகன்னிக் கிளையகன்னி அக்காண்டி
சத்தகன்னி யீஸ்பரியே தவசுக் குடையவளே
மாயேஷ் பரியே வல்லவளே மாதாவே
பொன்

தங்காள் புலம்பல் தான்பாடி வாரதுக்கு
30 வல்லவளே மாதாவே என்வாக்கில் குடியிருந்து
எடுத்தசரந் தப்பாமல் என்குரலும் மங்காமல்
அனைவரையுந் தானினைந்து அரிய புரவியின்மேல்
தங்காள் புரவியின்மேல் தனிப்புலம்பல் நான்பாட
வீர மலைவாழும் விநாயகனே முன்னடவாய்
35 என் நாவில் சரசுபதியும் நன்றாய்க் குடியிருந்து
என்*பொந்திக் கலங்காமல் புத்திதப்பிப் போகாமல்
கதைதனையே பாடுதற்குக் காரணமாய் முன்னடவாய்
வீரமலை அக்காண்டி வெம்முடியில் மாதாவே
மந்திர மகாமுனியே மலைக்காவல் உடையமுனி
40 தந்திரமான கருப்பணனும் சன்னாசி லாடமுனி
எல்லோரும் வந்து இதமாக முன்நடப்பீர்
பொன்னர்சங்கர் காரியத்தைப் புத்தியுடன் நான்பாட
வளநாட்டுக் காராளர் வாழ்ந்த திருக்கதையைச்

## நாட்டுச் சிறப்பு

சொல்லுகிறேன் கேட்டிருங்கள் துய்ய செவிகுளிரக்
45 கட்டுங் கலங்காணுங் கதிரொழக்கு நெல்காணும்
முத்து விளைஞ்சிருக்கும் முழுச்சம்பாப் போரேறும்
ஆனைகட்டத் தூர்விளையும் அழகுபொன்னின் வளநாடு
நெல்லு விளைஞ்சிருக்கும் நேருசம்பாப் போரேறும்
அஞ்சுக்கு ரெண்டு அரமணைக்கு மேல்வாரம்
50 வாரம் விடுவாரும் வயல்கணக்குப் பார்ப்பாரும்
நெல்லி வளநாட்டில் நெல்மிகுதி கோனாட்டில்
அப்படியாக் கொத்த அழகுதிருப் பட்டணத்தில்
காராளர் வீதியென்றால் கணக்கு வழக்குமில்லை
வெள்ளாளர் வீதியென்றால் வெகுதூர மாயிருக்கும்
55 செட்டியார்கள் தன்தெருவும் சேணியர்கள் தன்தெருவும்
பாப்பா ரகமும் பருவீதி ஆயிரமாம்.
பலப்பட்டி டைத்தெருவும் பந்திபந்தி யாயிருக்கும்
தேவஸ்த் தலமும் தேவடியாள் தன்தெருவும்

---

* புந்தி என்றிருக்கவேண்டும்.

பட்டணம் நிறைந்திருக்கும் பார்க்க முடியாது
60 சொல்ல முடியாது சூழ்ந்தபொன்னி வளநாட்டில்
குன்னுடையான் பெற்றெடுத்த குலவீறு காராளர்
கட்டி அரசாண்டார் காராளர் பொன்னர்சங்கர்
கருதுமுனை தீண்டாத காராளர் வம்முஷமாம்
உலக்கைமுனை தீண்டாத குலக்கொழுந்து வம்முஷமாம்
65 காராளர் வங்கிஷத்தில்[1] கதித்தமுடி வெள்ளாளர்
குன்னுடையா னென்று குலக்கொழுந்து வெள்ளாளர்
பெரியநாட்சி என்று பேர்போன தாயாரும்

## தாமரையாள் பிள்ளையில்லையென்று தானதர்மம் செய்வது

இருவரெண்டு பேரும் இருக்குமந்த வேலையிலே
பிள்ளையு மில்லாமல் பெருநாள் மலடிருந்து
70 மஞ்சனு மில்லாமல் வெகுநாள் மலடிருந்து
புத்திரனு(மைந்தன்) மில்லாமல் போத மனஞ்சலித்து
மன்னவனுந் தேவியுமாய் வெகுநாள் மனந்தளர்ந்து
எத்னை[2] செல்வமும் இயல்பாய் இருந்தாலும்
புத்திரனு மில்லாமல் பூதலத்தில் வாழ்வார்களோ[3]
75 பிள்ளையில்லா வீடு பிசாசிருக்கும் வீடல்லவோ
அள்ளியுண்ணுஞ் சோறு அரிபுழுவுங் கண்டாயே
பிள்ளையு மில்லாமல் பேருலகை ஆள்வதென்ன
மைந்தனு மில்லாமல் இந்தவளநாட்டை ஆள்வதென்ன
நம்ம ஆண்ட பணி பூஷணங்கள் ஆருமே கேள்ப்பார்கள்
80 நீயீன்றபிள்ளை எத்தனைஎன் றல்லவோ கேள்ப்பார்கள்
ஆகையினால் நாமள் ஆண்டபொரு ளத்தினையும்
மின்னுமணி ஆபரணம் மெத்தவே தானெடுத்து
வேணுமென்ற ஆபரணம் வேதியர்க்குத் தானமிட்டால்
அன்னமுஞ் சொர்ணமும் அந்தணர்க்குத் தானமிட்டால்
85 சந்தானமுண் டாகுமென்று தன்மனதி லேநினைந்து
காசிக்குப் போவார்க்குக் கனத்தமுத லைகொடுத்துச்
சந்திக்குச் சந்தி தணணீர்ப்பந்தல் தானும்வைத்து
வீதிக்கு வீதி வேணுமென்ற சத்திரங்கள்

---

1 வம்முஷத்தில் என்றிருக்கவேண்டும், 2 எத்தனை. 3 வாழ்வாரோ.

அகுதிபர தேசியர்க்கு அன்னங் கொடுக்கவைத்து
90 கன்னியா தானம் கனமாகப் பண்ணிவைத்தார்
உபநயனக் கலியாணம் ஒருகோடி பண்ணிவைத்தார்
சாலைமர முண்டுபண்ணித் தண்ணீருப் பந்தல்வைத்தார்
தெப்பக் குளங்கள்வெட்டித் திருநந்தா வனஞ்செய்தார்

## தாமரையாள் புத்திர வரத்துக்குப் போகுதல்

பொன்னம்பல ஈஸ்பரர்க்குப் பொற்பணுதி ஏதேது
95 வேண்டிய ஆபரணம் மிக்கவே தான்பூட்டிப்
பூசுரர்க்குத் தேவதைக்குப் பொருந்தியே தானமிட்டுக்
தவசிருக்க வேணுமென்று சந்தோஷ மூண்டாகி
பொன்னம்பலத்தில் பொருந்தவசு செய்வமென்று
சன்னாசி கோம்பையிலே தவசிருக்கத் தானினைந்து
100 குன்னுடையான் தானடந்தான் கொம்பனையைத் தானடத்தி
அந்தநல்ல வேளையிலே அவருடடுமைப் பறச்சிவந்து
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டு
அட்டம் பணிந்து அடவாக வாய்புதைத்து
ஈஷ்பரரை நோக்கி ஏற்ற தவம்புரிந்து
105 மகாதேவர் கிருபையினால் மைந்தன் வரம்வாங்கி
வருகுமந்த வேளையிலே மகாதேவ ரைக்கேட்டு
அடியேனுக்கு ஒருபுத்திரனே அப்பனையும் வாங்கிவந்தால்
உமக்குப் பெருமையுண்டு உங்கள்ஊழியத்துக் காகுமது
என்று பெரும்பறச்சி ஏற்றமுடன் தானுரைக்க
110 நல்லது என்றுசொல்லி நடந்தானே குன்னுடையான்
வளநாடு விட்டு வாய்த்தவனம் உள்புகுந்து
சில்லென்ன காடு செடியும் புனந்திரம்
ஊசி வனங்கடந்து உருண்டை மலைகடந்து
காடு கடந்து கடியமலை உள்புகுந்து
115 பொன்னம்பல ஈஷ்பரரைப் பொருந்தியிலே தானினைந்து
சிவசிவாவென்று குன்னுடையான் சிவனாரைத் தானினைந்து
கைலாச நாதரையும் கருத்தில் மிகநினைந்து
வந்தார் தவசுநிலை வைகைக்குக் கீழ்புறமாய்
வாவிகளுஞ் சோலைகளும் வாய்த்ததொரு பொய்கைகளும்
120 நந்த வனமும் நலமான சோங்குகளும்

இருண்ட தொருநிழலாய் இருக்கும் வனத்தில்வந்து
குளுந்த நிழலும் கூடாரச் சோலையுமாய்ப்
பொய்கைகளுஞ் சோலைகளும் பூந்தோட்டந் தான்பார்த்து
தவசிருக்க நல்ல தலங்களிது என்றுசொல்லி
125 வைகையிலே ஸ்தானம்பண்ணி வந்து கரையேறிக்
கூந்த லுதறிக் கோடாலி தான்முடித்துச்
சிவசிவாவென்று திருநீறு தான் சாத்தி
ஆதிசிவன் மாயவரை அன்பாகத் தானினைந்து
பொன்னம்பல நாதரையும் பொந்தியிலே தான்நினைந்து
130 புடிசொம்பில் நீர்மோந்து பொஷ்பந் தனைஎடுத்து
அண்ணாமலை நாதரையும் அன்பாய் மனதிலெண்ணி
பத்திரியைப் போட்டு பரம சிவனாரை
முக்காலுந் தெண்டனிட்டு மோசிக வாகனரை
ஆறுமுக வேலரையும் அய்யரையும் போற்றிசெய்து
135 வாள்மதுரைச் சொக்கரையும் மங்கைமீ னாட்சியையும்
வெண்முடியில் தவசிருக்கும் வீரமலை மாதாவே
சிந்தித் தடிதொழுது தெய்வந் துணையெனவே
இருந்தார் பெருந்தவசு எல்லவருங் கொண்டாட
இருந்தவிடந் தனிலே இருசடையும் வேரூண
140 கரையான் புத்தெடுத்துக் கல்லிச்சி தான்முளைச்சு
பாதிரை புன்னை பலவிருட்சம் தான்மூளைச்சு
முல்லைக் கொடியும் முழுநீலச் செண்பகமும்
மந்தாரை பிச்சி வாசமுள்ள செண்பகமும்
பிச்சியும் புன்னை பேர்பெரிய கொன்னையுடன்
145 சுத்தி மிகப்படர்ந்து சுகந்தம் மிகவீச
எங்கும் படர்ந்து இருந்தார் பெருந்தவசு
குன்னுடையாந் தானிருக்கும் கொடிய தவநிலையை
இறையவனார் கேட்டு இன்பமுடன் கொண்டாடி
இப்படி அருந்தவசு இருக்கிறான் என்றுசொல்லிப்
150 பரம சிவனாரும் பார்வதியுந் தானறிந்து
சிந்தை களிகூர்ந்து சிவனிருக்கும் வேளையிலே
திங்கட் கிழமை சிவன்பிறந்த சோமவாரம்
ஒருசந்தி பண்ணி ஒருசாம வேளையிலே

இடப்பாக மாயிருந்து ஈஷ்பரியும் ஏதுசொல்வாள்
155 காரணா போற்றி கங்காளா நீர்போற்றி
பூரணா போற்றி புனிதரே நீர்போற்றி
எந்தன் மணவாளா ஈஷ்பரரே போற்றி
காராளன் குன்னுடையான் கனத்த தவசிருந்து
மெத்தையின் மேலிருந்து வேதாவைத் தானினைந்து
160 ஏந்து குழந்தைக்காய் இத்தவசில் காராளன்
வளநாட்டில் குன்னுடையான் வருந்துகிறா னும்மையென்று
அவனுடைய பெண்சாதி அரியபெரிய நாட்சியென்று
இருவரு மிப்போது யேத்த தவம்புரிந்து
ஏந்து குழந்தைக்காய் இத்தவசில் தானிருந்து
165 அரிய தவசிருந்து ஆண்பிள்ளை வேணுமென்று
இருக்கிறார் இத்தவசு யிறையவனார் என்றுசொல்லி
ஈஷ்பரி யுஞ்சொல்ல யீஷ்பரருந் தான்கேட்டு
ஈஷ்பரருந் தான்கேட்டு யேதுசொல்வா ரப்போது
மாயவரும் யீஷ்பரரும் மனமகிழ்ந்து தான்கேட்டு
170 உமையவளைத் தானழைத்து ஒலகளந்தார் தான்கூடி
சத்தி உமையவளும் சதாசிவனா ரப்போது
குன்னுடையான் தவசிருக்கும் கொடியவனத் தில்வந்து
அருந்தவசைக் கண்டு ஆதி சிவன்மகிழ்ந்து
புத்திர சந்தானம் போதவே நாங்கொடுத்தோம்
175 பிள்ளைக் கலிதீர்த்தோம் போடா வெனவுரைத்தார்
அந்த மொழிகேட்டு ஆனதொரு குன்னுடையான்
அஞ்சி நடுங்கி அடித்துடைகள் கால்நடுங்கி
தவசை விட்டுக் குன்னுடையான் சுவாமிபக்கம்வந்துநின்று
முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
180 பாதங் கெதியெனவே பரமன் அடியில்விழ
ஆதிசிவன் மாயவரும் அன்பாய் மனமகிழ்ந்து
சிந்தை களிகூர்ந்து சிவனாரு மேதுரைப்பார்
வாருமடா குன்னுடையான் உன்மனது துயரமெல்லாம்
எல்லாம் அறிந்தோம் இனிய கலிதீர்த்தோம்
185 பிள்ளைக் கலிதீர்த்தோம் போடா வென உரைத்தார்
அம்பலத்துக் காணுரெண்டு அடுக்கிளைக்குப் பெண்ணுமென்றும்
தப்பாமல வரங்கொடுத்தோம் தயவாகப் போமென்றார்

அந்தமொழி கேட்டு ஆனதொரு குன்னுடையான்
தேவரீர் பாதம் தெரிசினைகள் கண்டபின்பு
190 மகாதேவரைக் கண்டபின்பு மைந்தன்கலி தீந்தனடிப்
பிள்ளைக் கலிதீந்தேன் பெருமாளைக் கண்டபின்பு
குன்னுடையான் சொல்லக் கோகறருந் தான்கேட்டு
மெத்த நகைத்து விமலனார் தான்பாத்து
வயசுபதி னாறாய் மகாசமத்து உள்ளவனாய்
195 அம்பலத்துக் காணுரெண்டு அடுக்கனாக்கிப் பெண்ணுமொன்று
தப்பாம லுந்தனக்குத் தான்கொடுத்தேந் தப்பாது
அந்த மொழிகேட்டு ஆனதொரு குன்னுடையான்
மற்று மொருக்கால் மகாதேவரைத் தெண்டனிட்டு
என் ஆசார் வாசலுக்கு அடுமைப் பறையனுண்டு
200 அவனுக்குமொரு புத்திரனை அருள்செய்வீ ராண்டவனே
என்றுதான் குன்னுடையான் இருகையு மேந்திநிற்க
பாத்து சிவனாரும் பரமனா ரேதுசொல்வார்
ஆறானைப் பிலமுடைய அருமதலை தான்கொடுத்து
பிள்ளை வரங்கொடுத்துப் பெருமாளும் ஈஷ்பரரும்
205 போமென்று யீஷ்பரனார் போற்றி விடைகொடுத்துப்
பொன்னம் பலத்தில் பேறுபெற்ற குன்னுடையான்
தவசு முடிந்து சந்தோஷ முண்டாகி
வாக்கு வரம்வாங்கி மன்னவரும் தேவியரும்
பேறுபெற்ற குன்னுடையான் பொன்னி வளநாடன்
210 சந்தோஷ மாகத் தானடந்தா ரம்மானை
அந்தச் சினமே ஆதிசிவன் மாயவரும்
தேவர்க ளெல்லோரும் தில்லையிலே சென்றார்கள்
மனமகிழ்ந்து குன்னுடையான் வந்தான் அரமனைக்கி
அரமனையில் வந்து அன்பாக வாழ்ந்திருந்தார்
215 இப்படித் தானும் இருக்குமந்த நாளையிலே
அத்தை மலைக்கொழுந்தி அரிகோவிந்தர் சன்னதியில்
மகாதீர்த்த மாடி மதுரைக் கடலாடி
தேமாங்க மாடி திருப்பாற் கடலாடி
கோதானம் ஈந்து கோபாலரு சன்னதியில்
220 ஆதிரகு ராமரையும் அச்சுதரைத் தான்பணிந்து

திருப்பாற் கடல்துயிலும் சீதா மனோகரரை
மைந்தன் கலிதீர வரங்கொடுக்க வேணுமையா
பிள்ளைக் கலியைப் பெருங்கலியைத் தீருமய்யா
225 ஆதிரகு ராமர்என்னை ஆதரிக்க வேணுமய்யா
அத்தை மலைக்கொழுந்தி ஆயன் திருச் சன்னதியில்
மகாதானஞ் செய்து மாயவனார் சன்னதியில்
அட்டம் பணிந்து அடிபணிந்து தெண்டனிட்டுச்
சன்னதியில் காத்திருந்தான் தப்பாமல் மலைக்கொழுந்தி
230 மங்கை அலமேலு மனதிரங்கி யேதுசொல்வாள்
சீதை மனமிரங்கித் திருமாலுக் கேதுரைப்பாள்
இந்தமங்கை மலைக்கொழுந்தி மாதவங்கள் தானம் பண்ணி
ஏந்து குழந்தைக்கா யிங்குவந்து நிற்குகிறாள்
மைந்தன் குழந்தைக்காய் மாயவரே உம்மிடத்தில்
235 பணிவிடைகள் செய்து பாங்கா யிருக்கிறாள்
அவளுக்கு மொருபுத்திரனே அருளுவீர் மாயவரே
என்றுரைத்தாள் அலமேலு யேகவானன் தான்பாரத்து
சந்தோஷப் பட்டுத்தையல் கொழுந்தியவள்
உனக்குப்புத்திரரும் பாக்கியமும் போதவே நாம்கொடுத்தோம்
240 உனக்குப் புத்திருமுண்டு புறக்கிறது ஆண்பிள்ளைகாண்
உங்கள்குலத் துப்பேரு ஒருநாளுஞ் சொல்லாதே
உனக்குப் புத்திரருமுண்டு உண்டு பேருசொல்ல நீர்கேளும்
அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக்கேத்த வன்னியரும்
245 மூவர் பிறப்பார்கள் மும்மூர்த்தி ஆகவுந்தான்
ஆளி லழகனுமாய் ஆனந்த ரூபனுமாய்
வீராதி வீரனுமாய் வில்தொழிலுக் கேத்தவனாய்
வாள்சமத்து உள்ளவனாய் வயசுபதி னாறுமதாய்ப்
புத்திரரும் பாக்கியமும் போதவே நாங்கொடுத்தோம்
250 போய்வாரு மென்று போற்றி விடைகொடுத்தார்
மாயவரு மப்போது மஞ்சன் கலிதீர்த்து
மும்மூர்த்தி யாக மூன்றுபிள்ளை தானாய்ந்து
அந்த வரம்வாங்கி ஆயிழையாள் மலைக்கொழுந்தி
ஆயன்திருச் சன்னதியை அடவாகச் சுத்திவந்து
255 சாஷ்ட்டாங்க மாகத் தயவாகத் தெண்டனிட்டு

மூந்நாறு பொன்னும் முடிப்புமே கைக்கொடுத்து
காணிக்கை ஆகக் கடுகி அவள்குடுத்து
வாக்கு வரம்வாங்கி மலைக்கொழுந்தி தான்நடந்தாள்
ராமருட சொல்படிக்கி நாயகியாள் தானிருந்தாள்
260 அப்போ புறந்தார்கள் ஆனபொன்ன சங்கருமே
புறந்தா ரிருவமாய்ப் பேடை மயிலொருத்தி
பொன்னர் யேழானைப் பிலமுடையான் எதிரில்லாச்சேவுகனும்
சங்கர் எட்டானைப் பிலமுடையான் எதுத்தவர்கள்கோடாலி
ஒன்பதானைப் பிலமுடையான் உத்தமியாள் நல்லதங்கு
265 முத்திப் பிறந்த மூவரவர் வித்திருந்தார்

## அத்தைப் பிள்ளை மூவர் பிறப்பு

பிந்திப் பிறந்தார்கள் பேர்பெரிய அத்தைமக்கள்
அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக் கேத்த வன்னியரும்
அத்தைபிள்ளை மூவருமாய் அண்ணன் தம்பி இருவருமாய்
270 அய்வரவர் தான்பிறந்து அரசாளும் நாளையிலே
வைகை வளநாட்டில் வகையாய்அர சாளுகையில்
காறாம் பறச்சிமகன் கடியதொரு சாம்பானும்
வரத்தால் பிறந்தான் மகாதேவர் சொல்படிக்கி
காராளர் ஐவருக்குக்குச் கடியதொரு ஊழியமாய்
275 செய்துமங்கே காத்திருந்தான் சேர்ந்ததொரு ஊழியமாய்
இப்படித் தானும் இருந்துஅர சாளுகையில்
தங்காள் புரவியர்க்குத் தங்கமணி மேடைகளும்
ஓராந்தளமாம் புரவியர்க்கு ஓலைப்பூச் சாவடியாம்
ரெண்டாந் தளமாம் தங்கச் சிங்காதனமாம்
280 மூணாந் தளமாம் புரவியர்க்கு முத்துமணிச் சாவடியாம்
நாளாந் தளமாம் அரியபுரவியர்க்கு நாகரெத்தினச் சாவடியாம்
அஞ்சாந் தளமாம் புரவியர்க்குஅலங்கார மேடைகளாம்
ஆறாந்தளமாம் புரவியர்க்கு அழகுமணிக் கோபுரமாம்
ஏழாந்தளமாம் புரவியர்க்கு யிலகுமணி மண்டபமாம்
285 எட்டாந்தளமாய் புரவியர்க்கு எறும்பேறும் மண்டபமாம்
ஒன்பதாம்தளமாம் புரவியர்க்கு உசந்ததொரு மேடைகளாம்
பத்தாந்தளமாம் அரியபுரவியர்க் பாம்பேறு மண்டபமாம்

அன்னூஞ்சல் பொன்னூஞ்சல் அரியதொரு தூங்குமஞ்சல்
தூங்குமஞ்சல் மேலே துய்யமெத்தை தனைவிரித்து
290 நல்லதங்கா ளுத்தமியும் நல்லகன்னி மாருடனே
பந்து விளையாடிப் பத்தினியாள் வீத்திருந்தாள்
எடுத்தபந்து தானந்த விரிபுரவியேமாந்து போயிருத்தாள்
அசந்து புரவியரும் அன்பாய் நடந்துவந்து
சாந்தால் தரைமெழுகிச் சந்தனத்தால் கோலமிட்டு
295 சாம்பிராணித் தூபம் சந்தியெங்குந் தான்வீசக்
குத்து விளக்கு குமுகுமென்று நின்றெரிய
மாணிக்கம் நாலுதிக்கும் மலர்போலே நின்றெரிய
தூணுக்குத் தூணு தூண்டா விளக்கெரிய
தூணுக்குத் தூணு சோதிவிடுஞ் சித்திரங்கள்
300 பத்தாம் பிறையைப் பதித்துவைத்த பாவினைபோல்
சாய்ந்து விளையாடச் சாய்பலகை பொன்னாலே
மிதிச்சுக் குதிச்சேற மிதிபலகை பொன்னாலே
உதைஞ்சு விளையாட உத்திரங்கள் பொன்னாலே
உத்திரமும் போதிகையும் யொக்கநிழல் காட்டத்
305 தங்காள் புரவியர்க்குத் தங்கச்சித்திரமும் பொன்னாலே
அன்னமுந் தாராவும் அருகில்வந்து வார்த்தைசொல்ல
மயிலும் குயிலுடனே புரவியர்க்கு மரு(வி)விளையாட
பஞ்சவர்ண நற்கிளியும் புரவியர்க்குப் பாங்காக வார்த்தைசொல்ல
குங்கும நாக்கிளியும் புரவியரேகூடி விளையாடி
310 தாதியரும் மூப்பியரும் தனக்கேத்த பாங்கியரும்
கொண்ட வடித்துக் கூடிவிளை யாடிவர
பாம்பையடித்துப் பறந்து (வி)ளையாடி வர
சோதிச் சதுரங்கம் சொக்கட்டான் தானாடி
அம்மானை யாடி அடவாகப் பந்தாடி
315 பந்து விளையாடயிலே பத்தினியாள் புரவியர்க்கு
பந்து தவறிடுமாம் புரவியர்க்குப் பகைவந்து சேர்ந்திடுமாம்
பந்து தவறியல்லோ புரவியர்க்குப் பஞ்சணைமேல் சாய்திடுவாள்
எடுத்தபந்து தவறிச்சென்று யேங்கியே தங்காளும்
பஞ்சணை மெத்தையின்மேல் பைங்கிளியாள் பள்ளிகொண்டாள்
320 மெத்தையின்மேல் பள்ளிகொண்டு புரவிமெத்த மனந்தளர்ந்து

கிலேச மனதிலெண்ணித் தங்காள் கிளிமொழியாள் கண்வளர்ந்தாள்
பொய்யுறக்கம் பொய்கையிலே பூங்குயிலாள் நல்லதங்காள்
தூங்குகின்ற வேளையிலே தங்காளொரு சொப்பனமுங் கண்டாளே.
ஆதேசங் கண்டாளே அருங்காணி நல்லதங்காள்
325 அம்புபட்ட மான்போலே தங்காள் சுழன்றுஎழுந்திருந்து
தன்னருகே தானிருக்கும் தாதிமுகம் நோக்கி
என் அண்ணா பொன்னசங்கரையும் அழைத்தோடி வாருமென்றாள்
அந்தமொழி கேட்டு அவள்தாழி ஓடிவந்து
பொன்னர் சங்கரடிபணிந்து புத்திபென்று வாய்புதைத்து
330 பொன்னாழி கையான் புகழ்பெரிய காராளர்
உன் தங்காள் புரவிதான் அழைத்தார் உங்களையும்
அந்தமொழி கேட்டவுடன் அண்ணபொன்னர் சங்கருந்தான்
தாண்டிக் குதித்துத் தங்கையுடன் பக்கல்வந்து
தங்கையரே யென்புறப்பே தானழைத்த காரியமென்
335 அண்ணாவி யென்புரவி யெனக்கான சகோதரமே

## தங்கை சொப்பனம் கண்டு அண்ணரிடம் சொல்லுதல்

வாள்வீரா பொன்னர்சங்கர் எனக்கு வாய்த்த சகோதரமே
காராளர் வாள்வீரா கதித்தமுடி வாள்வீரா
அஞ்சடுக்குப் பஞ்சுமெத்தை அதுநிறைந்த தூளிமெத்தை
பஞ்சுமெத்தை மேலிருந்து நான் பந்துவிளையாடையிலே
340 பந்து தவறியல்லோ நான் பஞ்சணைமேல் போய்ச்சாய்ந்தேன்
பஞ்சுமெத்தை மேல்படுத்து பள்ளிகொண்டேன் அண்ணாவி
நினைவு தெரியாமல் நித்திரைகள் செய்தேன் நான்
அந்தநல்ல வேளையிலே அண்ணாவி ஆதேசங் கண்டேநான்
நான் காணாத சொப்பனங்கள் கண்டெழுந்தேன் அண்ணாவி
345 நான் பொல்லாத சொப்பனங்கள் பொற்கொடியாள் கண்டேன்நான்
நான் ஆகாத சொப்பனங்கள் அனந்தலிலே கண்டேன்நான்
நான் பொற்கொடியாள் கண்டகினா அண்ணாவி பொய்யொருநாள் போகாது
நான் அருந்ததியாள் கண்டகினா அண்ணாவி அப்பறமே போகாது
350 நான் பத்தினியாள் கண்டகினா பழுதொருநாள் போகாது
நான் உத்தமியாள் கண்டகினா அண்ணாவி ஒருநாளும் பொய்யாது
என்னஎன்ன சொப்பனங்கள் கண்டாய் இளவரசு

என்னஎன்ன சோதினைகள் கண்டாய் இளங்கொடியே
நான்கண்ட ஆதேசம் அண்ணாவி நமக்கெழுத்தோ பொல்லாது
355 நான்கண்ட சொப்பனத்தை அண்ணாவி நானுரைக்கத்தான்கேட்டு
மேனாட்டு வேடுதளம் வெகுதளம் வரவுங்கண்டேன்
தலையூரு காளிமகன் சதிசெய்யவே நினைந்து
வேடுதளங் கூடியங்கே மெய்யாய்ப் பகைநினைந்து
நாடுமெத்தக் கூடியங்கே அண்ணாவி நல்லபகைநினைந்து
360 செம்ப கொல்லனாசாரி திருக்கொலத்துத் தட்டானே
தட்டானே தூதுவிட்டு அண்ணாவிதானுப்பக் கண்டேனே
மரமரக்கால் கொண்டுவந்து நம்மமாளிகையில் தானுவைச்சு
பொன்மரக்காலென்று சொல்லிப் போராடக் கண்டேன்நான்
மரமரக்கால் வைத்துப் பொன்மரக்காலென்று சொல்லி
365 சத்தியஞ் செய்யமுடி அண்ணாவிதான் போகக்கண்டேன்நான்
அத்தைபிள்ளை அத்தாவும் நம்மஅம்மான் பெருமாளும்
நம்ம செய்ய பெருமாளும சிலைக்கத்த வன்னியரும்
இந்த நால்பேரு காராளர் நம்மநாடுவிட்டு போகக்கண்டேன்
370 கோட்டையைவிட்டு அண்ணாவி குதிச்சோடக் கண்டேன்நான்
நம்ம பத்தாந்தளமாம் பாம்பேறு மண்டபமாம்
சுத்தாலே பட்டணமாம் நம்மசூழ்ந்த நெல்லிவளநாடு
நம்ம ஆனநெல்லி வளநாடு ஆனால் தாவக்கண்டேன்நான்
நம்ம வாள்சாத்து மண்டபம் வெவ்வாலடையக்கண்டேன்
375 நம்ம அரசாளு மண்டபமும் அடியோடே சாயக்கண்டேன்
நீங்கள் கச்சைக்கட்டும் சாவடியுங் கரையானரிக்கக் [கண்டேன்
நீங்கள் சிலம்பம் பொருதும்சித்திரச் சாவடியும்
அலறியிடிந்துவிழ ஆதேசங்கண்டேன் நான்
நம்மதலைக்கடையில் உறைக்கிணறு தகர்ந்துவிழக்கண்டேன்நான்
380 நம்மமுத்தத்தில் முருங்கைமரம் முறிந்து விழக்கண்டேன்நான்
நம்மமுத்தத்தில் முருங்கைமரம் முறிந்து விழக்கண்டேன்நான்
நம்ம ஆனைகட்டும் லாயமெல்லாமந்து விழக்கண்டேன்நான்
நம்ம குதிரைகட்டும் லாயமெல்லாங் குலைந்துவிழக் கண்டேன்நான்
மாடுகட்டும் லாயமெல்லாம் மண்மேடு ஆகக்கண்டேன்நான்
385 நீங்கள் வளநாட்டுக் கோட்டை விட்டுவழி நடக்கக்கண்டேன்நான்
நான்ஒருத்தியிருந்து உளறி அழுகக் கண்டேன்நான்
நான்கண்டதொரு ஆதேசம் அண்ணாவி நமக்கெழுத்துப்பொல்லாது

நான்பத்தினியாள் கண்ட அண்ணாவி பழுதொரு நாள்போகாது
நான் உத்தமியாள் கண்டகினா ஒருநாளும் பொய்யாது
390 என்னசெய்வேன் அண்ணாவி யென்புறப் போகாராளா
தங்களிவை யுரைக்கத் தம்பிசங்க ரேதுசொல்வார்
விருமாவின் கர்ப்பினையை அம்மாவிலக்க உபாயமில்லை
தலையிலெழுதினது தப்பாது தங்கையரே
எழுத்துவந்து சூழ்ந்ததென்றால் ஏதுசெய்வோம் தங்கையரே
395 காலம்வந்து நேர்ந்ததென்றால் தங்கையரே காத்தான்செயலேதோ
உன்வலது யென்வலது அல்லவம்மா உத்தமியே
பெருமாளுந் தேவியரும் பின்பிறந்த தம்பியரும்
வனவாசம் போயிருந்துவந்த கதைகேட்கிலையோ
நளராசன் பட்டகதை நாலுலகந்தானறியும்
400 விதியினால் வருவதெல்லால் தங்கையரேவெல்லமுடிபோதாது
உள்ள விதிப்படிதான் உள்ளபடி ஆகுதம்மா
தங்கையரே உந்தனுக்கு சலிப்பு வந்தவாரேது
மானத்தில் சீரழிந்து மழைக்கிப்பயந்த மென்றால்
வானவரும் தேவர்களும் வகையாயி நகைப்பாரே
405 மன்னுவகையானும் மன்னவர்வகையாயி நகையாறோ
தங்கையரே யென்புறப்பே சாதிமறிக்கொழுந்து
நாங்களிருக்க மெட்டும் யெண்ணமென்ன உந்தனுக்கு
தங்கையர்க்குப் புத்திசொல்லிதான் போனார்காரளர்
பொன்னசங்கர் போனபின்பு பொற்கொடியாள் நல்லதங்காள்
410 தன்னுடைய தாதியரும் தங்கை நல்லாளுத்தமியும்
பகடை விளையாடி பைங்கிளியாள் வீத்திருந்தாள்
அந்தநாள் சென்று அலைகதிரோன் போனபின்பு
மற்றுநாள் சென்று வாள்வரசு நல்லதங்காள்
வாழ்ந்துஇருந்தார்கள் வளநாட்டிலப்போது
415 அரசாண்டு காறாளர் அவரிருக்கும் நாளையிலே
மற்றுமொரு நாள்தனிலே மாட்டோடுங் கண்ணோடும்
மேனாடு தான்மவறுத்து வெறுப்புவந்து நேர்ந்ததினால்
நாட்டிலுள்ள வேட்டுவரும் நாங்களினி என்னசெய்வோம்
யொருமித்து வேட்டுவரும் நாடு என்றாய் மிகக்கூட்டி
420 தொக்கை யொருசீமை தென்ன வளநாடு

நெல்லி வளநாடு நேர்சூழ்ந்த கோனாடு
கோனாட்டுச் சீமையிலே கொல்லைகளு மெத்தவுண்டு
பொன்ன சங்கரென்று புகழ்வீரர் காராளர்
இருவரெண்டு பேரும் யிருக்குமந்த வளநாட்டில்
425 தேன் கொழுத்து வாழ்வார்க்கள்தென்னவர்கள் பட்டணத்தில்
கொள்ளையிட்டு வந்தமென்றால் நாமள்குபேரனாயி வாழ்ந்திடலாம்
வெறுப்புமிங்கே தின்றுவிடும் நாமள்வெகு காலம்
என்று சொல்லிநாட்டார்கள் இதமாகத் தான்பேசி
அப்போது தலையூருக்காளிமகன் தளம்பெரிய சேவுகனும்
430 என்னதான் யோசினைகள் எண்ணி நீர் நாட்டாரே
வளநாட்டுக் காராளர் வாள்சமத்து உள்ளவர்கள்
பொன்னசங்கரென்று புகழ்பெரிய காராளர்
சுத்தாலைப் பட்டணமுஞ் சூழ்ந்தநெல்லிவளநாட்டில்
அரசாண்டிருப்பார்கள் அண்ணன் தம்பி இருவருமாய்
435 கரிசுட்டுக் கரியளக்கும் கரிகால்சிவ சோழனைத்தான்
கண்டுமங்கே தான்பேசி காவலர்கள் பொன்னசங்கர்
பாதிகாவல் நம்முதென்று பட்டமங்கே கட்டிவைத்துத்
திக்கு விசயமுடன் செலுத்துகிறான் கண்டீரே
அவனுடைய சீமையிலே அண்ட இனிப் போகாது
440 அவன் அண்ணன் தம்பி இருவருமே ஆக்கரித்து வாளெடுத்தால்
நம்ம வேடுதளமத்தனையும் வேரறுப்பான் கண்டீரே
என்று தலையூர்க் காளிமகன் தானுரைத்தான் நாட்டார்க்கு
அந்தமொழி தான்கேட்டு ஆனதொரு நாட்டாரும்
தலையூர்க்காளி மகனைத் தான்வெகுண்டு ஏதுசொல்வான்
445 ஏதோவொரு வெள்ளாளன் எங்களை கருவறுக்க
நாடடா ரிளப்பமென்று நடுச்சபையில் சொன்னீரே
என்று சொல்லிநாட்டாரும் இருந்தசபை எல்லோரும்
வெகுண்டு எழுந்திருந்து வேறயொரு கூட்டமிட்டுத்
தலையநல்ல நாட்டாரும் தட்டானைத் தானழைத்துக்
450 கோனாட்டுச் சீமைக்கி ஒருகோளுகொண்டு வந்ததையென்றால்
வளநாட்டுச் சீமைக்கி நீவழக்குகொண்டு வந்தையென்றால்
எங்கள் நாட்டுக்கு நாடுநல்மானியம்தான் விடுவோம்
ஊருக்கு ஊருஉம்பளிக்கை நாம்விடுவோம் மானியம்

என்றுசொல்லி நாட்டாரும் எல்லோரும் தானுரைத்தார்
455 அந்தமொழி கேட்டு ஆனதொரு தட்டானும்
நாம் ஒருத்தன் இருந்தாலும் ஊடுழி காலைமட்டும்
நம்முடைய பிள்ளைக்கு நல்மானி யம்நடக்கும்
மகாராசன் நாட்டிலேதான் வாழ்ந்திருப்போமென்று சொல்லி
எண்ணியிருதயத்தில் இதமுடனே தட்டானும்
460 நல்லதென்று தட்டானும் நாட்டார் முகம்நோக்கி
கோளுகொண்டு வாரமென்று கோலியங்கே தட்டானும்
நல்லதென்று தான்நடந்தான் நாட்டாரைச் சம்மதிச்சு
மனமகிழ்ந்து ஓடிவந்து மாதாவைத் தானழைத்துத்
தாயார் முகம்பார்த்துத் தட்டானுமேது சொல்வான்
465 நாட்டாருங் கூட்டமிட்டு நலமாகத் தான்கூடி
என்னை மிகவழைத்து இதமாக இப்போது
நெல்லி வளநாடு நேர்சூழ்ந்த கோனாடு
கோனாடு ஆளுமந்தக் குன்னுடையான் பெத்தெடுத்துக்
காராளர் பொன்னசங்கர் கனத்தபிலவானை
470 கனத்ததொரு சீமைக்கிஒரு கலக்கங் கொண்டுவந்தை யென்றாள்
அந்த கோனாட்டுப் பட்டணத்தில் கொள்ளையிடம் வச்சையென்றால்
நாட்டுக்கு நாடு நலமான மானியமும்
ஊருக்கு ஊரு உந்தனுக்கு மானியமும்
கல்வெட்டுப் போட்டிடுவோம் கடலாழிக் காலமட்டும்
475 உத்தரிப்போ நாங்களிப்போ உந்தனுக்குப் பூமிதன்னை
கணக்கர் தமையறியக் கையெழுத்துப் போட்டிடுவோம்
நாட்டாரும் இவ்வசனம் நன்றாகத் தானுரைத்தார்
தட்டானு மிப்போ தாயாருட தானுரைக்க
அந்தமொழி கேட்டு அவன்தாயாரேது சொல்வாள்
480 எந்தன் மகனே இதமாகக் கேட்டருளி
அந்தநெல்லி வளநாட ளனேறான காராளன்
வரத்தால் பிறந்தவர்கள் மன்னவர்கள் வாள்வீரர்
அந்தவளநாடன் சீமையிலேநீ வழக்கெடுக்கப் போகாது
அந்தக் காராளர்சீமையிலேநீ காலெடுத்து வையாதே
485 வெள்ளாளன் சீமைக்கியொரு வினைகொண்டு போகாதே
அந்தக் குன்னுடையான் சீமையிலே குறுக்கே நடவாதே

அந்தக் கோனாட்டுச் சீமையிலே குறுக்கே மிதியாதே
அவனுடைய புத்திரர்கள் ஆரொருவர் கண்டாலும்
வெட்டி எறிந்திடுவார் வீசிடுவார்ரெண்டு துண்டாய்
490 ரெண்டுதுண்டாய் வெட்ட(டி) நறுக்கி யெறிந்திடுவார்
போகமுடி வேண்டாமடா பொன்னருட சீமையிலே
போகமுடி வேண்டாமடா பொன்னருட சீமையிலே
சங்கருட சிமையிலே தான்போக வேண்டாமென்றாள்
அந்தக் காவலர்கள் சீமையிலே காலெடுத்து வையாதே
வாள்வீரா பொன்னசங்கர் வாளால் மிதித்தவர்கள்
495 அவர்களுட நாட்டில் அடியெடுத்து வையாதே
போகாதே என்று சொல்லிப் புத்திமதி தானுரைக்கச்
செம்பகொல்ல னாசாரி சீறியே தான்பார்த்து
நாட்டாருங் கூடிநமக்கு நல்லதொரு மானியமும்
கல்வெட்டிப் போட்டுக் கையெழுத்துத் தான்போட்டு
500 உத்தமர்கள் தானுரைக்க உண்மை உனக்குரைத்தால்
தாயென்று சொல்லித் தனதுபட நானுரைத்தால்
உழைக்கிற நாய்போலே ஊதாரி போடியென்றான்
தடையாகச் சொல்வாயோ சண்டாளி என்று சொல்லித்
தள்ளி அடித்துத் தாயாரைத் தள்ளிவிட்டான்
505 வாச்சி யுளியெடுத்து அவன்வாசலிலே வந்துநின்று
வாசலிலே நிற்குமந்த மாவிலிங்கந் தன்மரத்தை
வாச்சியினால் வெட்ட அவன்மாதாவும் ஓடிவந்து
நான் மஞ்சனென்று வளத்த மாவிலங்க மரந்தனையும்
பிள்ளையென்று நான்வளத்தேன் பெரும்பாவி வெட்டாதே
510 மாபாவி சண்டாளா மரத்தை யிங்கேவெட்டாதே
நாட்டார் சலுகைகொண்டு நான்வளர்த்த மரந்தனையும்
வெட்டமுடி வேண்டாநீ மேனாட்டு வேட்டுவர்மேல்
தலையூரு நாட்டார்மேல் தடைபண்ணி யாணையிட்டாள்
மூணாணை யிட்டு முக்காலுந் தான்மறித்தாள்
515 நாளாணை யிட்டுமவள் நடுவாலே போய்விழுந்தாள்
செம்பக்கொல்லன் ஆசாரி சிறியவன் தான்பார்த்துக
கன்னத்தின் மேலறைந்து கடக்கவே தள்ளிவிட்டான்
மாவுலிங்க மரத்தைவெட்டி மரக்கால் தனைக்கடந்து

மரக்கால் திருக்கெடுத்து மாபாவி செம்பகொல்லன்
520 கால்மாத்துப் பொன்னெடுத்துக் கம்மாளன் கைப்பிடித்து
மேல்பூச்சுத் தான்பூசி மின்ன லொளிபரக்கக்
கண்டுதான் செம்பகொல்லன் கணகள் களிகூர
பொன்னர் குடிகெடுக்கப் புரந்தமரக் காலெனவே
சங்கர் குடிகெடுக்கச் சமைந்தமரக் காலெனவே
525 சந்தோஷப் பட்டுத்தட்டான் மனமகிழ்ந்து
கவுசினையை மேல்போட்டுக் கட்டி மரக்காலே
மாளிகையில் வைத்து மன்னவன் தட்டானும்
தாயாரைத் தானழைத்துத் தட்டானு மேதுசொல்வான்
கட்டுச்சோறு கட்டியென்னைக் கடுக அனுப்புமென்றான்."
530 அந்த மொழிகேட்டு அவன்மாதா வேதுசொல்வாள்—
"என்ன யிருக்கவடா என்னமதி நீநினைந்தால்
உனக்குக் காலம்வந்து சூழ்ந்ததினால் கட்டுச்சோறு கட்டுமென்றாா்
போங்காலம் வந்ததினால் போமென்று சொல்லுகிறாய்
நான்சொல்லுகிற வார்த்தையடா உன்செவியில் நுழையவில்லை
535 வளநாட்டுச் சீமைக்கி வஞ்சினைகள் பண்ணாதே
காராளர் சீர்மைக்கி நீ (கலக்)கலக்கங்கொண்டு போகாதே
வெள்ளாளன் சீர்மைக்கி வினையங்கள் வையாதே
ஆணையிட்டித் தான்தடுத்தால் அடிக்கிறாய் வாய்மேலே
வாய்மேலே நீயடித்து வாய்மதங்கள் பேசுகிறாய்
540 என்னோடே சொல்லாதே எப்போக்குப் போடா நீ"
என்றுசொல்லி அவன்தாயார் இல்லறமேபோய்ப்புகுந்தாள்.
போய்ப்புகுந்து தாயாரும் பொங்கியே தானழுதாள்
மாரளவு கண்ணீரும் மங்கையவள் தானழுதாள்—
"பிள்ளையென்று என்வயத்தில் பெரும்பாவி தான்பிறந்தாய்
545 மைந்தன்என்று என்வயத்தில் மாபாவி தான்பிறந்தாய்
தாயுரையைக் கேளாமல் தட்டவட்டஞ் சொல்லுகிறாய்
என்னசெய்வேன் யீஷ்வரரே யிவன்தலையில் நீர்தாமும்
காராளர் கைதனிலே இவனைக் கண்டதுண்டமாகவெட்டி
வாள்வீரர் பொன்னசங்கர் வாளுக்கிரையாக
550 எழுதினீரோ விருமாவே யிவன்தலையில் நீர்தாமும்"
என்றுஇவன் தாயார் இருகண்ணால் நீரோட

அவள் பானை யிறக்கிவைத்துப் பழவரிசி தானெடுக்க
அந்தநல்ல வேளையிலே அன்பான மேகெவுளி
அலைகொட்டிச் சொல்லிடவே அவளங்கே திகைத்துநின்று
555 எடுத்த அரிசிதன்னை யேந்தி முறத்தில்வைத்து
மகனை மிகப்பார்த்து வாயி லறைந்துகொண்டு
முகத்தி லறைந்துகொண்டு முறையோ வெனவழுது
"நான் அரிசி யெடுக்கையிலே அலறுதடா மேகெவுளி
இந்த மரமரக்கால் கொண்டு வளநாட்டில் போகாதே
560 இந்தப்பூச்சுமரக் காலெடுத்துப் பொன்னரண்டே போகாதே
மோசம்வருந் தம்பியரே யிப்ப மேகெவுளி சொல்லுதடா
இந்த நாட்டா ருரைகேட்டு நீ நல்லபதம் நீயெழந்து
போகாதே தம்பியரே புத்தியல்ல உந்தனுக்கு
அந்தக் காராளர் தம்மிடத்தில் கண்ணாளா போனமென்றால்
565 கண்ணாளா வந்தனென்று கனக பிரியமுடன்
வேண்டியதெல் லாங்கொடுப்பார் வெகுமா னியம்விடுவார்
காராளர் இருவருக்குநீ கலக்கம் நினையாதே
வெள்ளாளர் ஆனவர்க்கு ஒருவேதினையை மூட்டாதே
என்று அவன்மாதா இப்படியே தானுரைத்து
570 அவள்கை யைநெறித்துக் கன்னத்தின் மேலேவைத்து
ஆருந்துணை யில்லையென்று அலறி மிகவழுதான்
செம்பகொல்ல னாசாரி சீறி யவன்கேட்டுத்
தலைமயிரைத் தான்பிடித்துத் தவடையிலே தானறைந்து
கட்டுச்சோறு கட்டுமென்றால் களரியிங்கே கூட்ருகிறாய்
575 மேகெவுளி சொல்லுதென்று மிரட்டியிங்கே பேசுகிறாய்
தட்டவட்டம் பேசாதே சாதஞ்சமையு மென்றாள்
அப்போது மாதாவும் அழுதகண்ணீர் நீரோட
சங்கட்ட மாகவுமே சாத மிகச்சமைத்து
இவனுக்குக் காலம்வந்து சூழ்ந்ததென்று கட்டுச்சோறு கட்டிவைத்தார்
580 செம்பகொல்லன் சாப்பிட்டுத் தீரன் யிளப்பாறித்
தாயாரைத் தானழைத்து நான்தடப்பயணம் போறதுக்குக்
கட்டுச்சோறு தாருமென்றான் கடுகடுத்த மாதாவும்
கட்டுச்சோறு தானெடுத்து அவள் கையிலே குடுக்கையிலே
தவறித் தடுமாறித் தரையிலே வீழ்ந்திடவே
585 தாயாரு மப்போது தலையிலடித் துக்கொண்டு

ஒடம்பு தடுமாறி ஒருகை தலையில்வைத்து
நீதூரவழி போறதுக்கு நீதூக்கிவந்த சோறுதன்னை
தவறி விழுந்ததுகாண் தடையல்ல உந்தனுக்கு
நீபோகமுடி வேண்டாமடா பிழைமோசம் வந்துவிடும்
590 நீதனித்துவழி போறதுக்குத் தர்மமல்ல என்மகனே
பொறுமை பொறுத்த பொன்னம் பலசுவாமி
அவருடைய வளநாட்டுச் சீமைக்கி ஒரு வஞ்சினையைப் பண்ணாதே
காராளர் வளநாட்டில் யொருகலககல் வையாதே
என்றுசொல்லித் தாயாரும் இப்படியே சேதிசொல்லிச்
595 சேதிதனைக் கேட்டுச் செம்பகொல்ல னெழுந்திருந்து
எட்டி உதைத்தான் யிடறித் தரையில்விழ
தரையில் விழுந்தவரைத் தலைமேலே தானறைந்து
உதாசீனமாய்த் தான்பேசி உதைத்தவளைத் தான்பார்த்து
நீ போனதடம் மீளாமல்போய்வா எனஉரைத்தாள்
600 தாயை உதைத்தான் தான்வரவும் போறானோ
என்றுஅவன் மாதாவும் இப்படியே தானுரைக்க
அடி குணங்கெட்ட மூதேவி குறுக்கேதடை பண்ணுவையோ
இவள் தடைதனிலே நிற்பேனோ தான்போறே னென்றுசொல்லி
மனைதனிலே உள்புகுந்து மரக்கால் தனையெடுத்து
605 கக்கத்தில் தோள்போட்டுக் கட்டுசோறு தனையெடுத்து
கடுங்கோபங் கொண்டு கடுகிவழி போகையிலே
அவன்மாதாவுந் தானெழுந்து வாசலிலே வந்துநின்று
போற வழிபாத்துப் பொட்டெனவே ஏதுசொல்வாள்—
"நீபோவாய் பொருக்காளிவாய் பொன்னருட வாளுக்கிரையாவாய்
610 அந்த வாள்வீரர் தம்பிசங்கர் வாளுக் கிரையாவாய்
நீ போனதடமொழியப் பின்திரும்பி வாறதில்லை
அந்த இருவருட வாளாலே யிருதுண்ட மாய்விழுவாய்
என் கும்பி பறக்குதடா கூருரெண்டாய்ப் போய்விழுவாய்
மாரு தடவியவள் மலையிலே வீத்திருந்தாள்
615 தாய் சொல்லைத் தட்டியவன் தட்டான் வழிநடந்தான்
போற தடந்தனிலே பொல்லா நிமித்தமங்கே
காகம் வலமாகக் கருக்குருவி தானிடமாக
கெருடன் வலமாக கௌட்டோரி முன்வர

வால்நீண்ட கரிக்குருவி வந்து வலமாக
620 நரையான் வலமாக நல்போத்து தாணிடமாக
ஓரி குறுக்கைவர ஒற்றைப் பார்ப்பான் எதிர்வாறான்
கருநாயு மோடிவந்து அவன்கண்ணு முன்பாகக்
கால்தூக்கி ஊளையிடு அவன்கண்ணு முன்பாக
யெண்ணை தலையிட்டு எதுக்கவரக் கண்டாளே
625 இத்தினை சயனமங்கே யெதிரேவரக் கண்டானே
திரும்பி வருகாமல் தீபாவி சண்டாளன்
ஊர்தேடிப் போகாமல் ஓடி வழிநடந்தான்
அவனுக்குப் பொல்லாங்கு ஓலைப்பிடனியிலேவந்திருக்க
மாத்தானுங் காலனும் அவனை வாவென்று அழைக்கையிலே
630 போங்காலம் வந்ததினால் புத்திகெட்டு மெய்மறந்து
சவனத்தடை பாராமல் தானடைந்தான் செம்பகொல்லன்
செம்பகொல்லன் போன சேதி தனைக்கேட்டு
நாட்டாருங் கூடி நல்லதொரு கூட்டமிட்டு
நாட்டுக்கு நாடு நல்லதொரு ஓலையிட்டு
635 ஓலை மிகப்பார்த்து உத்தமர்கள் நாட்டார்கள்
சந்தோஷ மாகத் தங்கள் படைபெருக்கிக்
கூட்டங்கள் தான்கூடிக் கொம்பு மிகஊதி
வெங்கலத் தமுக்கடித்து விருது மிகப்பிடித்து
கும்பு கும்பாக நாட்டார் கூடிப் படைதிரட்டி
640 நாடு ஒருமித்து நல்லபடைகூடி
இருக்குமந்த வேளையிலே இயல்பான செம்பகொல்லன்
சீக்கிரமாய்த் தானடைந்தான் செம்பகொல்ல னாசாரி
சீமைதனை யாளும் சிவசோழ ராசனுக்குக்
கரிசுட்டுக் கரியளக்கும் கரிகால்சிவ சோழனுக்கு
645 காணிக்கை என்றுசொல்லிக் கருவலம்போல் கொண்டுவந்தான்
உமிக்குத்திக் கடமைகட்டும் உத்தமர்கள் சிவசோழனுக்கு
பொழுது விழுகுதென்று பொட்டெனவே தானடந்து
கால்விசறி யேநடந்து காகமெனை ஓடிவந்து
வளநாட்டைத் தேடி வந்தானே செம்பகொல்லன்
650 பொழுதல்ல ஆச்சுதென்று பொன்னருட கோட்டையிலே
அவர் மறவிலிருந்து மத்தாப்நாள் போவமென்று
சதிமானமே நினைத்து தட்டான் வருகையிலே

வளநாடு பட்டணத்தை வந்தடுத்தான் தட்டானும்
கோட்டையைக் கண்டானே கோலுகொண்டு வந்ததட்டான்
655 கண்டு மனங்கலங்கிக் கருக்கிட்டுத் தட்டானும்
மனந்தேறிச் செம்பகொல்லன் வந்தானே சீக்கிரமாய்
வளநாட்டுக் காராளர் வாய்த்ததொரு மேட்டிலேதான்
வந்ததொரு தட்டானே வாய்த்ததொரு காவலர்கள்
தடுத்துமந்தக் காவலர்கள் தான்போக வேண்டாமென்றார்
660 பொழுது விழுந்ததினால் பொங்கமுடன் இங்கிருந்து
போகவேணுங் காவலரே போக அனுப்புமென்றான்
பொழுது விழுந்துதென்று பொன்னருட கோட்டையிலே
தங்கியிருந்து தான்போக வென்றுசொல்லி
சதிமான மேனினைந்து தட்டானும் உள்புகுந்து
665 தலைவாசல் காத்திருக்கும் தார்வேந்தர் தாங்கண்டு
வேத்தானைக் கண்டு வெளியேதள்ளி விட்டார்கள்
தலைவாசல் காராளர் தட்டானைக் கண்டவுடன்
ஆரடா சொல்லடா அஞ்சாமல் இங்கு வந்தாய்
கட்டடா வெட்டடா காவலிலே போடுமென்றார்.
670 அப்போது தட்டானும் அஞ்சி மிகநடுங்கி
உள்ளம் நடுங்கி உடம்பு தடுமாறியவன்
கால்கைகள் தானடுங்கி கண்கள் வெரிதாக்கி
நெஞ்சு பரையபரைய நெடுமூச்சுத் தானெரிந்து
வாய்கள் குழரி மனம் நடுங்கித் தட்டானும்
675 கரிச்சுட்டு கரியளக்கும் கரிகால்சிவசோழனுக்கு
உமிக்குத்திக் கடமை கட்டும் உத்தமர்கள் சிவசோழனுக்கு
காணிக்கை கொண்டுவந்தேன் சுடுகிப் பொழுதாச்சு
கோட்டையைக் கொண்டுவந்தேன் கொத்தவனே நீர்கேளும்
இது பொன்னசங்கர் கோட்டை யென்று புரத்தியிலே சொன்னார்கள்.
680 ஆகையினாலிப் போதுடமைக் கடைக்கலமாய் வச்சிருந்து
விடிந்த பிற்குதட்டான் வெளிப்பட்டுப் போறமென்றான்
ஆண்டவனே யிப்போ அப்பணையோ பண்ணுமென்றான்
அந்த மொழிகேட்டு ஆனதொரு காவலர்கள்
சொன்ன மொழிகேட்டுத் தூதுவர்கள் தானுமங்கே
685 நம்மபொன்னின் வளநாட்டார்க்குப் போதவே சொல்லவென்று

நம்ம சின்னண்ணன் ஆண்டவர்க்குச் சேதிசொல்லி வாருமென்று
கூடிவழிநடந்து கொத்தவர்களோடிவந்து
பொறுமை பொறுத்த பொன்னசங்கர் கிட்டவந்து
அட்டம் பணிந்துமவன் ஆசாரம் போத்திசெய்து
690 அந்தநல்ல வேளையிலே ஆனபொன்ன சங்கருமே
அண்ணனுந் தம்பியரும் அத்தைபிள்ளை மூவருமாய்
மச்சினனுந் தானு மகிழ்ந்திருந்து விளையாடி
சித்திரமுகச் சாவடியில் தென்னவர்கள் வீத்திருந்தார்
புலிமுகச் சாவடியில் புண்ணியர்கள் வீத்திருந்தார்
695 அந்தநல்ல வேளையிலே அவன் தூதனோடிவந்து
ஆசாரம் போற்றி அடிபணிந்து தெண்டனிட்டு
ஆண்டவரே ஆண்டவரே அழகுபொன்னாண்டவரே
சின்னண்ணன் வாள்வீரா சிறுபுலி குமாரசங்கர்
ஆரோ தெரியாது அசலாளொருவன் வந்தான்
700 மேற்கேயிருந்து மேலாளொருவன் வந்தான்
தலைவாசல் குள்புகுந்து தான்வருகும் வேளையிலே
ஆரடா வென்று அதட்டியே நாங்களுந்தான்
அப்பறமே தள்ளிவிட்டோம் அவன் அஞ்சி மிகநடுங்கி
மிரண்டு பயந்துமவன் வேத்து விறுவிறுத்து
705 மண்டலத்தை ஆளும் மகராச வேந்தனுக்கு
சொன்னமொழி தவறாத சோழ மகாராசனுக்கு
காணிக்கை கொண்டு வந்தேன் கடுகிப் பொழுதாச்சுதென்று
பாதிகாவல்காரர்க்கும் பார்வேந்தர் காராளர்
பொன்னருட கோட்டையிலே போயிருந்து போவமென்று
710 வந்தானொருவன் வாள்வீரா என்று சொன்னான்
அந்தமொழி கேட்டு ஆனதம்பி சங்கருந்தான்
கண்கள் சிவந்திடுமாம் சங்கருக்குக் காந்தாளமாயிடுமாம்
மீசை துடித்திடுமாம் மேல்புருவந் துள்ளிடுமாம்
அய்வறளிக் கண்கள்ரெண்டும் செவ்வரளி பூத்தாப்போல்
715 பொங்குதிரேகமெங்கும் சங்கருக்குப் பொழியிது மார்மேலே
சிந்துதே கோபம் சங்கருக்குச் சிதறுது கண்கள் ரெண்டும்
மந்திரவாள் தம்பிசங்கர் வலதுகையில் தானெடுத்து
மண்டியிட்டுக் கொக்கரித்து வந்துசொன்ன தூதுவரை

கூறுரெண்டாய் வீசுதற்குக் குலாவி யெழுந்திருச்சு
720 கண்டு பொன்னாண்டவருந் தம்பிகையைத் தான்பிடித்துக்
குணமாக வார்த்தைசொல்லிக் குலவீரா தம்பியரே
வையக மானுமந்த வாய்த்த குலராசனுக்குச்
சொன்னமொழி தவறாத சோழமகா ராசனுக்குக்
கரிகட்டுக் கரியளக்கும் கரிகால் சிவசோழனுக்கு
725 உமிக்குத்திக் கடமைகட்டும் உத்தமர்கள் சோழனுக்கு
காணிக்கை கொண்டுவந்தால் நாமள்காத்திருக்க வேண்டாமோ
பாதிகாவல் நம்முதென்று பட்டங்களுங் கட்டிநிற்கக்
கோவிக்க ஞாயமல்ல குலசூரா தம்பிசங்கர்
கையைப் பிடித்துத் தம்பியர்க்குக் காரியமாய் வார்த்தைசொல்லி
730 கையி லிருக்குமந்தக் கனத்ததொரு வாளதனைப்
பொன்னாம் பலசுவாமி பொங்கமுடன் தான்வாங்கி
தம்பியரைத் தானிறுத்தி தாழவந்த தூதனுக்கு
பொறுமை பொறுத்த பொன்னாம் பலசுவாமி
வந்ததொரு ஆளதனை மறிக்கமுடி வேண்டாம்நீ
735 சிறுபிள்ளை புத்தியினால் தம்பி சீறியெழுந்திரிச்சான்
அதுகொண்டு நீங்கள் அஞ்சமுடி வேண்டாமப்போ
வாயுவேக மாய்ப்போய் வந்ததொரு ஆளுதனை
செம்பகொல்ல னாசாரி திருக்குளத்துத் தட்டானே
சீக்கிரமாய் இப்ப திரும்பிவரச் சொல்லுமென்றார்
740 அந்த மொழிப்படியே அவர்தூதன் தானோடிச்
சீக்கிரமாய் நீ போடா சின்னண்ணரையுங் காணாமல்
சொன்ன வுரைகேட்டுத் தூதனவன் உள்புகுந்து
நெஞ்சு பறையறைய நினவு தடுமாறிச்
சின்னண்ணரைக் காணாமல் சிந்தைநொந்து உள்புகுந்து
745 ஒண்டி ஒடுங்கி ஒளிந்துவந்து தான்சேரச்
செம்பகொல்ல னாசாரி திருக்குலத்துத் தட்டானும்
பொறுமை பொறுத்தருளும் பொன்னாண்டவரை வந்துகண்டு
வந்ததொரு தட்டானும் வாய்விசனங் கேட்டாராம்
வந்ததொரு தட்டானும் மனம்நடுங்கி யேதுசொல்வான்—
750 "மேற்கே வெகுதூரம் வெத்திபெறும் நன்னாடு
குடித்தினமாய் நானிருந்தேன் கொள்ளக் கிடையாமல்
தேசபதி ஆளுகிற செகசோழ ராசனுக்குக்

கரிசுட்டுக் கரியளக்கும் கரிகால் சிவசோழனுக்கு
வையகந் தனையாளும் மதலைசிறு சோழனுக்குப்
755 பொன்னளக்க வேணுமென்று பொன்மரக்கா லுண்டுபண்ணிக்
காணிக்கை கொண்டுவந்தேன் கதிரோன் மறைந்ததினால்
உங்கள் பாதிநல்ல காவலிலே பாங்காக நானிருந்து
உங்க ளடைக்கலமாய் உங்கள் மறவிருந்து
ராத்திரிக்கு இங்கிருந்து நாளை விடிந்தவுடன்
760 பொன்மரக்கால் நான்வாங்கிப் போறேனெனஉரைத்தான்
அந்த மொழிகேட்டு அழகுநெல்லி வளநாடன்
அப்படியே நீயிருந்து அடுத்தநாள் போகுமென்றான்
அப்போது தட்டானும் அன்பாய் மனமகிழ்ந்து
மரக்கால் அரமணையில் வாங்கியே வையுமென்றான்
765 அப்போதுபெரி யாண்டவனார் ஆனமரக் கால்தனையே
*தங்கா ளரமணையில் தான்வாங்கி வையுமென்றான்
தங்கா ளதுகேட்டுத் தன்புறப்பை நொந்துகொண்டு
அச்சமில்லா நாட்டுக்கு அண்ணாவி அழிவுவந்து
அழியா நகரிக்கு அண்ணாவி அச்சங்கள் தேடிக்கொண்டாய்
770 கலங்கா நகரிக்கு அண்ணாவிகலக்கம் வந்துநேந்துதிப்போ
நச்சுமுள்ளுக் கொண்டுவந்து தட்டானை நாட்டினாய் அண்ணாவி
தட்டான் சதிகாரன் சதிசெய்வான் தப்பாது
காசிககுப் போனாலும் கம்மாள னாகாது
கம்மாளன் நேசம்அண்ணாவி கருத்திலையும் வையாதே
775 கர்த்தர் விதிப்படியாய்நமக்கு அவன் காலனென வந்தானே
நான் இருந்தநாள் போதுமென்று யெழுதிவிட்டார் தூதோலை
நாம் வாழ்ந்தநாள் போதுமென்று வரவிட்டார தூதோலை
ஆதிசிவன் மாயவரும் அந்த அன்பான தேவர்களும்
அந்த ஓலைச்சுருள் படிக்கி அண்ணாவி உட்படுத்திக் கொண்டாயோ
780 நமக்கு மண்ணும் பகையாச்சோ அண்ணாவி வாழ்ந்தநாள்
நமக்கு வீடுபகையாச்சோ நமக்கு விதித்தவிதிதானோ
நமக்கு வீடுபகையாகி அண்ணாவி வேடுபகையாச்சோ
விதியை நினைந்துகொண்டு அறியபுரவியரும் மெத்தமனம் சலித்து

---

* தங்களரமணையில்.

தங்காள் புரவியரும் சலித்துநிற்கும் வேளையிலே
785 பொன்னாழி கையான் பொன்னம் பலசுவாமி
தங்காள் புரவியரே தான்பார்த்து யேதுசொல்வார்
ஆதிசிவன் மாயவரும் அன்பான தேவர்களும்
தேவர்படை திரட்டியிங்கே திரமாக வந்தாலும்
தலையூருக் காளிமகன் தனதாய்ப் படையெடுத்து
790 மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் வந்தாலும்
நாங்கள் இருவரிருக்க மட்டும்யெண்ணமென்ன தங்கையரே
நம்ம அத்தைபிள்ளை அத்தாவும் நம்மஅம்மான் பெருமாளும்
நம்ம செய்ய பெருமாளும் சிலைக்கேத்த மைத்துனரும்
நாங்கள் இருவரிருக்க மட்டும் அச்சமென்ன தங்கையரே
795 நம்ம கடிங்காலுந் சாம்பானும் நமக்குக் கதித்ததொரு ஊழியங்கள்
அவன் எட்டானைப் பிலமுடையான் யெதுத்தவர்கள் கோடாலி
இத்தினை பேரிருக்க யெண்ணமென்ன தங்கையரே
தங்கையர்க்குப் புத்திசொல்லிச் சதிரமுடி பொன்னாண்டார்
தட்டான் தனைஅழைத்துச் சதிரமுடிக் காராளர்
800 அரிசிப் படியும் ஆசாரிக் கைகுடுத்து
சமைத்துண்டு வாருமென்று சதிரமுடிப் பொன்னசங்கர்
நல்லதென்று செம்பகொல்லன் நடந்தான் குளக்கரைக்கி
சாதஞ் சமைத்துண்டு சதிரான தட்டானும்
ஆசார வாசலுக்கு அன்பாக முன்னேவந்தான்
805 கண்டுமங்கே பொன்னாண்டார் கடக்கநிற்குந் தட்டானும்
சவுக்கையிலே நீபடுத்துத் தானுறங்கு மென்றுசொன்னார்
நல்லதென்று செம்பகொல்லன் நலமாகப் பள்ளிகொண்டான்
பக்கத்தில் தானிருக்கும் பாங்கான கூடமதில்
வேட்டநாய் ரெண்டுஅங்கே விதமாகக் கட்டிநிற்க
810 அந்த அழகு சித்திர மண்டபத்தில் பொன்னர் அழகாகப்
பள்ளிகொண்டு காராளர் பாங்காகத் தானிருந்தார் [பள்ளிகொண்டார்
பொறுமை பொறுத்த பொன்னாம் பலசுவாமி
நித்திரை செய்யயிலே நீதிகெட்ட செம்பகொல்லன்
தூக்கங்க ளில்லாமை தட்டான் சோதித்துப் பாத்திருந்து
815 பாதி பதினஞ்சு பதினஞ்சா நாழிகையில்
தட்டா னெழுந்திருந்து தலைக்கடையில்வந்து நின்று

சுத்தியெங்கும் பாத்து தட்டான்சூது மிகநினைந்து
சலதாரைக் கல்லே தான்பேத்துத் தட்டானும்
பொன்னரு பூமுடிக்கிப் பூச்சூட வேணுமென்று
820 கல்லு மிகவெடுத்துக் கடுகி வருகையிலே
சித்துளி நாய்கண்டு சீறியங்கே [1] தானுழைக்கச்
சோணங்கி நாய்கண்டு துள்ளி யெழுந்திருந்து
பாசைக் கருத்துடனே படுத்திருக்கும் நாய்களெல்லாம்
மூளிநல்ல நாய்களுந்தான் முருகி யெழுந்திருந்து
825 முருகித் [2] தளைவுளைத்து முனைவாலைத் தான்சுழட்டி
அரவமிட்டுத் தானுளைத்து ஆக்கரித்து நிக்கையிலே
தட்டானுங் கண்டு சதிகேடன் தான்பயந்து
பின்னைவைத்த காலை முன்னைவைக்க மாட்டாமல்
நெஞ்சு பறையறைய நெடுமூச்சுத் தானறிந்து
830 மரம்போலே நின்றான் மதிமயங்கித் தட்டானும்
பனந்துண்டம் போலே [3] பருங்கல்லைத் தலையில்வைத்து
நின்றான் மயங்கி நெடுநேரம் மெய்மறந்து
ஆளைக் கண்டுநாய் அருண்டு உளைக்கையிலே
பொறுமை பொறுத்த பொன்னம் பலசுவாமி
835 பொட்டனவே கண்முழித்துப் போர்வை தனைநீக்கிப்
பார்த்தார் பெரியாண்டவனும் தட்டான் பனைமரப்போல் நிற்கிறதை
கண்டு பொன்னாண்டவரும் கள்ளன்இவ னென்றுசொல்லி
அதட்டியே பொன்னாண்டவரும் ஆரடா வென்றுசொல்லி
வேட்டைநாய் அத்தினையும் வெகுண்டு [4] மிகஉளைக்க
840 செம்பகொல்ல னாசாரி தேக்கமிட்டுத் தான்பயந்து
அஞ்சி நடுங்கி அடித்துடைகள் கால்நடுங்கி
ஆருமில்லை ஆண்டவனே அடியேன்நான் செம்பகொல்லன்
கூடத்தில் படுத்திருந்தேன் கொசுவு கடித்ததினால்
வெகுநேரம் தூக்கமில்லை வேதினைக ளானதினால்
845 சுலைக்குச் சரம் வேணுமென்று தானெழுந்து இங்குவந்தேன்
கல்லெடுத்து அங்கே கடுகிநான் போவமென்றான்
வேட்டைநாய் கண்டு வெகுவாய் உலைக்குதய்யா
அங்கே வருமென்றான அடியெடுக்க ஒட்டுதில்லை

---

1 தான்குரைக்கச் 2 தலைஉலைத்து 3 பாறாங்கல்லைத் 4 குரைக்க

கூடத்தில் போவமென்றான் நாய் குரல்விட்டு உலைக்குதய்யா
850 தேவரீர் பேசுகையில் தெளிவுவந்து தென்றனுக்கு
என்று தான் செம்பகொல்லன் எடுத்துரைக்கத் தான்கேட்டு
" அல்லடா தட்டானே அறிவுகெட்ட மூடாநீ
வெளியேநீ போவமென்றால் என்னை விருசாய் யெழுப்பாமல்
தலைக்குச் சரம் வேணுமென்றால் தானெழுப்பிச் சொல்லாமல்
855 நீ வாயறம் பண்ணாமல் மறுவார்த்தை பேசாமல்
நீ பேசாமலெழுந்ததுக்குப் பிழைமோசம் வந்துவிடும்
நாயைக்கட்டி யிருந்ததினால் நீநாணமாய்ப் பேசுகிறாய்
இல்லாதே போனால் யெங்கைதப்பிப் போறாய்நீ
உன்னைச் சந்துசந்தாய்ப் பேத்தெறியும் நீதனித்து யெழுந்ததுக்கு
860 என்று பொன்னாண்டவரும் இதமாகத் தானுரைத்து
உழைக்குமந்த நாய்களெல்லாம் உத்தமனார் தானடக்கித்
தட்டானைக், கூடத்தில் தான்போகச் சொன்னாராம்
கூடத்தில் தட்டானுங் குறுகிமனந் தானடுங்கிப்
பதைபதைத்துத் தட்டானும் பண்பாய்ப் படுத்திருந்து
865 எப்போது விடியுமென்று எண்ணியவன் வீற்றிருந்தான்
விடியநல்ல காலமதில் பொன்னர் விருசாயெழுந்திருந்து
அந்தநல்ல வேளையிலே ஆனதொரு செம்பகொல்லன்
வாரியெழுந்திருந்து மன்னவனார் கிட்டவந்து
பொறுமை பொறுத்தருளும் பொன்னம் பலசுவாமி
870 ஆண்டவனே என்சாமி யான்போக வேணுமென்று
நல்லதென்று பொன்னாண்டார் நலமா யெழுந்திருந்து
தங்கா ளரமணைக்கிச் சதிராய் நடந்துவந்து
மரக்கால் தனையெடுத்து வளநாடன் கைகொடுத்தான்
தட்டானுங் கைவாங்கிச் சதிமாயந் தானினைந்து
875 பொன்மரக்கால் கைவாங்கிப் போட்டானே பூமியிலே
அடித்து விழுந்தான் அய்யோ சிவனேயென்றான்
வாயிலே மண்போட்டு மண்ணில் பிரண்டழுதாள்
நிண்ணார் பிடிக்க நிலத்திலே போய்விழுந்தான்
கெட்டேன் சிவனேயென்பான் கேடுவந்து நேந்துதென்பான்
880 அடக்கலமாய் வச்சபொருள்நீ அடக்கிக் கொண்டாய்
வச்சா ருடைமையை வயிறெரியச் செய்தாயே

ஊரா ருடைமைக்கி நீ பேராசைப்பட்டாயே
உன்னைப்புண்ணிய சாலியயென்று புகழ்வார்கள் வையகத்தில்
உன்னைத் தர்மவான் என்று தாரணியில் சொல்வார்கள்
885 நீபொய்சொல்லாத் தர்மரென்று புகழ்வார் புவியிலுள்ளோர்
நீங்கள் சத்தியமுந் தப்பாத சதிரமுடிக் காரரளர்
நீங்கள் சத்தயமுந் தப்பிச் சதிகேடு மேநினைந்து
நான் பொன்மரக்கால் வச்சதுக்கு நீங்கள் பூச்சு மரக்காலே
மரமரக்கால் கைகொடுத்து வஞ்சகமே தானினைந்து
890 பாதகங்கள் தானினைந்து பழிகள் மெத்தச் செய்தீரே
இந்தப் பழிதானும் யெங்கே போய்ச் சொல்வனென்று
தலைமேலே கையைவைத்துச் தானமுது யேதுசொல்வான்
நான் கரிகால்சிவ சோழனுக்குக் காணிக்கை கொண்டுவந்து
நான் மதலைச்சிறு சோழனுக்கு வாங்கிவந்த பொன்மரக்கால்
895 தேசபதி ஆளுகிற சிவ சோழராசனுக்குப்
பொன்னளக்க வேணுமென்று பொன்மரக்கால் கொண்டுவந்தேன்
நீ சத்தும் பயமில்லாமல் தான்பறித்துக் களவுகொண்டாய்
பாதிகாவ லுனனுதென்று உன்பக்கல்வந்து நானிருந்தால்
எளியா ருடைமைதன்னை வலியவன்கைக்கொண்டாயே
900 என்னசெய்வேன் என்னசெய்வேன் என்றுஏங்கி மிகவழுதான்
தர்மமோ ஆண்டவனே பொன்மரக்கால் தந்தாக்கா லா(கா)தோ
என்று முட்டினான் தூணோடே மோதினான் கல்லோடே
பாவி பழிகாரா நீங்கள்வெகு பாவங்கள் செய்தாயே
அந்தமொழி கேட்டு அதுந்துபொன் னாண்டவரும்
905 அல்லாடா செம்பகொல்லா ஆனசொல்ல நீகேளும்
நீ கொண்டுவந்த மரக்கால் நான் வாங்கிவைத்த பாவமுண்டு
ஒருபாவம் நானறியேன் உன்பொருளைத் தொட்டறியேன்
நாங்கள் வச்சா ருடைமையைத்தான் வயறெரியத் தொட்டதில்லை
நாங்கள் ஊரா ருடைமைக்கிப் பேராசைப் பட்டதில்லை
910 அடா உந்த னுடைமைக்கி ஒரு பாவங்கள் நாமறியோம்
வாருமடா செம்பகொல்லி ஒரு வார்த்தை சொல்ல நீகேளும்
என் மேலே குத்தங்கள் இல்லையடா செம்பகொல்லா
(எ)இறையவனார் தாமறிய என்மேலே வஞ்சினைகள்
ஒன்றுமில்லை செம்பகொல்லா உன்பொருளைத் தொட்டதில்லை
915 நீயென்ன நம்பிக்கை கேட்டாலும் இதமாக இப்போது

சொல்லியே நான்தாறேன் உனக்குத் துரோகம் நினைக்கவில்லை
உனக்கேத்த நம்பிக்கை உறுதிபண்ணத் தாறேண்டா
கலங்காதே செம்பகொல்லா உன்னுடைமைக்கிக்களவு நினைக்கவில்லை.
நீயெங்கேதான் கேட்டாலும் இனிய நம்பிக்கை சொல்லுகிறேன்
920 வாடா நீ செம்பகொல்லா மறுவார்த்தை பேசாமல்

அப்போது தட்டானும் அஞ்சி மிகநடுங்கி
சொல்லப்பய மாயிருக்குதையா யெந்தனுக்கு
உங்கள் தம்பியரைக் கண்டாலே சலவம் நடுங்குதய்யா
இதுஎன் மரக்காலென்று இதமாக எந்தனுக்கு
925 இந்த வினாயகனார் கோவிலிலே இதமாக நீரும்வந்து
சத்தியங்கள் செய்தால் தான்போவேன் தப்பாமல்
அப்படியே நல்லதென்று அழகுநெல்லி வளநாடன்
தட்டானை முன்நடத்தித் தான்வந்தார் பொன்னாண்டார்
வந்துபொன் னாண்டவரும் வைகை தலைமுழுகி
930 முழுகித் தலையாத்தி முக்கணரைத் தானிணைந்து
வினாயக ரைத்தொழுது விரும்பியே தெண்டனிட்டு
முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
ஆனை முகத்தோனே அரனார் திருமகனே
வேலவர்க்கு மூத்தோனே வேலடியில் பிள்ளையரே
935 நான்சொல்லுறேன் நீர்கேளும் இவனுக்கு துரோகம் நினைக்கவில்லை
செம்பகொல்லன் கொண்டுவந்த செம்பொன் மரக்காலை
வாங்கிவச்ச தோசமுண்டு மறுகொன்று நானறியேன்
விடிஞ்சதின் பிற்பாடு யிந்த மேனாட்டுத் தட்டானும்
மரக்காலைக் கேட்டான் வந்தெடுத்து நான்குடுத்தேன்
940 இந்தமட்டும் நானறிவேன் யினிஒன்றுங் கண்டதில்லை
என்று சொல்லிப் பொன்னாண்டா யெட்டியவர் தீண்டயிலே
கச்சி வினாயகனார் காச்சி பிறந்துநின்று
கையைப் பிடித்துமந்தக் காராளனைப்பார்த்துத்
தட்டானழைத் தானென்று தான்வரவும் நீதியுண்டோ
945 உன்பேரில் குத்தமில்லை உனக்கொருநாள் தீங்குமில்லை
என்றுசொல்லி வினாயகனார் எதிர்நின்ற தட்டானும்
இங்கைசொன்ன சத்தியங்கள் ஏற்காது என்றுசொன்னான்
அந்த மொழிகேட்டு ஆனதொரு பொன்னாண்டார்

நீ எங்கேதான் கேட்டாலும் யான்சொல்லித் தாறண்டா
950 அப்போது செம்பகொல்லன் அடவாக யேதுசொல்வான்
நத்தங் குடியிருக்கும் நாடாளுங் காளிபக்கல்
வாரும்நீ ஆண்டவனே எனக்கு மகாகெவுளி சொல்லுமென்றார்
அந்த மொழிகேட்டு அழகுபொன் னாண்டவரும்
வினாயகனார் கோவில்விட்டு விருசாகத் தானடந்தார்
955 பத்ரகாளி கோவிலிலே பெரியாண்டவனார் வந்திருந்து
காளிமகா மீஷ்பரியே காராவன் போத்திசெய்து
சுந்தரிலைப் போத்திசெய்து சுத்திமிக வந்துநின்று
அட்டம் பணிந்து ஆசாரத் தோடெழுந்து
கைகட்டி நின்றுகொண்டு காளிதனைப்பார்த்து
960 என்தாயே உத்தமியே ஈரேழுலகுக்கு மாதாவே
தாருகா சூரனுடன் தான்பிறந்த ஈஷ்பரியே
மாயேஷ் பரியே மகமாயி மாகாளி
வளநாடு செழிக்கவந்த மாதாவே உத்தமியே
நான் வந்ததொருசேதி தன்னை மாதாவே கேட்டருளி
965 இந்த நெல்லி வளநாட்டில் நேர்சூழ்ந்த கோநாட்டில்
சுத்தாலைப் பட்டணமும் சூழ்ந்தநெல்லி வளநாட்டில்
இந்த ஆலத்தூர் பட்டணத்தை ஆண்டிருந்த பார்பதியே
நான் இத்தினை நாளும் இந்தநாட்டில் தானிருந்து
அசலா ருடைமைக்கி ஆசையது பட்டிருந்து
970 ஊரா ருடைமைக்கி உழக்களவு செய்ததுவும்
எளியாரைத் தானடித்து எக்கசக்கம் பண்ணினதும்
வலியாருடை யைத்தான் வாய்மிரட்டால் தான்பறித்து
நான் பொல்லாதவனென்று சொல்லி யிந்தப்பூவுலகில் சொன்னதில்லை
நான் கள்ளனென்று சொல்லி இந்த காசினியோர் பேசவில்லை
975 இப்ப வலியவந்த தட்டானும் என்வளவிலே தானிருந்து
பொன்மரக்கா லென்றுசொல்லிப் பூச்சு மரக்காலை
என்கையிலே தான்கொடுத்தான் ஏந்தி மிகவாங்கி
அரமனையில் வந்திருந்து அந்தநாள் சென்றபின்பு
அவன்குடுத்த மரக்காலைக் கொண்டுவந்து நான்குடுத்தேன்
980 செம்பகொல்லன் தான்வாங்கிச் செம்பொன் மரக்காலை
தலைமேலே தான்தூக்கித் தானெறிந்தான் பூமியிலே
பொன்மரக்கால் நான்கொடுக்க மரக்கால் நீகுடுத்தாய்

எந்தன் மரக்காலை நீயொளித்துக் கொண்டாய்நீ
தட்டான் சதிகாரன் சத்தியமே பண்ணமுடி
985 கூட்டியிங் கேவந்தான் கொடுஞ்சூரி கண்டாயே
என்று பொன்னாண்டவரும் எடுத்துரைத்தான் காளிபக்கல்
சத்தியமே பண்ணுதற்குச் சம்மதியோ செம்பகொல்லா
செம்பகொல்லன் கேட்டுத் திரும்பியே ஏதுசொல்வான்
என்மரக்கா லென்று இதமாக நீதானும்
990 இந்தமாகாளி தன்சிரசை வகையாகத் தீண்டிவந்தான்
எந்தனுக்குச் சம்மதிதான் இப்படிநீ தீண்டவந்தால்
நல்லதென்று பொன்னாண்டார் நாடாளுங் காளிபக்கல்
வந்துநின்று சத்தியங்கள் வளநாடன் பண்ணயிலே
பத்திர காளியம்மன் பார்புதியுந் தான்பார்த்து
995 கோவித்து எழுந்திருந்து கொடுஞ்சூரி வந்துநின்று
செம்பகொல்லா நீதானும் திறங்கெட்ட புத்தியெண்ணிப்
பொறுமை பொறுத்தருளும் பொன்னாண்டவரைத் தான்பார்த்து
கள்ளனிவ னென்றுசொல்லிக் களரியிலே யேத்தவந்தாய்
நீகொண்டுவந்த மரக்காலே கொடுத்ததே மெய்யானால்
1000 பேசாமல் நீவாங்கிப் போகணுமே யல்லாமல்
சத்தியம் பண்ணுதற்குத் தானழைக்க ஞாயமோதான்
பத்திர காளியம்மன் பல்கடித்துத் தான்பார்த்து
கையிலிருக்குமந்தக் கனத்ததிரு சூலமதில்
குத்தி எறிவமென்று கொடுஞ்சூரி தானோக
1005 தவறித் தடுமாறித் தட்டானும் தான்பயந்து
பொன்னாண்டார் பின்னாகப் போய்மறைந்து நின்றுகொண்டு
வாய்கள் குளறி மறுவார்த்தை ஏதுசொல்வான்
வளநாட்டுக் காராளர் வாள்வீரா உன்னையுந்தான்
பொய்சொல்லாக் காராளர் பொன்னாண்டவரென்று சொல்வார்
1010 நாடாளுங் காளியையும் நலமாகக் கட்டினியே
காளியைநீ கட்டிக் கழுத்தறுக்கத் தொன்னாயே
என்னைமிகக் கொன்னாலும் என்மரக்கால் போகாது
இந்த நல்ல சத்தியங்கள் ஏற்காது என்றுசொல்லி
அந்தமொழி கேட்டவுடன் ஆனசங்கப் பிள்ளையுந்தான்
1015 கண்கள் சிவந்து கடுங்கோபம் தானாகி

வலதுகையில் வாளுருவி மன்னன் மிகச்சினந்து
கூருரெண்டாய் வெட்டலென்று கோவித்து நிற்கையிலே
கண்டுபொன் னாண்டவரும் கைப்பிடித்தான் தம்பியரே
அண்ணரையும் பாத்து ஆனதம்பி யேதுசொல்வான்
1020 தங்கா ளுரைத்தபுத்தி தள்ளிவிட்டா யண்ணாவி
தட்டான் சதிகாரன் சங்கைகெட்ட பொட்டிமகன்
கொல்லுவேன் இப்பவென் கூரியவாள் தன்னாலே
சின்னண்ணன் வாள்வீரன் சிறுபுலிகு மாரசங்கர்
கோவித்த தம்பியரே குளுந்தமுகந் தானாக்கித்
1025 தம்பியரே தட்டிவிட்டுத் தட்டான் முகம்பாத்து
இன்னும் என்னதான் நம்பிக்கை இதமாகச் சொல்லுமென்றார்
சொல்லப் பயமாய் இருக்குதையா யெந்தனுக்கு
வெள்ளாங் குளத்தூரு விதமாக நீயும்வந்து
என் மரக்காலென்று இதமாக எந்தனுக்கு
1030 உள்குமிளி புகுந்து பிறகுமுளி வந்தையென்றால்
சத்தியமு மெய்யாகுஞ் சரியாகு மெந்தனுக்கு
புனுகணிந்த மேனியனார் பொன்னரும் ஏதுசொல்வார்
நான் வினாயகர் கோவில்வந்து விருப்பமுடன் சொன்னதுவும்
சம்மதிக ளில்லையென்று தானடக்க வேணுமென்றாய்
1035 அங்கே நடந்துவந்து ஆனசத்யங்கள் செய்தாலும்
சம்மதியோ உந்தனுக்குத் தானடக்க வேணுமென்றார்
செம்பகொல்லன் கேட்டுத் திரும்பியே ஏதுசொல்வான்
வெள்ளாங் குளத்தூரில் விதமாக நீயும் வந்து
உள்குமிளி புகுந்து புறக்குமிளி வந்தையென்றால்
1040 சம்மதிதா னெந்தனுக்கு நான்தட்ட விட்டஞ் சொல்லவல்லை
இந்த மாகாளி தானறிய வஞ்சினைகள் செய்யவில்லை
என்றுதான் செம்பகொல்லன் எடுத்துரைத்தான் ஆண்டவர்க்கு
நல்லதென்று பொன்னாண்டார் அந்தநாயகியாள் கோவில்விட்டு
வளநாட்டுக் கோட்டையிலே வந்துமிக உள்புகுந்து
1045 வந்தார் அரமனைக்கு வாள்வீரர் பொன்னாண்டார்
அத்தைபிள்ளை தானிருக்கும் அரமனையில் உள்புகுந்து
செய்யபெருமாளே சிலைக்கேத்த வன்னியரே
அத்தைபிள்ளை அத்தாவே அம்மான் பெருமாளே

தட்டான் சதிகாரன் சதிகாரன் பொல்லாதான்
1050 சத்தியமே செய்வதற்குத் தானழைத்து நிற்கின்றான்
வெள்ளாங் குளத்தூரு வந்து வெங்கலக் குமிளியிலே
உள்குமிளி புகுந்து புறகுமிளி வந்தையென்றால்
சத்தியமு மெந்தனுக்குச் சரியாகு மென்றுசொன்னான்
அந்தப்படியே நான்போய் வருமளவும்
1055 நான்போய் வருமளவும் நம்மநாடு பதனமென்றார்
அத்தைபிள்ளை யுடனுரைத்து ஆனபொன்னின் வளநாடன்
நாம்ஊர்போய் வருமளவும் நம்ம உத்திநெல்லி வளநாட்டில்
என்தம்பியருந் தங்கையரும் தங்காளுடைக்கலங்காண்
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் வந்தாலும்
1060 கோட்டை யிடித்தாலுங் கொத்தளங்கள் போனாலும்
நம்ம நாட்டை அழித்தாலும் நகரி சிறை போனாலும்
நம்ம ஊரை அழித்தாலும் உத்தமர்கள் பட்டாலும்
நம்ம நெல்லி வளநாடு நேர்சூழ்ந்த கோனாடு
ஆடுசிறை மாடுசிறை அடிச்சோட்டிப் போனாலும்
1065 அவன் கொள்ளையது யிட்டுக் கொடியநெருப் பிட்டாலும்
தாலிபரி சீலைபரி தான்பிடுங்கிப் போனாலும்
தம்பியரை விட்டுத் தான்விலகிப் போகாதே
என் புரவியரே விட்டுப் பின்தங்கி நில்லாதே
என் தங்கையரை விட்டுத் தான்விலகிப் போகாதே
1070 அத்தைபிள்ளை அத்தாவே அம்மான் பெருமாளே
செய்ய பெருமாளே சிலைக்கேத்த வன்னியரே
என் சரீரத் துணையே அத்தாவே தம்பியர்க்குப் புத்திசொல்லிக்
கோபமுள்ள தம்பியர்க்குக் குணமாக வார்த்தை சொல்லி
கோட்டைவிட்டுப் போகாமல் அத்தாவேகூடி விளையாடி
1075 வெள்ளாங் குளத்துரு நான்போய் வருமளவும்
தம்பியருந் தங்கையரும் அத்தாவே தானும் பிரியாமல்
ஆனதுணை நீயிருந்து அத்தாவே யிப்போது
தம்பியர்க்குப் புத்திசொல்லித் தங்கையரே உள்ளடக்கிக்
கோட்டைப் பதனமுமாய் அத்தாவே கூடி யிருங்களென்று
1080 கடிங்காலுஞ் சாம்பானைக் கடுகி வரவழைத்து
சாம்பானும் ஓடிவந்து சரணம் அடிதொழுது
வாய்பொத்திக் கைகட்டி வகையாக ஒடுங்கிநின்று

சதிர்முடி பொன்னாண்டார் சாம்பானைப் பார்த்தேதுரைப்பார்
நம்மவெள்ளை தேவப்புரவி வேட்டைநாய் உள்ளதெல்லாம்
1085 அலங்கரித்துக் கொண்டு அச்சனமே வாருமென்றான்
அந்தமொழிகேட்டு ஆனதொரு சாம்பானும்
குதிரைகட்டும் லாயமதில் கூசாமலுட்புகுந்து
கால்கயிறு தானவிழ்த்துக் கடிவாளந்தான்பூட்டி
சேணமது கட்டி சிணத்திலே மெத்தைவைத்து
1090 கல்லறையும் அங்குவடி கதித்த விகுவுபட்டை
நெத்திக்கிச் சுட்டிகட்டி நிழலாடக் கண்ணாடி
நாலுகுளம்புக்கும் நலமான வீரதண்டை
சகலாத்து முகமுட்டுத் தங்கக் கடுவாளம்
முன்சல்லி பின்சல்லி முத்துத் துறாய்குலுங்க
1095 அலங்கரித்துப் போர்ப்புரவி ஆனதொரு சாம்பானும்
வேட்டைநாய் அத்தினையும் விருசாகத் தானவிழ்த்து
போர்ப்புரவி தன்னைப் பொங்கமுடன் கொண்டுவந்து
பொன்னாண்டார் பக்கலிலே போய்நிறுத்திக் கொண்டிருக்க
அப்போது வீரபோகன் ஆண்டவனைத் தெண்டநிட்டு
1100 அடுமையிங்கே தானிருக்க ஆண்டவனே போவதென்ன
செம்பகொல்லன் கேட்டுத் திறமான சத்தியங்கள்
அடியேனும் பண்ணுகிறேன் யான் போய் வருவனென்றான்
அந்தமொழி கேட்டு அழகுபொன் னாண்டவரும்
அல்லடா வீரபோகா யான்சொல்ல நீகேளும்
1105 நீபோக வொண்ணாது சத்தியம் நிசமாகாது கண்டாயே
தட்டான் மரக்காலை நான்தான் திருடிக் கொண்டதினால்
சத்தியமே பொய்யாகும் அவனுக்கு தாங்கள் வருங்கண்டாயே
வச்சா ருடைமையை நான்வயிறெறியத் தொட்டதில்லை
வெள்ளாங் குளத்தூரு போய்நான் வருமளவும்
1110 தம்பியர்க்கு நீதுணையாய் வீரபோகர் தான்பிரிஞ்சு போகாமல்
கோட்டை பதனமடா நம்மகொத்தளத்தில் நீயிருந்து
மேனாட்டு வேடுதளம் வீரபோகா விதமிஞ்சி வருகாமல்
கோட்டைக் கதவடைத்துக் கொம்பாள் தனைவைத்துக்
காவல்மிகப் பத்திரமாய் வீரபோகர் காத்திருடா வென்றுசொல்லி
1115 போர்ப்புரவி கிட்டப் பொன்னாண்டார் தானும்வந்து

குதிரையைத் தொட்டுக் கும்பிட்டு ஆண்டவனும்
தட்டானைப் பார்த்துப் பொன்னாண்டார் தானடவுமென்று சொன்னார்
ஏறினார் தேசி எடுத்தார் பெரியகத்தி
இடது கையில் கேடயமும் இறுக்கினார் பொன்னருமே
1120 குதிரைக் கடிவாளம் கொற்றவனார் கைப்பிடித்துப்
பதினெட்டு ஆயுதமும் பாங்காக வரிஞ்சுகட்டி
வலதுகையில் சவுக்கெடுத்து மாட்டிவிட்டார் தேசிதன்னை
கோட்டையைத் தாண்டிக் குதிச்சுதே அப்புரவி
நெல்லி வளநாடு நேர்சூழ்ந்த கோநாடு
1125 சுத்தாலைப் பட்டணமும் சூழ்ந்தநெல்லி வளநாடு
தாண்டிப் பறக்குதுகாண் புரவிதரையில் கால்பாவாமல்
பூமியில்கால் பாவாது பொன்னருட நற்புரவி
நீ கத்தரிப்பதில்லை நிலத்தில் கால்பாவுதில்லை
மனவேகங் கொண்டு வருகுது காண் புரவி
1130 வளநாடு எல்லைவிட்டு மறுநாடு போகுதுகாண்
பொன்னருட நற்புரவி போற தடந்தனிலே
வெள்ளாங் குளத்தூரு வெற்றிபெறும் நாட்டாரும்
ஆலா மரத்தடியில் அனைவோருந் தான்கூடி
இருந்தார் களரிமெய்க்க இயல்பெரிய வெள்ளாளன்
வெள்ளாளர் கூடி வீத்திருக்குஞ் சபைதனிலே
1135 பொன்னருட நற்புரவி போதவருகுது காண்
தட்டானும் பின்னாகத் தான்வருகும் வேளையிலே
கண்டார்கள் நாட்டாரும் கதித்ததொரு மன்னவனும்
கண்டு மனமகிழ்ந்து கதித்ததொரு வெள்ளாளன்
எங்கேதான் போனீர் எனக்கறியச் சொல்லுமென்றார்
1140 அந்தமொழி கேட்டு ஆனந்த மார்பழகன்
புனுகனிந்த மேனியனார் பொன்னருமே ஏதுசொல்வார்
குளத்தூரு நாட்டாரே கொற்றவரே நீர்கேளும்
நான்நெல்லி வளநாட்டில் நேர்சூழ்ந்த கோனாட்டில்
ஆலத்தூர் பட்டணத்தை ஆண்டிருந்தோங் கண்டீரே
1145 சூழ்ந்தநெல்லி வளநாட்டில் தட்டான் சூதுகொண்டு இங்குவந்தான்
மரமரக்கால் கொண்டுவந்து என்மாளிகையில் தானும்வைத்து
பொன்மரக்கால் வைத்தனென்று போராடி நிற்குகிறான்

நான்யென்னதான் சொன்னாலும் என்னுரையுங் கேளாமல்
வெள்ளாங் குளத்தில் வெங்கலக் குமிழியிலே
1150 உள்குமிளி புகுந்து பிறகுமிளி வந்தையென்றால்
எனக்குச் சத்தியமும் மெய்யாகும் தான்போறேனென்று சொன்னான்
நல்லதென்று இங்குவந்தேன் நாட்டாரே நீர்கேளும்
என்றுசொல்லிப் பொன்னாண்டார் எடுத்துரைக்கத்தான் கேட்டு
குளத்தூரு நாட்டாரும் கொற்றவர்கள் தான்கேட்டுத்
1155 தட்டானைத் தான்பார்த்துச் சேதியென்ன சொல்லுமென்றார்
காராளர் முன்பாகத் தட்டான் கைகட்டி நின்றுகொண்டு
நான் சொல்லுகிறேன் நாட்டாரே நீங்கள் சுகமாகக் கேளுமென்று
நான்மேற்கே வெகுதூரம் வெங்கல நன்னாடு
தட்டைய நாடுமெங்கள் தளம்பெரிய நன்னாடு
1160 சுத்தி மிகப்பெருத்த காங்கைய நாடுமொரு
அபிமானங் காத்ததொரு அரை நல்ல நாடுமென்று
கில்லக்கம் பேசும் கிழங்கு நல்ல நாட்டாரும்
இன்னவெகு நாட்டார் இருக்குமந்த ஊர்தனிலே
இருந்தேன் குடித்தனமாய் எந்தன் வெறுமையினால்
1165 கரிச்சுட்டுக் கரியளக்கும் கரிகால் சிவசோழனுக்கு
மதலைசிறு சோழனுக்கு வாங்கிவந்தேன் பொன்மரக்கால்
உச்சிதமாய்க் கொண்டுவந்தேன் உலகாளும் ராசனுக்கு
இங்கிதமாய் நான்குடுத்தால் எந்தன் கலிதீருமென்று
வாங்கிவந்தேன் பொன்மரக்கால் மகாதேவர் தாமறிய
1170 பொழுது விழுந்ததென்று பொன்னருட கோட்டையிலே
தங்கி யிருந்ததுக்கு என்தலைமேலே கல்போட்டான்
காராளர் என்றுசொல்லி யிவர்கையில் கொடுத்ததுக்கு
பொன்மரக்கால் வைத்துக்கொண்டு பூச்சு மரக்காலை
என்கையில் தான்கொடுத்தான் என்னசெய்வேன் நாட்டாரே
1175 எனக்கு உத்தா ருறவில்லை இந்தஊரார் பழக்கமில்லை
எனக்குச் சாதி யொருவரில்லை சந்துமறிந்ததில்லை
என்பொன்மரக்கால் தாருமென்று போராடிக் கேட்டாக்கால்
இவன்தப்பியரை ஏவிவிட்டுத் தானடிக்கச் சொல்லுகிறேன்
என்னசெய்வேன் நாட்டாரே ஏழையய்யா நானடியேன்
1180 அருதி அய்யா நானடியேன் எனக்காருந் துணையுமில்லை

தெய்வந் துணையெனவே தேடிவந்தேனும் மிடத்தில்
செம்பசொல்லன் சொல்ல அங்கே சேர்ந்திருந்த காராளன்
எழுபதுபேர் காராளன் எல்லோருந் தான்கூடிப்
பச்சை மரத்தடியில் பாங்காகத் தான்கூடி
1185 வளநாட்டுக் காராளன் வாள்பெரிய பொன்னரைத்தான்
ஏறிட்டுப் பார்த்து எழுபதுபேர் காராளர்
எளியா ருடைமையைத்தான் ஏனெடுத்துக் கொண்டாய்நீ
வலியவனாய் நீயிருந்து வந்தடைந்த எளியாரை
எளியா ருடைமைக்கி நீ ஏராசைப் பட்டதென்ன
1190 பொன்மரக்கால் நீஎடுத்துப் பூச்சுமரக்கால் தனையே
தட்டான்கை நீதானும் தான்குடுக்கப் போகாது
உந்தன் மறவில்வந்து ஒளிந்திருந்தார் தன்பொருளை
களவுசெய்ய நாயமோதான் காராள னாயிருந்து
நீங்கள் பொய்சொல்லக் காராளன் பொன்னசங்கராயிருந்து
1195 தேசமெங்கும் பேராகித் திரமாகப் பேருபெத்து
வையக மெங்கும் வாசமுண்டாய்த் தானிருந்து
குன்னுடையான் காராளன் குமாரரிவருந்தான்
பேரைக் கெடுக்கப் புரந்தீர்கள் நீங்கள் பொன்னசங்கர்
எழுபதுபேர் காராளன் ஏகமாய்த்தான்கூடி
1200 தட்டான் உடமைதனைத் தான்குடுத்து நீயனுப்ப
நீ வெள்ளாங் குளத்தில் வெங்கலக் குமிளியிலே
உள்புகுந்து வாரமென்று தட்டானை உளப்படுத்திக் கூட்டிவந்தாய்
உன்னால் முடியாதுநீ உள்புகுந்து வாறதுக்கு
அடைபட்டு நிற்குதுகாண் அதில் அண்டமுடிப் போகாது
1205 அஞ்நூறு நாகம் அடைகெடந்து வாழுதுகாண்
தொண்ணூறு நாகம்அதில் துணையிருந்து வாழுதுகாண்
மலைவிரியன் தானும் வாழுதுகாண் குமிளி
குமிளிஅடை பட்டுதுகாண் கொத்தவனே நீயுமிப்ப
தட்டானு டைமைக்கித் தடம்வழியும் நீயுரைத்து
1210 வந்ததடம் பிடித்துநீ வளநாட்டே போகுமென்றார்
அச்சேதி கேட்டு அழகுபொன் னாண்டவரும்
எழுபதுபேர் காராளர் எடுத்துரைத்த சேதிதன்னைக்
கேட்டு மனம்வெகுண்டு சரீர கிடுகிடென்று தானாடி

அங்கமெல்லாந் துள்ளி ஆனகண்கள் தான்சிவந்து
1215 மீசை பதறிடுமாம் பொன்னருக்கு மேல்புருவம் ஆடிடுமாம்
எழுவதுபேர் தங்களையும் பொன்னர் ஏறிட்டுத் தான்பார்த்து
இந்தவழக்கை யிழிகுலத்தான் தன்பேச்சை
இந்தப்பாவி வழக்கைப் பழுதுபட நீயுரைத்தாய்
ஓர்வழக்கு உரைத்தாய் உங்கள் தலைமேலே
1220 இந்தப் பருமரங்கள் தானடித்துப் பாங்காய் விழுங்கண்டீர்
ஆகாயம் பூமி அரனாரும் உள்ளமட்டும்
உங்கள் காராள வங்கிஷத்தில் கண்குருடாய்த்தான் பிறந்து
சப்பாணிப் பிள்ளைகளும் தானுமுடமாக
நீங்கள் பெத்த பிள்ளையெல்லாம் பின்னுங் குருடாக
1225 தப்பாமல் நீங்கள் தான் பெறுவீரென்று சொன்னார்
கோபித்துப் பொன்னாண்டார் கோலினார் சாபமங்கே
சாபமிட ஆண்டவருந் தழைத்திருந் த ஆலமரம்
அலறி விழுந்திருமாம் ஆனசபை நடுவே
பார்த்துப் பொன்னாண்டவரும் பல்கடித்து அப்போது
1230 தட்டானைத் தான்பார்த்துத் தானடா என்றுசொன்னான்
புரவிதனிலேறி பொன்னாண்டவனா தாடைந்தார்
தட்டானைக் கூட்டித் தானடந்தார் பொன்னாண்டார்
அப்படியே வளநாட்டார் சத்தியமே போயிருக்க
வேதா வகுத்த விருமா விதியாலே
1235 மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் தான்கூடி
நாட்டுக்கு நாடு நல்லோலை போகவிட்டு
ஓலைகண்ட நாழிகைக்கி நாட்டாரும் படைதிரட்டி
நாட்டார்கள் கூட்டமிட்டு நான்போக வேணுமென்று
படைதிரட்டி நாட்டார்கள் படையெடுத்துத் தானடந்தார்
1240 தலையூருக் காளிமகன் தளம்பெரிய சேவுகனும்
தலைவனாய்த் தானிருந்து தளம்பெருக்க வேணுமென்று
வெங்கலநாடு வெற்றியுள்ள கோனாடு
பூந்துரை நாடு புதுமையுள்ள நன்னாடு
பொன்குலுக்கி நாடு புகழ்பெரிய நன்னாடு
1245 கீர்த்திக் குடைய கிழங்குநல்ல நாட்டாரும்
கரையநல்ல நாட்டாரும் அன்பான வன்னியரும்

வெங்கலநாடு வெற்றிபெறும் நன்னாடும்
நாட்டுக்கு நாடு நலமாக ஆளுவிட்டு
வெற்றித் தமுக்கடித்து வெங்கலக் கொம்பூதி
1250 நாட்டா ரொருமித்து நலமாகக் கூட்டமிட்டு
அண்ணாக் கயிறுகட்டும் ஆண்பிள்ளை உள்ளதெல்லாம்
கூட்டங்கள் கூடிக் கோடிப்படை திரட்டி
நாட்டார் படை திரட்டி நலமாகத் தான்நடந்து
நாடுகாணி மேடுவந்து நாட்டார் படை திரட்டி
1255 கூடியே நாட்டாரும் கூட்டமிட்டுத் தானிருந்து
யோசினைகள் பேசி உத்தபுகழ் நாட்டாரும்
வளநாட்டுக் காரானர் வாள்வீரர் பொன்னசங்கர்
சத்தியமுஞ் செய்துஅவர் தான்வருகு முன்னாக
கோட்டைதனைபிடித்து வளநாடு கொள்ளையிட வேணுமென்று
1260 பேசியே தான்முடித்துப் பிரபலமாய்ப் படைதிரட்டி
நாடு படைகூடி நடந்தாரே தெற்குமுகம்
கச்சைகட்டுஞ் சேவுகரும் கனத்த துப்பாக்கிகளும்
நேரிசமுங் கத்திகளும் நேந்தசாரம் கோவிகளும்
அருகுகட்டின வலையங்கள் அழகாக முன்னடக்க
1265 முருகுசுத்தின வல்லையங்கள் முன்னாலே சூழ்ந்துவர
ரேக்காலச் சறகோவி நெருநெரென்று முன்னடக்க
நாகபாசத்துண்டு நடுவேதனை நடக்க
கண்ணுவிண்ணுங் கொள்ளாமல் கதித்ததொரு ராணுவங்கள்
யெருத்து மேலடங்கா யேகமாய் முன்னடக்க
1270 தம்பட்டங் கொம்பு தவில்முரசு நின்றதிர
வெங்கலக் கொம்பு விருதுசொல்லி யூதிவர
பதினெட்டு மேல்விருது பந்திபந்தாய்ப் பிடித்து
கொட்டி மொளக்கி கொலாவி மிகநடந்தார்
நாட்டார் நடக்க நாவலர்கள் கொண்டாட
1275 தலையூருக் காளிமகன் தானடைந்தான் முன்னாக
கர்நாடகத் தானும் கருஞ்சனங் களுள்ளதெல்லாம்
கல்லுங் கவனமுடன் கதித்ததொரு ஈட்டியுடன்
யேகமாய்க் கூட்டி யெல்லாருந்தான் நடந்தார்
மதுக்கரையுந் தாண்டி வாய்த்த கருப்பூரு விட்டு
1280 செங்கலது பின்னெரிந்து சிந்தாமணி கடந்து

வீரமலைக்காடு விருசாகப் பின்னெரிந்து
வளநாடு யெல்லையிலே வந்துதடுத்தார் நாட்டார்கள்
நெல்லி வளநாடு நெருங்கிவந்தார் நாட்டார்கள்
வளநாட்டுக் கோட்டையிலே வாழ்ந்திருந்த மேடையிலே
1285 கடிகாலுஞ் சாம்பானும் கதித்ததொரு சேவுகனும்
காராம் பரச்சிமகன் காத்திருக்கும் வேளையிலே
நாட்டாரும் படைதிரட்டி நடந்து வருகையிலே
கண்டுமங்கே தான்னெழுந்து வெகுகவுத்துவங் களாச்சுதென்று
நம்மபொண்ணாம்பல சுவாமி அவர்சத்தியமே போயிருக்க
1290 மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் தான்கூடி
கவுத்துவங்கள் தானினைந்து தட்டானை கடுகிமுன்னே தானனுப்பி
வேகுகொண்டு வந்ததட்டான் பெரியாண்டவரை விருசாகயிப்போது
வெள்ளாங் குளத்தூரு சத்தியமே போயிருக்க
சூதுமிக நினைந்துநாட்டார் சுருக்காய்ப் படையெடுத்து
1295 கொள்ளையிட வேணுமென்று குலாவி பெரும்படையை
குருக்காட்ட வேணுமென்று சாம்பான் குலாவியெனுந்திரித்து
கச்சை வருஞ்சு கட்டிக் கடுங்கச்சை சுங்குவிட்டு
எடுத்துநல்ல குல்லாவை எடுத்துத் தலையில் வைத்து
பொன்சருகை கச்சைகட்டி பொங்கமுடன் சுங்குவிட்டு
1300 வாணாத் தடியெடுத்து வழதடியுங் கைப்பிடித்து
அதட்டி யெழுந்திருந்து ஆணழகன் சாம்பானும்
பீரங்கிக் கத்தி பெரிய கத்தி தோளில்வைத்து
பஞ்சவர்ணப் பாவாடை பாங்காக மேல்போட்டு
வெங்கலக் கடிங்காலும் வெத்திக்கொம்பு தானூதி
1305 கோட்டை அலங்காரத்தில் குலவையிட்டுச் சாம்பானும்
பார்த்தானே மேற்குமுகம் படைதிரண்டு வாறதைத்தான்
கருந்தூளுஞ் செந்தூளுஞ் குமரி வருகிறதை
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் வருகுதென்று
பொறுமை பொருத்தருளும் பொன்னாண்ட வனாரிப்போது
1310 தட்டான்பிறகே அவர் சத்தியமே போயிருக்கத்
தலையூருக் காளிமகன் சதிகேடன் புத்தியென்ன
வருகிறான் கொள்ளைக்கி அவனை வழிமறிக்க வேணுமென்று
வீரபோகச் சாம்பான் விருசாகப்பல்கடித்து

கோட்டையைத் தாண்டிக் குதித்துமங்கே சாம்பானும்
1315 கடுகி மிகநடந்து கண்வாயைக்கட்டிநின்று
பாளையங்கள் வந்தபின்பு பார்த்தும் பதுங்கிநின்று
பாளையத்துக் குள்புகுந்து பங்கங்கெட்ட நாட்டாரே
முன்லாகும் பின்லாகும் முதலாகுந்தான்பாய்ந்து
கடிங்காலுக்குச்சியினால் கதித்துவந்த வேட்டுவரை
1320 குச்சியினால் குத்தி கொன்ணாரு சிலபேரை
கோணக்கொம்பினாலே கொன்ணாரு சிலபேரை
கத்தியினால் வெட்டிக் கழுத்தறுத்தான் சிலபேரை
வெட்டிவெட்டிச் சங்கரித்து வேதிக்குலவையிட்டு
நம்ம சின்னண்ணன் ஆண்டவர்க்கு சேதிசொல்ல வேணுமென்று
1325 ஒருநொடியில்தான் பறந்து ஓடிவந்து சங்கர்முன்னே
ஆண்டவனே ஆண்டவனே அழகு பொன்னாண்டவரே
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் தான்கூடி
தலையூருக்காளி மகன் தான்குடி வாறனிங்கே
அச்சேதிகேட்டு உம்முடை அடிமைப் பறைப்பயலும்
1330 கண்வாயைக் கட்டி கருவறுத்தேன் வேட்டுவரை
சுவாமி மந்திரவாளுக்கு வாளுக்கிரை வேணுமென்று
சின்னாண்டவர்க் கருணைசெய்ய அடிமைப்பறையன் வந்தேன்
அச்சேதி கேட்டு ஆர்த்தெழுந் தருந்தார்
படையென்ற போதே சின்னண்ணர்ப் பத்றியெழுந்திருந்து
1335 வேடுபடையென்று சொல்லி வெகுண்டுமங்கே தான்சிரித்து
மண்டியிட்டுக்கொக்கரித்து சின்னண்ணர் வலதுகையில் வாளைப்பிடித்து
யிடதுகையில் கேடையமும் யிடுக்கினார் சங்கருமே
நீலமுளிக் கண்கள்ரெண்டு நெருப்புப் பொரிபறக்க
கோலமுழிக்கண்கள் ரெண்டும் கொடுங்கண் நெருப்பெரிய
1340 கண்டுதான் அத்தைபிள்ளை அவாகடுகிநடந்துவர
யென்னயிருக்கு அத்தாவே யென்னபுத்திநீ நினைந்தாய்
அந்தவேடுதளம் வந்துதென்றால் நம்மவேட்டைநாய் போதாதோ
அந்தக்கருஞ்சனங்கள் வந்துதென்றால் கருநாய்கள் போதாதோ
பொறுமை பொறுத்தருளும் பொன்னாம் பலசுவாமி
1345 வெள்ளாங் குளத்தூரு அவர்சத்தியமும் போயிருக்க
சத்தியமும் மெய்யாகிச் சுவாமி வருமளவும்
நம்மகோட்டைதான் போனாலும் கொத்தவர்கள் மாண்டாலும்

ஆடுசிறைமாடுசிறை அவன் அடித்தோட்டிப் போனாலும்
தாளபரிசீலைபறி அவன்தான் பறிச்சுப்போனாலும்
1350 நம்மவளநாடு போனாலும் வாள்வீரர் பட்டாலும்
நம்ம கோணாடு போனாலும் கொத்தவனே நீகேளும்
நம்ம தங்கையரை விட்டுத் தான்பிரியப் போகாது
அத்தர் கோபந்தணிந்து குளுந்தமுகம் தானாக்கி
மைத்துனனைக் கைப்பிடித்து வாருமென்று கூட்டிவந்து
1355 சித்திரச் சாவடியில் சேரவே வீத்திருந்து
சதிரங்க மாடித் தானிருப்போ மென்றுசொல்லி
சோதி சதுரங்கம் சொக்கட்டா னாடவென்று
சேரவே தானிருந்து சேர்ந்து யிருவ நமாய்
இருவருங் கைகோர்த்து ஏகாந்தந் தான்பேசி
1360 சொக்கட்டான் கையெடுத்துச் சுகமாக முன்னைவைத்து
மைத்துனனைப் பார்த்து மறுவார்த்தை ஏதுசொல்வாள்
நான்தோத்தால் அத்தாவே நீசொன்னபடி நான்கேட்பேன்
நீதோத்தால் அத்தாவே உனக்கென்ன பந்தயங்கள்
இருவரெண்டு பேரும் இணை சம்மதிகள் தானார்கள்
1365 பஞ்சணையில் வீத்திருந்து பாங்காக மைத்துனரும்
வயிரத்தூண் பக்கலிலே வந்திருந்தார் தம்பிசங்கர்
தங்கையரை சாச்சிவைத்துத் தானும்கயறு போட்டார்
பகடை விழுகாமல் பத்து விழுந்ததுகாண்
தோத்து விட்டாரென்று அத்தா துடை தட்டித் தான்சிரித்தார்
1370 இது பிள்ளையாராட்டமென்று சங்கர்பின்னுங் கயர்போட்டார்
முக்காலுந் தம்பிசங்கர் மூணுதிரந்தான் தோத்தார்
தோத்து விட்டோமென்று சங்கர்தூணோடே போய்ச்சாய்ந்தார்
அந்தச் சினமே அத்தா அதுந்துயெழுந்திருந்து
தங்காள் முகம்பார்த்து அத்தர்தயவாக யேதுசொல்வார்
1375 உன்சின்னண்ணார் வாள்வீரர் சீறுபுலிகுமார சங்கர்
தோத்துவிட்டார் நீர் பாருமிப்போத் தூணோடே கட்டுகிறேன்
பாருமென்று சொல்லி பருஞ்சங்கிலியைத் தானெடுத்து
ஆனைகட்டுஞ் சங்கிலியை அத்தாவும் தானெடுத்து
சக்கரந்தம் போலே அத்தாத் தானிருக்கக் கட்டிவிட்டார்
1380 மைத்துனரைக் கட்டிவைத்து மன்னவர்கள் மூவருந்தான்

அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக்கேத்த வன்னியரும்
மூவருங்கூடித் தங்காள் முன்பாக வந்துநின்று
அண்ணர் வருமளவும் நீ அரமணையில் தானிருந்து
1385 பத்திரமாகயிலே பத்தினியே நில்லுமென்று
சங்கர் (பொன்னர்) பொன்னர் பதனமென்று தானடந்தார் மூவருந்தான்
அரமணையை விட்டு அன்பாய் வெளியில்வந்து
குதிரையை முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
பரிக்கு நகுலனைப்போல் பாய்ந்தார் குதிரையின்மேல்
1390 மின்னல் சவுக்கெடுத்து மூடிவிட்டார் தேசியின்மேல்
அத்தை பிள்ளை மூவருந்தான் அதிரவங்கே சாரிவிட்டு
தலையூருக் காளிமகன் தனந்தளத்தி லுள்புகுந்து
கொக்குத் திரளிலே ராசாளி பாய்ந்தாற் போல்
வெள்ளாட்டுப் பட்டியிலே வேங்கை வந்து பூந்தாப்போல்
1395 வீசினார் வாளெடுத்து முன்வீச்சும் பின்வீச்சும்
முன்வீச்சுக் காயிரம்பேர் பின்வீச்சுக்காயிரம்பேர்
வெட்டிவெட்டிச் சங்கரித்து வெள்ளாமிக வரசு
வேடுபடை யத்தினையும் மிரண்டு பயந்தோட
கையத்து வீழ்வாரும் காலத்து வீழ்வாரும்
1400 மெய்யத்து வீழ்வாரும் விதிவசமோ யென்பாரும்
பிள்ளைதனை நினைந்து பெருமூச்சு விடுவாரும்
என்று முடிஞ்சுதென்று யிறந்து மடிவாரும்
தலைமேலே கையைவைத்துத் தான்அழுது போவாரும்
கைதலை மேல்வைத்துக் கதறி அழுவாரும்
1405 காராளர் பாதம் கையெடுத்துக் கும்பிடுவார்
வெள்ளாளன் பாதம் விழுந்துமடங்க கும்பிடுவார்
அத்தாவும் பாதம் அடித்து விழுவாரும்
பாதத்தில் வீழ்ந்தவரைப் பாத்துமங்கே அத்தாவும்
விழுந்தாரை வெட்டார் வெள்ளார் மிகவரசு
1410 சாஞ்சாரை வெட்டார் சதிர்முடிக் காராளர்
கையெடுத்த பேரைக் கடைக்கணாலும் பாரார்கள்
யிந்தபடியாக அத்தா யிறக்கடித்து வருகையிலே
அத்தா படைப்போரை ஆயிருமே பார்த்திருந்து

மெத்த மனமகிழ்ந்து வேந்த நாராயணரும்
1415 சந்தோஷப்பட்டுத் தாமோதரப் பெருமாள்
மலைக்கொழுந்தி தானும் வயசு பதினாறாய்
வாங்கி வந்த தனவயசு வந்துதுதானிண்ணோடே
மாயன் பெருமாளும் மனதில் நினைந்துகொண்டு
உபாயமினி யிப்பஇவன் உயிர்வாங்க வேணுமென்று
1420 வாழைத்தண்டை வில்வளைத்து மாயன் பெருமாளும்
முல்லை யரும்புமுனையரும்பு தட்டானெடுத்து
புஷ்பக் கணையாலே போட்டுவிட்டார் மாயவரும்
ஓரம்பு போட்டஇடம் ஒண்ணு நூறாயிரமாம்
அத்தைபிள்ளை தம்பியரும் அவன்சேனை உள்ளதுவும்
1425 ஆனபடை சேனைகளும் ஆனதொரு ராணுவமும்
ஒக்க மடிந்தனகாண உத்த ரணகளத்தில்
அத்தாவும் பட்டுவிழ ஆனதொரு சாம்பானும்
அலறி விழுந்தழுது அய்யோ சிவனேயென்று
வீரபோகச் சாம்பானும் வெகுண்டு கடுகடுத்து
1430 வேடு தளத்திலொரு வேங்கைவந்து பூந்தாற்போல்
கொண்ணான் வெகுதளத்தைக் கொடியதொரு சாம்பானும்
அத்தை பிள்ளைபட்ட ஆனதொரு சேதிதன்னை
சின்னாண்டவர்க்கு இப்பச் சினத்திலே சொல்லவென்று
அருக்கைபண்ண வேணுமென்று சாம்பான் அழுதுமுகம்வாடி
1435 சீக்கிரமா யோடிச்சின்னண்ணர் கால்விழுந்து
அத்தாவும் பட்டுவிட்டார் சுவாமி ஆனதுணை யிழந்தோம்
உன் மைத்துனரும் பட்டுவிட்டார் வாய்த்ததுணை நாமிழந்தோம்
அச்சேதிகேட்டு சங்கர் அழன்றுமங்கே பல்கடித்து
சிங்கஞ் சினந்தாற்போல் சின்னண்ணர் சினந்துயெழுந்திருந்தார்
1440 எழுந்திருக்கச் சங்கிலியும் ஏழுதுண்டாய்த் தான்தெறிக்கக்
கட்டியிருந்த சங்கிலியுங் கடுகு பொடியாச்
அதட்டி யெழுந்திருந்தார் ஆன தம்பி சங்கருமே
கண்கள் சிவந்திடுமாம் காந்தாள மாயிடுமாம்
கண்ணீர் சொரிய சின்னண்ணருக்குக் கடைக்கண்ணில் நீரோட
1445 கட்டினார் கச்சை கருங்கச்சைத் தொங்கல் விட்டு
நெலையங்கி தொட்டு அண்ணர் நீலவண்ணச்சேலைகட்டி
ஆபரணம் பூண்டு அங்கிலிச் சாறுதொட்டு

சந்திரகாவியுருமால் சின்னண்ணர் தலைநிறையத் தானுங்கட்டி
யெடுக்க வொண்ணா மந்திரவாள் யெடுத்துமவர் கைப்பிடித்து
1450 ஏழுமலை சாய்ந்தாப்போல் எனைச்சேர்ந்த கேடயமும்
சத்தி சமுதாடு கனத்ததொரு நேரிசமும்
பதினெட்டு ஆயுதமும் சின்னண்ணர் பாங்காய் வரிஞ்சுகட்டி
சின்னண்ணன் வாள்வீரன் சிறுபுலிகுமார சங்கர்
பிரண்டு முழித்து மேனாடு முகம்நோக்கி
1455 நெருநெரென்று பல்கடித்து சீநத்தியுடன் பாத்து
சாம்பானைப் பாத்துத் தம்பிசங்கரேது சொல்வார்
சாம்பமட்டஞ் சீனிவைத்துத் தம்பி சங்கரேதுரைப்பார்
கடுகிமிக நடந்து புரவிக்குக் கால்கயிறு தானவிழ்த்து
கல்லணையுஞ் சீனிவைத்துக் கடுவாளந் தான்பூட்டி
1460 முன்சல்லிப் பின்சல்லி குதிரைக்கு முகமூட்டுத்தான்போட்டு
அஞ்சுகுத்து சல்லி அழகுசல்லி தொங்கவிட்டு
மூணுகுத்து சல்லிப் புரவிக்கு முன்னாகத்தான்போட்டு
நாலு குளம்புக்குப் புரவிக்கு நலமாக வீரதண்டை
சகலாத்து முகமுட்டுத் தங்கக் கடுவாளம்
1465 குதிரை அலங்கரித்துக் குலவீரன் சாம்பானும்
சின்னண்ண ரேனும் தேசி தனைப்பிடித்து
கொண்டுவந்து முன்னைவிட்டான் குலவீரன் சாம்பானும்
கண்டுசங்கர் மனமகிழ்ந்து கடுகியவர் கிட்டவந்து
புரவியை முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
1470 அந்தநல்ல வேளையிலே ஆணழுகன் போர்ப்புரவி
கண்ணுரெண்டு நீரோட கலங்குதுகாணப்புரவி
சங்கர் முகம்பார்த்து தளம்புதுகாண் அப்புரவி
கண்டு தம்பி சங்கருந்தான் யிது காரணமாயிருக்குதென்று
அத்தைபிள்ளை ஆராய்ந்துபாராமல் சின்னண்ணன் அரியபுரவியரை
1475 தங்கையரைத் தானழைத்துத் தானுமவர் புத்திசொல்லி
பெரியண்ணர் சத்தியமும் போனவர்தான் வரவுங்காணோமே
நம்ம அத்தைபிள்ளை அத்தாவும் ஆனபடை சேனையெல்லாம்
பட்டு மடிஞ்சார்கள் புரவியரே பார் இரணகளத்தில்
அத்தா(வை)வேக் கொண்ணதொரு அந்த ஆகாத வேட்டுவரை
1480 வெட்டிக் கருவறுத்து யென்வெஞ்சினைகள் தீர்ன்றி
மேனாடு பூதம் மட்டும் வெட்டிக் கருவறுத்து
பொ-11

அரைச்சினத்தில் நான்வாரேன் பென் அரிய புரவியரே
இந்த அரமணையை விட்டு நீ அப்பாலே வருகாதே
என்று சின்னண்ணர் சொல்ல தங்காள் யேங்கி மிகவழுது
1485 அண்ணாவி யிங்கைவந்து தம்பியரும் எங்கைஎன்றால்
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் வந்ததினால்
அத்தா படைபோய் அவரும் மடிந்ததினால்
அந்தப் பழிவாங்கி அரைச்சினத்தில் வாறமென்று
பேடை மயிலே நீ நம்ம பெரியண்ணர் வருமளவும்
1490 நம்ம அண்ணமார் தேவியரும் ஆனதொரு தோழியரும்
நம்ம அரமணையை விட்டு நீங்களப்பறமே வரவேண்டாம்
தங்காளது கேட்டுத் தன்மனது நொந்து கொண்டு
யிருவருடன் பிறந்து யெனக்கு ஒருவர் துணையில்லாமல்
என்னைத் தனியவிட்டு அண்ணாவி யெதுத்நபடை போறாயோ
1495 ஒருநாள் பிரிந்தரியேன் ஒருராவு தங்காதார்
என்னைவிட்டுப் பிரிஞ்சதில்லை அண்ணாவி வேத்தூருப்பட்டதில்லை
நான் பெண்பிறந்த நாள்முதலாய் அண்ணாவி ஒனக்கு பிரியாத் துணையாயிருந்தார்
நான் ஒருத்தி பிறந்தவள்க்கு அண்ணாவி உத்ததுணையொன்றில்லை
நீபாலு குடித்ததுண்டு படைமுகமோ கண்டதில்லை
1500 நீமோரு குடித்ததுண்டு நீமுகஞ்சு படைவெட்டறியாய்
நீதண்ணீர் குடித்ததுண்டு நீதனித்தபடை போயறியாய்
நம்மஅத்தா மடிந்தாலும் நம்மஆனபடை போனாலும்
நம்ம பெரியண்ணர் வருமளவும் போகஇனிவேண்டாம்
அச்சேதி கேட்டு ஆனதம்பி சங்கருந்தான்
1505 தங்கையரைப் பார்த்து தம்பிசங்க ரேதுசொல்வார்
நம்ம அத்தாவைக் கொண்ண ஆனதொரு வேட்டுரை
வெட்டிக் கருவறுத்து அந்த மேனாட்டு வேட்டுவரைத்
தங்கையர்க்குப் புத்தி சொல்லித்தம்பி சங்கர்தானுமங்கே
ஏறினார் தேசியின்மேல் எங்கும் கிடுகிடென
1510 மின்னல் சவுக்கெடுத்து சங்கர் மீட்டிவிட்டார் தேசியின்மேல்
கோட்டையைத் தாண்டி குதித்துதே அப்புரவி
அது கல்லைக் கடந்திடுமாம் கருமலையைத் தாண்டிடுமாம்
கால்பட்ட மலைகளெல்லாம் கடுகுபொடி யாகுதுகாண்

மெறண்ட சிங்கம் போலே மேனாட்டு வேட்டுவர்மேல்
1515 மனவேகங் கொண்டு வருகிறார் தம்பிசங்கர்
கொக்குத் திரளிலே ராசாளி பாய்ந்தாற்போல்
வெள்ளாட்டுப் பட்டியிலே ஒருவேங்கை வந்துபூந்தாப்போல்
வேடுபடைக் குள்ளாக தம்பிசங்கர் வாரிசாக உள்புகுந்து
வாளுருவி வீசலுற்றார் வளநாட்டுக் காராளன்
1520 வீசவே தம்பிசங்கர் மேனாட்டு வேடுதளம்
படைதிரட்டி வேடுதளம் பக்கம் பிசகாமல்
கண்கொள்ளா வேடுதளம் சங்கரைக் கனமாகச்சுத்திநின்று
நீவெள்ளாள னாயிருந்து வேடு படைமேலே
படைபொருதப் போகாது பக்கம்வந்து நேர்ந்துவிடும்
1525 நீமோழி பிடிக்குமந்த வெள்ளாளன் நீயல்லவே
நீபடை முகஞ்சு வெட்டுதற்கோ பாங்காக இங்குவந்தாய்
உன் அத்தைப்பிள்ளை அத்தாவும் உன் அம்மான்பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக்கேத்த வன்னியரும்
அவர் மூவரும் வந்துமிங்கே மூண்டு படை பொருதும்
1530 அவன் இறந்து மடிந்ததுவும் இதமாகக் கண்டிருந்து
நீசத்தும் பயமில்லாமல் தான்வந்தாய் போர்செய்ய
வேடுப்படை மேலே வெள்ளாளன் போர்செய்யச்
சண்டைசெய்ய வந்தாயோ நீதனித்து ஒருவனுமாய்
என்று தலையூருக்காளிமகன் தானுரைக்கத் தான்கேட்டு
1535 கண்கள் சிவந்திடுமாம் சின்னண்ணாருக்குக் காந்தாளமாயிடுமாம்
கண்டங் கதறிடவே சின்னண்ணருக்கு முண்டமுறை செய்திடவே
அய்வறளிக் கண்கள் ரெண்டும் சின்னண்ணருக்கு செவ்வரளிபூத்தாற் [போல்
வீசியே வாள்குலுக்கி வீசையின் மேல்கைபோட்டார்
தலையூருக் காளிமகன் தளம்பெரிய சேவுகனும்
1540 பாத்துமங்கே பல்கடித்துப் பதறியங்கே வீசிவிட்டார்
முன்வீச்சுக் காயிரம்பேர் பின்வீச்சுக் காயிரம்பேர்
வெட்டிவெட்டிச் சங்கரித்து அந்தமேனாட்டு வேட்டுவரை
தலையுருள முண்டம் தடுமாறித் தான்விழவே
கையத்து வீழ்வாரும் கர்த்தனே யென்பார்கள்
1545 மெய்யத்து வீழ்வாரும் விதியை நிலைப்பாரும்
இந்தப் படியாகத் தம்பிசங்கர் பறக்கடித்து வருகையிலே
தலையூருக் காளிமகன் அவன்தட்டுண்டு ஓடலுற்றான்

ஓடுகிறதைக் கண்டு தம்பிசங்கர் ஒருநொடியில் போய்வளைந்து
சுத்தி வளைந்துகொண்டு தம்பிசங்கர் சூராவளி காத்ததுபோல்
1550 வெட்டிவெட்டிச் சங்கரித்து அந்த மேனாட்டு வேட்டுவரை
தலையூருக் காளிமகன் நட்டறிந்து ஓடலுற்றான்
ஓடுறதைப் பார்த்து தம்பிசங்கர் உருட்டி மிகமுழித்து
என்னை வெள்ளாளனென்று சொல்லிமிக மிஞ்சிநீ யுரைத்தாய்
வெள்ளாளன் முன்னைவந்து நீ வேடுபடைபொருதாமல்
1555 படைமுறிஞ்சி நீபோனால் நான்பாத்து மிருப்பேனோ
என்றுசொல்லித் தம்பிசங்கர் பெதுத்தபடை தான்முடிக்கி
துண்டம் துண்டமாகத் தம்பிசங்கர் துடர்ந்து கருவறுத்து
துடர்ந்து படைபொருதி வேடுதளம் துணுக்குத் துணுக்காக
வேடு படைதுரத்தி மிரட்டிக் கருவறுத்து
1560 வந்தபடை அத்தினையும் தம்பிசங்கர் வழியில் சிறிப்பிடித்தார்
வேடுபடை யோட மிரட்டித் தளைதுடந்து
தோகைமலை பூதமட்டும் துடர்ந்து படைபொருத
வைகைமலை பூதமட்டும் வகையாய்க் கருவறுத்து
வெட்டிவெட்டிச் சங்கரித்து சாம்பான் வீரக்குலவையிட்டார்
1565 கொண்ணு கொண்ணு கொக்கரித்தான் குலவீரன்காராளன்
வெள்ளியணை பூதமட்டும் சங்கர்வேடு கருவறுத்து
முக்கணாங் குறிச்சிமட்டும் முடுக்கிக் கருவறுத்து
வேடு கருவறுத்தான் எங்கள் வெள்ளாளன் மிகவரசு
வைத்துக் கருவறுத்தான் வாள்வீரா தம்பிசங்கர்
1570 ஆண்பிள்ளை கண்டதெல்லாம் தம்பிசங்கர் அடவாய்க்கருவறுத்து
தலையூறு பூதமட்டும் தம்பிசங்கர் தலையறுத்தார் வேட்டுவரை
வேடுயென்று சொன்னவரை வெட்டியுடல் பிளந்து
கொலைவையிட்டுக் கொக்கரித்துக் கோடையிடித் தம்பிசங்கர்
வெட்டிவெட்டிச் சங்கரித்தார் சாம்பான் வெள்ளிக்கலவையிட்டான்
1575 வெங்கலக் கடிங்காலடித்து வெத்திக் கொம்புதான்பிடித்து
தெற்கு முகமாகத் தம்பிசங்கர் திரும்ப வரும்போது
வேடுபடைப் பட்டிறந்த வெங்கணங்கள் பார்த்து
பார்த்து மனமகிழ்ந்து பல்கடித்துத் தம்பிசங்கர்
சின்னண்ணன் வாள்வீரன் சிருபுலி குமாரசங்கர்
1580 சாம்பானும் பின்னடந்து சாமி வரும்போது

வாரியைக் கம்படுமந்த வளநாட்டுக் காராளர்
குதிரைவிட்டுத் தானிறங்கிக் குலைகாரன் தம்பிசங்கர்
வாறியிலே வந்திறங்கி வாள்வீரா காராளன்
கைகா லலம்பக் காலுமிகச் சுத்திபண்ணி
1585 ரத்தங் கழுவி நல்லதொரு வாள்தழுவி
மேலுங் கழுவி மேனாடு தான்பார்த்து
கைகழுவி யென்று வாறிக்கனமாகப் பேறுமிட்டு
புரவி தனிலேறிப் பொன்னருட தம்பியரும்
கடிங்காலுஞ் சாம்பானும் கதி(த்)ததொரு ஊழியமும்
1590 கடிங்காலுஞ் சாம்பானும் கடிங்கால் தனையடித்து
வெத்திக் கொம்பு தானூதி சாம்பான் வெங்கலக்கடிங்காலடித்து
யேகாந்தம் பேசி யிருவரும் அப்போது
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் பட்டதுவும்
நாட்டார் இறந்ததுவும் நடுங்கிக் கிடக்கிறதுவும்
1595 பட்டுக் கிடக்கிறதைப் பார்த்து வளநாடன்
சிரித்து மனமகிழ்ந்து தென்கிழக்கு வருகையிலே
வீரமலை யடிவாரம் வெண்முடிக்கி வடபிறமாயி
தோகைமலைக்கிக் கீழ்புறமாய் தொப்பம்பட்டிக் கணவாயில்
வாடிக்கல்லு யொருபிறமாய் மானிடவன் கணவாயில்
1600 திருகுகள்ளி னுளைக்கடவும் செப்பூலாங் காடுதனில்
குளுந்த நிழலும் கூடாரச் சோலையுமாம்
தளைந்த மரமும் தண்ணீர்த் தடாகமுமாம்
பாரமான வேங்கைமரம் படர்ந்த நிழலுண்டுபண்ணி
நீட்டித்துச் சிவனாரும் சிவனாரும் போய் மறைந்தார்
1605 அப்போது தம்பிசங்கர் அந்தவனம் வருகையிலே
தளைந்த நிழலும் தண்ணீரும் கண்டவுடன்
தண்ணீர் தவித்து சின்னண்ணர்க்குத் தாகவிடாயுண்டாகி
களைகள் மெத்த உண்டாகிக் காராளன் தம்பிசங்கர்
வேங்கை மரத்தடியில் வெண்புரவி தானிருத்திப்
1610 புரவிதனை விட்டிறங்கிப் பொன்னருட தம்பியரும்
தண்ணீர்தனைக் குடித்து தாகவிடாய்தான் தீத்து
வேங்கை மரத்தடியில் தம்பிசங்கர் மேற்குமுகமாக
களையாறித் தம்பிசங்கர் களையாக நிற்கையிலே

ஆதி சிவனாரும் அங்கேதான் வந்துநின்று
1615 வந்து சிவனாரும் மாயவரைத் தான்பார்த்து
மானிட சென்மமாய் மானத்திலேபுரந்து
இவனுக்கு வயசு பதினாறு வாங்கிவந்தான் குன்னுடையான்
இவனுக்கு வயசு முடிஞ்சு காணயிவனை வச்சிருக்கப் போகாது
அத்து விழுந்தது வே ஆனசங்கர் வீற்றிருந்தார்
இனி மேலிருந்தானுமாகில் இந்த உலகமெங்கும்
1620 தானளிப்பான் தப்பாது தாரணியில் சீவனெல்லாம்
மானிட சீவனெல்லா மாய்ப்பான் அரைச் சினத்தினத்தில்
வாளைத் தண்டைவில் வளைத்து மாயன் பெருமாளும்
முல்லை யரும்பு முனையரும்பு தானெடுத்து
பூவாலே வாளி மாயன் பொருந்தவே உண்டு பண்ணி
1625 மறவில்நின்று மாயவரும் மாயவங்கே யெய்துவிட்டார்
போட்டாரே மாயவரும் பொஷ்பக் கணையாலே
பட்டது காண் சங்கருக்கு பார்உடல் ஊடுருவ
பட்டதாரு அம்பைச் சங்கர்பார்வேந்தன் கைப்பிடித்து
அம்புவந்ததன் வழியே தம்பி சங்கர் ஆராய்ந்து பார்க்கையிலே
1630 மாயவனுமப்போ மாயமாய்ப் போனதுவே
வேங்கை மரத்தடியில் வேடன் ஒளிவிருந்து
வேடனையுந் தான்பாத்து சங்கர்வெகுண்டு பல்லைத்தான்கடிந்து
அடேயெதுத்துப் போர்செய்யாமல் யிலைமறவில் நின்றுகொண்டு
மறைந்து போர் செய்றதையடா மதிகெட்டபுனல்வேடா
1635 வேடனையுந் தான்பாத்து தம்பிசங்கர் தன்வேதினைபைப் பாராமல்
வீரவாள் தானெடுத்து சங்கர் வீசினார் மூணுதுண்டாய்
வேடனொடு மூணுதுண்டாய் வேங்கை மறமேழுதுண்டாய்
அத்து விழுந்ததுவே ஆனசங்கர் வீற்றிருந்தார்
வேடன் விழுந்தபின்பு வீற்றிருந்தார் காராளன்
1640 வேங்கை மரத்தடியில் வீற்றிருக்கும் வேளையிலே
காராளன் தம்பிசங்கருக்குக் களைகள் மெத்தத் தானாகி
வேத்து விறுவிறுத்து வேர்வைகள் சிந்திடுமாம்
கச்சை தளந்திமாம் கைகாலும் சோந்திடுமாம்
வீரபோகச் சாம்பானும் சின்னண்ணரை விருசாகத் தான்பார்த்து
1645 ஏதையா ஆண்டவனே யினியிளப்பு வந்ததென்ன

உங்கள் கச்சை களந்ததென்ன கைவாளும் சேர்ந்ததென்ன
எனக்குத் தெரிய எடுத்துரைப்பீா ஆண்டவனே
பெரியாண்டவர் சத்தியமே போயிருக்க தூள்வு காரிமென்ன
1650 என்றுதான் சாம்பானும் எடுத்துரைக்கத் தான்கேட்டு
அப்போது தம்பிசங்கர் சாம்பானை அண்ணாந்து தான்பார்த்து
அண்ணர் சத்தியமே தப்பிவிடும் தவிலோசை தான்கேட்டு
கடிங்காலடிக்காதே அண்ணனுக்குக் கலக்கம் வந்து நேர்ந்துவிடும்
ஆணைவிட்டுத் தம்பிசங்கர் ஆணழகன் வீத்திருந்தான்
1655 வீரமரத்தடியில் தம்பிசங்கர் வீத்திருக்கும் வேளையிலே
அப்போ பொன்னம்பல சுவாமி பொய்சொல்லாக் காராளன்
வெள்ளாங் குளத்தூரு சத்தியமும் போனவர்தான்
குளத்தங் கரையருகே கும்பிக் கரையோரம்
படர்ந்ததொரு பாறையுண்டு மந்நப் பாறைதனிலேறி
1660 குங்குமக் காளியவள் கோவில்தனையிறுக்கும்
படர்ந்ததொரு பாறையிலே பாங்காய் குடிமிருகம்
சித்தி விநாயகனார் சீராய்க் கொலுவிருக்கும்
கண்டுபொன் னாண்டவரும் காளியைக் கருத்தில் மிகநினைந்து
குளத்தில் தலைமுழுகிக் கோடாலி தான்முடித்து
1665 ஈரந் துவட்டி யிளையு நல்ல பட்டுடுத்திச்
சிவனை மிகநினைந்து திருநீறு தானணிந்து
அரகரா வென்று அய்யரையும் போத்தி செய்து
காளியுடன் கோவிலுக்கு காராளன் வந்து நின்று
முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டநிட்டு
1670 ஈரேழுலகுக்கும் பெந்தனுக்கு மாதாவே
வெள்ளங் குளத்தூரு நீ விளங்கவந்த மாகாளி
இந்த தட்டான் சதிகாரன் சதிமாய மேநினைந்து
சத்தியமே செய்வதற்கு தான்கூட்டி யிங்குவந்தான்
உள்குமிழி தான்புகுந்து புறக்குமிழி வாறதுக்கு
1675 எனக்குத் துணையாக யீஷ்பரியே நீ யிருப்பாய்
என்று சொல்லிப் பொன்னாண்டார் யிதமாகத் தான்பணிந்து
அந்தரியாள் கோயில்விட்டு அப்புறமே தானும்வந்து
வினாயகரைத் தாள்பணிந்து விருசாகத் தானடைந்து
வெள்ளாங் குளக்கரையில் விருசாகத் தானேறி
1680 வெங்கலக் குமிளி பக்கல் பொன்னாண்டார் வந்துநின்று

தட்டானைத் தான்பார்த்து சுவாமியவர் யேதுசொல்வார்
உள்குமிளி தான்புகுந்து புறக்குமிளி வாறதுக்கு
அத்தாட்சி யொருவரில்லை யெனக்கு ஆனதுணை யாருமில்லை
எனக்கு சாக்கி யொருவரில்லை தட்டானே நீர்கேளும்
1685 வெள்ளை வினாயகனார் யிந்த வேலடியில் பிள்ளையரும்
இந்தப் பத்திர காளியரும் பாங்காகச் சாச்சி வைத்து
இருவரையுஞ் சாச்சிவைத்து பொன்னாண்டார் யிறங்கினார் உள்குமிளி
குமிழி நாகமங்கே குமிளியிலடை கிடந்து வாழுறதை
அஞ்னூறு நாகமங்கே குமிளியிலடை கிடந்துவாழுறதை
1690 தொண்ணூறு நாகம் குமிளியிலே துள்ளி விளையாடுறதை
மலைவிரியன் சென்னாகம் வாழுமந்த சுக்குமிளி
எட்டடி விரியன் முதல்குமிளியில் யிருந்துமங்கை வாழுறதை
கண்டு பொன்னாண்டவரும் கனத்ததொரு வாளுருவி
வீசினாள் பொன்னாண்டவரும் குமிளியில் வீத்திருந்தார் அரவமெல்லாம்
1695 துண்டுதுண்டாகவே தான்தூளு தும்பி ஆனதுவே
அடைந்திருந்த அக்குமிளி ஆறுகள் போலோட
எட்டியங்கே வாள்வீசக் குமிளியிலிருந்த தொரு சர்ப்பமெல்லாம்
மாண்டுது சர்ப்பமெல்லாம் குமிளி வகையாகத் தான்தீர்க்க
அடைத்திருந்த அக்குமிளிரெத்தம் ஆறுகள் போலோட
1700 இரத்தம் பெருகியங்கே குமிளியில் நன்றாகத் தான்வரவே
இரத்தத்தைக் கண்டுதட்டான் நலமாகத்தான் பாத்து
மெத்தவே செம்பகொல்லன் மெய்மகிழ்ந்து யேதுசொல்வான்
பொன்னாண்டார் இக்குமிளி போய் மடிந்தாரிப்போது
காராளன் பொன்னருமே கரைதன்னிலே மாண்டுவிட்டார்
1705 வெங்கலக் குமிளியிலே பொன்னாண்டர் விருசாகப்பட்டுவிட்டார்
இன்னஞ்சத்தே பாத்து யிளப்பாறிப் போவமென்று
எண்ணியே செம்பகொல்லன் யிதமாக யேதுசொல்வான்
வளநாடு கொள்ளையிட நாட்டார் வந்திருப்பார் தப்பாது
என்று பலயோசினைகள் செ்சபகொல்லன் யெண்ணியேபார்த்திருந்தான்
1710 அந்தநல்ல வேளையிலே பொன்னாண்டவரும் அப்போது
உள்குமிளி தனிலிருந்து பொன்னாண்டார் உலாவி வெளியில்வந்து
செம்பகொல்லன் கண்டு தேக்கமிட்டுத் தான்பார்த்து
இது சம்மதிகளில்லையென்று தட்டானுமேதுசொல்வான்

பிறக்குமிழியிருந்து உள்குமிளி வந்தையென்றால்
1715 எனக்குச் சரியாகும் நீர் இன்னொருக்கால் போமெனவே
தட்டானுரை பொய்யாமல் பிறக்குமிளி தான்புகுந்து
உள்குமிளி நான்பாய்ந்து ஓடிவந்து தானிமிர்ந்தார்
தட்டானும் கண்டுமங்கே யிவனைச் சங்கடிங்கப்போகாது
இவனை உபாயமாய்க் கொல்லவென்று உள்ளினான் தன்மனதில்
1720 எனக்குச் சரிப்போகாது இன்னொருக்கால் வாருமென்றான்
அப்போது ஆண்டவரும் அக்குமிளி தான்புகுந்தார்
இந்த நல்ல சத்தியங்கள் எற்காதுவென்றுசொல்லி
முக்காலும் யிக்குமிளி புகுகிநீர் வந்தையென்றால்
தப்பவில்லை நாந்தானும் சங்கரனார் தானறிய
1725 இந்தப்படி செம்பசொல்லன் பிசகு தனைப்பேசி
இருக்குமந்த வேளையிலே இளையதம்பி சங்கருக்கு
வேதா வகுத்த விருமாவின் சொல்படியால்
காலம் வந்து நேர்ந்ததினால் காராளன் தம்பிசங்கர்
பொன்னாம்பலத்தில் அய்யர் பேருபெற்று வந்தபடி
1730 நாளு முகிஞ்சுதென்று சங்கர் நன்றாகத் தானறிந்து
எழுத்து முடிந்துதென்று யெண்ணியே தம்பிசங்கர்
வீரபோகச் சாம்பானைத் தம்பிசங்கர் விருசாகத் தானழைத்து
என் ஊழியத்துக்கானவனே யெனக்கான சேவுகனே
கையறிவாய் மெய்யறிவாய் வீரபோகா கனத்த புயமறிவாய்
1735 மெய்யறிவாய் யென்னுடைய வீரவாள் தானறிவாய்
இப்ப ஏனோ தெரியாது என்னுடம்பு வெடுவெடென
மதிமயக்க மாகுதடா வாள்வீரா சாம்பானே
எனக்கு மனசு வேறாகு(த)டா என்வாணாள் கலையுதடா
என்சிந்தை கலங்குதடா சீவன்பறி போகுதடா
1740 என் நினைவு வேறாகுதடா நெஞ்சைவந்து அடைக்குதடா
வெகு மயக்கமாகுதடா வீரபோகா விருசாக இப்போது
அண்ணர் பொன்னாண்டவர்க்கு அரியமுடி இப்போது
அந்த வெள்ளாங் குளத்தாரு சத்தியமுங் கேட்கமுடி
உன் கடிங்காலு மிகவெடுத்துக் கடுக அடியுமென்றார்
1745 ஆணைவிட்டேன் தோஷமில்லை அடியுமென்றார் கடிங்காலை
அடியுமென்ற போதே வீரபோகன் அதட்டி முரசறைந்தான்

ஒத்தைக் கடிங்காலை வீரபோகன் ஓங்கி அடித்துவிட்டான்
கடிங்காலடித்துக் கடியதொரு சாம்பானும்
சின்னாண்டவரைப் பார்த்துச் சாம்பான் தேம்பி மிகவழுதும்
1750 புத்தியென்று தெண்டனிட்டான் புகழ்சாம்பா னப்போது
அப்போது சின்னாண்டவரும் அண்ணாந்து தான்பார்த்து
அஞ்சாதே வீரபோகா அண்ணர் வருமளவும்
போகாதே வீரபோகா அண்ணர் பொன்னர் வருமளவும்
தேங்கி அழுவாதே என் தேவர் வருமளவும்
1755 உன்மனசு விடவேண்டாம் மகாசமத்து உள்ளவனே
உன்சீவன் விடவேண்டாம் அண்ணருக்குச் சேதிசொல்லி வாருமென்றான்
உன்உயிரை விட வேண்டாம் அண்ணருக்கு உத்தசேதி சொல்லுமென்றார்
எண்ணியே தானும் வீரபோகா ஏங்கி முகம் வாடாதே
உன்மனசு கலங்காதே பெரியாண்டவர்க்கு வார்த்தைதனைச் சொல்லி
1760 புத்தியது தானுரைத்துப் பிடித்த அம்பை விட்டுவிட்டான் [விடும்
பொன்னருட தம்பியரும் பொய்க்காயம் விட்டகன்று
அம்புவிட்டபோதே சின்னண்ணருக்கு ஆனஉயிர் போனதுவே
மண்டியிட்ட பாவினையும் மன்மதனைப் போலொளிவும்
சிரித்த முகத்தழகும் சீதேவி குன்றாமல்
1765 மிரண்டு முழித்தாப்போல் மேனாடு திசைநோக்கி
வீரமாத்தடியில் வீற்றிருந்தார் அப்போது
வேங்கை மரத்தடியில் தம்பிசங்கர் மேற்குமுகமாக
சீவனிறந்த பின்பு சின்னாண்டவரைப் பாத்து
தீரனவன் சாம்பானும் தேம்பி மிகவழுது
1770 என்னாண்டவனார் போனபின்பு யானிருக்க ஞாயமில்லை
வாளைத் தனை நிறுத்தி வாள்வீரன் சாம்பானும்
ஓடிவந்து தான்வீழ்ந்தான் சாம்பானுயிர்தனை மாய்த்தான்
சின்னாண்டவர்க்கு முன்பாக செத்துஇறந்து விட்டான்
ஆண்டவனார் பாதமதில் அடியேனும் போய்ச்சேர்ந்தான்
1775 அப்படித் தானும் அவர்களிருவருந்தான்
பட்டுவிழுந்தார் அந்தப் பாரவனந்தனிலே
இப்படித் தானும்அவர் இருக்குமந்த வேளையிலே
பொறுமை பொருத்த பொன்னாம் பலசுவாமி
செம்பகொல்லன் சொன்ன சேதியது தட்டாமல்
1780 உள்குமிளி தான்புகுந்து பெரியண்ணர் பிறகுமிளி வருகையிலே
கடிங்காலடித்தசத்தம் பெரியண்ணருக்குக் காதிலதுகேட்டிடுமாம்

தவிலோசைச் சத்தமது பெரியண்ணருக்குத் தண்ணியிலே கேட்டிடுமாம்
உலாவி எழுந்திருந்து பெரியண்ணருக்குள் குமிழிவருகையிலே
தட்டானிழலை யங்கே தண்ணியிலே கண்டாரும்
1785 மூக்கரைப் பிள்ளையாரை முதுகிலே வைத்துக்கொண்டு
தோரணக் கல்லையுமே தொட்டுநின்றான் தட்டானும்
கரையோரம் நிற்கிறதைக் கண்டார் பெரியாண்டவரும்
வீரவாள் தனையெடுத்து வீசிவிட்டார் தட்டானை
தட்டான் தலையுமத்து அவன் தழுவிநின்ற கையுமத்து
1790 உள்குமிளி கல்லுலேதான் உருவியங்கே பட்டிடுமாம்
அப்போது பொன்னாண்டவரும் ஆலித்தெழுந்திருந்து
சிவனை நினைத்துமங்கே தீர்த்தங்கள் தானாடி
முழுகிக் கரையேறிக் காளியை முக்காலுந் தெண்டனிட்டு
அந்தக் காளியர்க்குத் தானை கடுப்பெலிகொடுத்து
1795 அந்தப்படர்ந்தநொரு பாறையிலே தட்டானைப் பாங்காய்தனையிழுத்து
குங்குமக் காளியர்க்குக் கூறிட்டார் தப்பாமல்
பதினாறு கூறாகப் பெரியண்ணர் பாங்காகத் தான்போட்டுப்
பத்திர காளியைத்தான் பாங்காகத் தான்பார்த்து
என் தம்பியரைத் தனியேவிட்டு தங்கையரை வேறாக்கி
1800 தனித்து வந்தேன் மாதாவே யிப்பத் தவிலோசை கேட்டுதம்மா
கடிங்காலுச் சத்தமம்மா என்காதிலே கேட்டுதிப்போ
என்னவிதி வந்ததோதான் ஏதுவினை நேர்ந்ததுண்டோ
ஏதுமறியேன் இங்குவந்தேன் மாதாவே
பொறுமை பொறுத்தருளும் பொன்னாம்பல சுவாமி
1805 ஏங்கி முகம்வாடிக் காளியை இதமாக அனுப்பிக்கொண்டு
புரவி தனிலேறி பொன்னருகே தானடைந்தார்
ஊரைத் திசைநோக்கி ஓடிவருங் காகமென
அவர்நாட்டைத் திசைநோக்கி நாடிவருங் காகமென
மேற்கு முகமாகப் பெரியண்ணர் விட்டார் புரவிதன்னை
1810 வளநாடு திசைநோக்கி வருகுதே அப்புரவி
வளநாடன் போர்ப்புரவி வருகிற போதுமங்கே
எண்ணித் தடுமாறி இடறி விழுந்தாப்போல்
தள்ளித் தடுமாறித் தயங்கி மிகமயங்கிக்
கண்ணுரெண்டும் நீருதும்பப் புரவி கலங்கிப் பறந்திடுமாம்
1815 பொன்னர் முகம்பாத்துப் புரவி பூமியிலே நில்லாமல்

அண்ணர் முகம்பார்த்துப் புரவி அலறிப் பறந்திடுமாம்
துயரமெத்த உண்டாகித் தோல்புரவியைத் தான்தேடி
வழிமுழுதுங் கண்கலங்கிப் புரவி மாயமாய்த் தான்பறக்கப்
பொற்பாவை அழுகுறதைப் பொன்னாண்டார் தான்பார்த்து
1820 என் தம்பிக்கு இப்போது யொருதாழ்வு வந்துதானிருக்கும்
இடர்வந்து நேந்ததுதான் தம்பியர்க்கு யின்னதென்றுதெரியாது
எண்ணாது எண்ணி பொன்னர் ஏங்கி வருகையிலே
அப்போது நல்லதங்காள் பெரியண்ணர் வரக்காணாமல்
சின்னண்ணர் படை போனவர்தான் அவர்திரும்பிவர நான்காணேன்
1825 பெரியண்ணர் சத்தியமுந்தான் போனவர்வரவு நான்காணேன்
போனவரைக் கண்டேன் நான் மீளவரக் காணேன் நான்
என்னைத் தனியவிட்டு இருவருமே படைபோனான்
அண்ணரையுங் காணாமல் தங்கள் அழுது முகம்வாடி
உசந்ததொரு மேடையிலே உப்பரிகை மேலேறிக்
1830 கிழக்கு முகமாகப் பார்த்தாலே உத்தமியும் நல்லதங்காள்
அண்ணர் புரவியைத்தான் தங்காள் அடையாளங்கண்டுமங்கே
எங்கள் பெரியண்ணர் வாறாரேன் பிரியமுட தங்காளும்
உப்பரிகை விட்டிறங்கி ஓடிவந்தாள் அரமணைக்கி
தங்காள் அரமணையில் தானிருக்கும் வேளையிலே
1835 அலறி வருகுதுகாண் அண்ணருட தேவப்புரவி
புலம்பி வருகுதுகாண் பொன்னருட நற்புரவி
மனவேகங் கொண்டு வருகுதுகாண் போர்ப்புரவி
கோட்டைக்கி உள்ளாக அண்ணர்புரவி குதித்து விழுந்ததுகாண்
அரமணையில் உள்புகுந்தார் ஆனநெல்லிவள நாடன்
1840 குதிரைதனை விட்டிறங்கிக் குலவீரன் பொன்னாண்டார்
தங்கையரைத் தானழைத்துத் தம்பியரும் எங்கையென்றார்
அத்தை பிள்ளை அத்தாவும் அம்மானு மெங்கையென்றார்
அச்சேதி கேட்டு அரிய புரவியரும்
மேனாட்டு வேடுதளம் வெகுதளமும் வந்துதென்று
1845 வீரபோகச் சாம்பானும் விரைந்திங்கே ஓடிவந்து
சின்னண்ணர் சங்கருக்குச் சேதிதனைச் சொல்லிவிட்டான்

## அண்ணர் பங்காளிகளைப் பழிதீர்த்தலும் சேவல்கட்டுச் சண்டையும்

அச்சேதி கேட்டு அண்ணர் பயணமென்றார்
அண்ணரையுந் தானிறுத்தி அத்தா படைபோனால்

படைபோன அத்தாவும் பட்டார்கள் என்றுசொல்லி
1850 வீரபோகச் சாம்பானும் விரைந்தங்கே ஓடிவந்தான்
அச்சேதி கேட்டு அண்ணர் அதிகோபந் தானாகி
அத்தாவைக் கொன்ன ஆகாத வேட்டுவரை
கொன்னு பழிதீர்த்து என்கொடிய சினந்தீர்ந்தால்
அரைச்சினத்தில் வாரமென்று அண்ணர் படைபோனார்
1855 போனதொரு அண்ணனாகத்தான் நான் மீளவர நான்காணேன்
நான்கண்ட ஆதேசம் அண்ணா நமக்கே பலிச்சுதென்றாள்
நான் அருந்துதியால் கண்டகினா அப்பறமே போகாமல்
நான் உத்தமியாள் கண்டகினா ஒருநாளுந் தங்காமல்
தங்கை நல்லாள் கண்டகினா தலைமேல் பலிச்சுதென்றாள்
1860 தட்டான் சதிகாரன் அண்ணாவி தலைகாளுந் தாயாதி
செம்பகொல்ல னாசாரி நமக்கு தீங்குகொண்டு இங்குவந்தான்
தட்டானுரை கேட்டு சதிகாரன் பின்போனாய்
நீ போனதொரு நாழிகைக்கு அண்ணாவி புரசாதுண்ணயிழந்தோம்
அத்தாவே நாம் தோத்தோம் ஆனபடை யிழந்தோம்
1865 குதிரைபடை யிழந்தோம் அண்ணாவி குலவீரனையிழந்தோம்
நமக்கு எழுதும் விருமாவும் நமக்கு யிசகா யெழுதிவிட்டார்
என்ன செய்வேன் அண்ணாவி யென்புறப்பே நான்இழந்தேன்
அச்சேதி தான்கேட்டு அழகு பொன்னாண்டவரும்
புரவியரைத் தான்பார்த்துப் பொன்னருமே ஏதுசொல்வான்
1870 நம்ம தலையிலெழுதினது தப்பாது தங்கையரே
விதிவந்து சூழ்ந்ததென்றால் விலக்க உபாயமில்லை
ஆதிசிவன் மாயவரும் அன்பான தேவர்களும்
கூடியெழுதினதைக் குறைப்பாரோ தங்கையரே
எழுத்துப்படி முடிந்தாலேது செய்வோம் தங்கையரே
1875 நான்தம்பி பழிவாங்கிதான் வருவேனிப்போது
தங்கையரைத் தானிருத்தி அண்ணர் தாண்டினார் புரவியின்மேல்
தாண்டினார் பொன்னருமே புரவிசத்து நேரம் நின்றதில்லை
கொண்டு பறந்திடுமாம் புரவி கோட்டைவிட்டுத் தாண்டிடுமாம்
தம்பியரைத் தான்தேடி அண்ணன்தான் மயங்கிப்போக்கயிலே
1880 போற தடத்தனிலே பொல்லாத வேடுதனாம்
எறந்து மடிந்ததுவும் வேடுதனாம் எங்கும் குவிந்ததுவும்
ஈ எறும்பு போலே யெங்கு மங்கிக் கிடக்கிறதை

பாத்துமங்கே அண்ணருந்தான் பாங்காகவே நடந்தார்
அந்த வனங்கடந்து பொன்னாண்டார் அடுத்தவனம் போகையிலே
1885 அவர் ஆனைகுதிரைபடை ஆண்டதொரு சேனைகளும்
அத்தா படுகளமும் அவர் தம்பிமார் பட்டதுவும்
பாத்து வளநாடன் பதறியங்கே தானழுது
கண்ணீர் தனைச் சொரிய அண்ணாவி கதறி மிகவழுது
என் தம்பியர்க்கு நீ துணையாய்த் தானும் பிரியாமல்
1890 என் தம்பியர்க்குப் புத்திசொல்லி தனிப்படையுவெல்லாமல்
என் தம்பியர்க்கு ஒத்தாசை தானுதவி செய்யாமல்
தங்கையர்க்கு நீ துணையாய் அத்தாவே தானுமங்கே நில்லாமல்
பாத்துப்படை பொருதி அத்தாவே பாருதங்கள் செய்யாமல்
சேந்து படைபொருதாமல் நீங்கள் சேர யிறந்து விட்டீர்
1895 நாமள் அய்வரிருந்து அரசாளும் பட்டணத்தை
நான் ஒருவனிருந்து அத்தாவே உழறித்தவிப்பேனோ
புலம்பி அழுது நொந்து பொன்னாண்டார் அப்போது
ஈ எறும்பு தீண்டாமல் யினிய குலையொடிச்சு
பச்சைக் குலையொடிச்சிப் பாங்காகத் தான்போட்டு
1900 தம்பியரைத் தான்தேடி பொன்னாண்டார் தான்போனார்
காடு கடந்தார் கடியமலை உட்புகுந்தார்
சின்னென்ன காடும் செடியும் வனாந்திரமும்
புனங்கள் வனங்கடந்து பொன்னர் வரும்போது
வீரமலை அடிவாரம் வெம்முடியைத் திசைநோக்கி
1905 தம்பிபட்ட படுகளத்தைப் பொன்னாண்டார் தான்தேடிவருகையிலே
கண்டாரே பொன்னாண்டவரும் காராளன் பட்டவிடம்
கண்டு பெரியாண்டவரும் கண்ணுரெண்டும் நீர்சொரிய
வீர மரத்தடியில் தம்பிசங்கர் வீராதி வீரனைப்போல்
மேற்கு முகமாகத் தம்பிசங்கர் வேங்கை மரத்தடியில்
1910 பட்டதொரு தம்பியரைப் பாங்காகத் தானுங்கண்டு
இருகண்ணும் நீரோட ஏறிட்டுத்தான் பார்த்து
குதிரைவிட்டுத் தானிறங்கி குலைக்கொழுந்து காராளன்
தம்பியரைக் கண்டு பொன்னர் தடுமாறித் தான்விழுந்து
விழுந்து பிரண்டழுது தம்பிசங்கர் வீரியணைத்தான்பார்த்து
1915 தலைமேலே கையைவைத்து தம்பிசங்கர் என்றழுதார்

முகத்தி லறைந்துகொண்டு முறையோவெனவழுதார்
என் பிறப்பே தம்பிசங்கர் உனக்கு எதிராளி எங்கிருந்தார்
மகாதேவரும் பிலத்தை வாங்கியங்கே கொண்டாரோ
உந்தன் சவிரியமும் உந்தன் பிலமறிந்து
1920 உந்தனுடனெதுக்க ஒருவருண்டோ தம்பிசங்கர்
எதுத்து நின்று பேசுதற்கு இவனும் பயப்படுவான்
எப்படி உன்னுடனே எதுத்து மங்கே போராடி
உன்னுயிரைக் கொண்டவகை நான் ஒக்கநின்று பாத்ததில்லை
தென்னவனைக் கொல்வதற்குத் தேசத்திலுண்டோ தான்
1925 உன் வானாளை கொல்வதற்கு வையகத்திலுண்டோதான்
மத விமா தம்பிசங்கர் உன்னுயிர் வாங்கினது ஆரோதான்
என்று புலம்பி பொன்னாண்டார் ஏங்கி மிகவழுது
என்புறப்பே தம்பிசங்கர் இனியதுணை நானிழந்தேன்
வாடுகிறேன் தம்பிசங்கர் எனக்கு வாய்த்த துணையாருமில்லை
1930 ஓடுகிற தண்ணியிலே தம்பிசங்கர் ஒருகோரை நின்றதுபோல்
வில்மறந்த காடானேன் வீரியத்தை நானிழந்தேன்
தண்ணித் துறையிலே தான் தனிப்பிரிந்தமானானேன்
ஓடுகிற மானிலேதான் ஒருமான் பிரிந்தாப்போல்
வாடுதே என் மனங்கள் தம்பிசங்கர் வாள்வீரா உனைப்பிரிந்தேன்
1935 ஒத்தை மரமானேன் உடன்பிறப்பே நானிழந்தேன்
பட்ட மரமானேன் பாழுருச் செக்கானேன்
ஒத்தை மரயானேன் ஒருமரமுந் தோப்பானேன்
என்புயமுஞ் சரிந்ததடா புத்தியுள்ள வாழ்வீரா
என்தோளும் சரிந்ததடா நான் துணையிழந்தேன் தம்பிசங்கர்
1940 என்னைவிட்டுப் பிரிந்தாயோ வேற்றாருப் பட்டாயோ
உன்னைவிட்டு நானும் தம்பிசங்கர் ஒருநாள் பிரிந்ததில்லை
என்னைவிட்டு நீபோக என்ன மனமுண்டா
நான் வருவதறியாமல் தம்பிசங்கர் வளநாடு விட்டுவந்தாய்
தட்டான் சதிகாரன் என்னைத் தான்கூட்டியே நடந்தான்
1945 நான் இருந்து படைவெட்டி நின்றால் நீங்கள் இறப்பதுண்டோ
நான் தர்மம் நினைக்க முடிதம்பி சங்கர் தர்மம்வந்ததிப்போ
நான் சத்தியமும் போயிருக்கச் சதிவந்து சேந்துதிப்போ
நான் சிறவுபரிகொடுத்துச் செங்குளத்து நாராப்போல்

நான் பிறப்பே பறிகொடுத்துப் பிறப்பட்டேன் கானகத்தில்
1950 என்ன செய்வேன் தம்பிசங்கர் என்பிறப்பே நானிழந்தேன்
உன்னைவிட்டு நானும் தம்பிசங்கர் ஒருநாள் பிரிந்ததில்லை
உன்னைவிட்டுப் பிரிந்ததில்லை வேத்துருப்பட்டதில்லை
நாநசுங்கி இருந்ததில்லை என் தம்பியரே விட்டதில்லை
என் அண்ணரெங்கே என்று ஆதிசிவன் கேட்டாலே
1955 அதோ வருகிறேனென்று ஆதிசிவன் கேட்டாலே
சேதி சொல்லுந்தம்பி தேவருன்னைக் கேட்டாக்கால்
என்தம்பி சகோதரனே தாஷ்ட்டிகனே கண்மணியே
பொன்னாம்பலத்திலய்யா பேறுபெற்று வருகையிலே
வயசு பதினாறு வாங்கி வந்தார் நம்மளய்யா
1960 நமக்கு நாளுமுகிந்துதிதோ தம்பிதானும் பிரியமுடன்
நீங்கள் நால்வருஞ் சேந்து யிந்தநாடு படைவெல்லாமல்
பொருத்துப்படை பொருதி நீங்கள் பேரதரவாய் வெல்லாமல்
நான்பாவி வருமளவும் நீங்கள் படைபொருதி நில்லாமல்
நீங்கள் திடுதிடென தம்பியரே நீங்கள் சேரவே பட்டுவிட்டீர்
1965 சீக்கிரமாய் படைபொருதி சிவலோகஞ் சேர்ந்தீரோ
நெத்திக்கு வந்த அம்பை தம்பிசங்கர் நேரிசத்தால்தட்டாமல்
மாருக்கு வந்தஅம்பை நீவல்ல சயத்தால்தட்டாமல்
தோளுக்கு வந்தஅம்பை நீ துவண்டு கிடக்காமல்
பக்கல் வந்த அம்பை பாத்திருந்து தட்டாமல்
1970 வருசாக வந்த அம்பை தம்பிசங்கர் விருசாகத்தட்டாமல்
பாத்து நீதட்டாமல் தம்பிசங்கர் யிந்தப்படையைநீ வெல்லாமல்
நீமாயமாய் பட்டதுதான் மாயாவி கண்டதில்லை
உனக்கு அம்பு படவுமில்லை ஆனதொரு காயமில்லை
உனக்கு ஈட்டி படவுமில்லை இனியதொரு காயமில்லை
1975 உனக்கு உண்டை படவுமில்லை ஒருகாயந்தானுமில்லை
கத்தி படவுமில்லை கனத்ததொரு காயமில்லை
உனக்கு ஒண்ணும் படவுமில்லை ஒரு சாய்ந்தானுமில்லை
எப்படிநீ பட்டுவிட்டாய் என்தம்பி என்றழுதேன்
தம்பிகிட்ட வரப்பயந்து பொன்னர் கிலேசத்துடன் தான்பார்த்து
1980 வாய்திறந்து தானழுக அப்போ வால்நீன்ற கரிக்குருவி
வகையாகத் தான்பிறந்து சங்கர் வலது தோள்அறியாதே
ஏறியிருந்து கரிக்குருவி இதமாய் அலறிடவே

கண்டு பொன்னாண்டவரும் கதறியவர் மேல்விழுந்து
தம்பிசங்கர் கையெடுத்துப் பொன்னாண்டர் தன்முகத்திலேபறைந்து
1985 அலறிமிக வழுது அய்யோ சிவனே என்று
என்புறப்பே தம்பிசங்கர் ஈடுமுண்டோ வையகத்தில்
உனக்கு இந்திரனும் ஈடுமல்லச் சந்திரனும் சோடுமல்ல
ஆதி சிவனுமல்ல அன்பான தேவரல்ல
இந்திரபுரம் அரசாளும் தென்திசையில் பாண்டியனும்
1990 சொர்ண வளநாடன் தம்பி சோழ மகாராசாவும்
அதிருமே உன்பேரு சொன்னால் ஆணழகர் தம்பியரே
வையகங்கள் கொண்டாட. தம்பிசங்கர் வாழ்ந்தோம் வளநாட்டில்
என்று பொன்னாண்டவரும் ஏங்கிமிக அழுதார்
முகத்திலறைந்து கொண்டு முறையோ வெனவழுதார்
1995 அழுதுபுலம்பி பொன்னாண்டார் அரிய ரணகளத்தில்
ஈ எறும்புத் தீண்டாமல் இனிய கொளைதான் யோட்டு
வெண்கொளைகள் தானொடித்து மெய்க்காவல் தானும்வைத்து
வனத்திலுள்ள மிருகமெல்லாம் வகையாகத் தானழைத்து
வளநாடன் தம்பியர்க்கு வானரத்தைக் காவல்வைத்து
2000 பொறுமை பொறுத்தருளும் பொன்னாண்டவனாரப்போது
மேனாடு திசைநோக்கி மிரண்ட பில்லாய் போல்பார்த்து
பல்கடித்துப் பொன்னாண்டார் பாரியின்மேல் தானேறி
மேனாடு திசைநோக்கி புரவி வேகமாய்த் தானடத்தி
தம்பி பழிவாங்கித் தான் வாரெனென்று சொல்லி
2005 புரவிதனை நடத்திப் பொன்னாண்டவனாரப்போது
வேடுபடையைப் பொன்னாண்டவனார் வெட்டிக் கருவறுத்து
வைத்துக் கருவறுத்தான் எங்கள் வாள்வீரர் பொன்னருமே
தலையூரு பூதமட்டும் பொன்னர் வேடுகருவறுத்து
ஆண்பிள்ளை கண்டதெல்லாம் அன்பாய்க் கருவறுத்து
2010 வேடுகருவறுத்தான் எங்கள் வெள்ளர் மிகவரவு
வைத்துக் கருவறுத்தான் வாள்வீரர் பொன்னருமே
ஆண்பிள்ளை கண்டதெல்லாம் அன்பாய்க் கருவறுத்து
இப்படித் தானும் இதமாகக் கருவறுத்து
கருவறுத்து வருகையிலே காணாமல் பொண்ணொருத்தி
2015 நிறமாசஞ் சென்றவள்தான் நெடுங் கானக மொழிந்து

வண்ணான் மனையிடத்தே மறைந்திருந்தாள் வேட்டுவச்சி
வெட்டி வெட்டிப் பொன்னருமே வெத்திகொண்டுதான் மீண்டும்
வாள்வீரர் பொன்னர் சங்கர் மாண்டதுக்குப் பிற்பாடு
நாமிருந்து அரசாள நல்லநல்ல என்றுசொல்லி
2020 வனத்தில் மிகநடந்து வைகுண்டஞ் சேர்வமென்று
பூமியிலே தானடந்து புல்லு நசுங்குமென்று
பூவால் மிதியடிதான் போட்டு நடப்பாராம்
சத்தியமும் தப்பாராம் தர்மநெறி குலையாற
பூத்த மரத்தைப் பின்திரும்பிப் பாராமல்
2025 காய்த்த மரத்தைப் பொன்னாண்டர் கண்ணெடுத்துப் பாராமல்
தர்மமுடையவராய்த் தாகமுள்ள காராளர்
வர்மம் நினைக்காராம் வளநாட்டுக் காராளர்
ஆதிசிவன் மாயவரை அன்பாகத் தானினைந்து
மாயமாய்க் கானகத்தில் வனத்திலே போய் மறைந்தார்
2030 ஆதிசிவன் பாதம் அன்பாகப் போய்ச் சேர்ந்தார்
அண்ணமார் போனபின்பு ஆயிழையாள் நல்லதங்கு
அண்ணர் வருவாரென்று வழிபாத்து மேலிருந்து
பாத்த கண்ணும் பூத்து தங்காள் பைங்கொடியாள் நல்லதங்காள்
உத்து நினைந்து ஊடுருவதான் பார்த்து
2035 மெத்தநினைந்து தங்காள் வேதினையை உள்ளடக்கி
விதியை நினைந்து தங்காள் விறுமாவை நொந்துகொண்டு
ஆயன் எழுத்திதுவோ ஆதிசிவன் சுரப்பினையோ
மாயன் எழுத்திதுவோ மகாதேவர் காப்பினையோ
என் தலையில் விதிப்படியோ இறைபவனார் சொல்படியே
2040 எழுதும்படி நேர்ந்ததினால் எனக்குவந்து மூண்டதுவோ
கால பகவானே கற்பிக்குங் கர்த்தாவே
எழுதும் விறுமாவே எம்தர்ம ராசாவே
விஷ்ணுவே தேவர்களே மேலான ருத்திரரே
நாங்கள் வாழ்ந்தநாள் போதுமென்று வரவிட்டீர் தூதோலை
2045 நாங்களிருந்த நான் போதுமென்றுஎழுதி விட்டார் தூதோலை
அந்தஓலைச்சுருள் படிக்கிங் கண்ணமாருளப்படுத்திக் கொண்டாரோ
என்று சொல்லித் தங்காளும் ஏங்கிமுகம்வாடி
அழுது கண்ணீர் நீரோட தங்காளண்ணமார் அரமனைக்கி
சீக்கிரமாய்த் தானடந்தாள் தேன்மொழியாள் நல்லதங்காள்

## தங்கை சொப்பனம் கண்டு அண்ணரிடம் சொல்லுதல்

2050 அண்ணமாரரமனைக்கித் தங்காளச்சினமே தானும் வந்து
என் அண்ணமார்தேவியரே என் அருமைப் பசுங்கிளியே
என் பெரியண்ணன் தேவியரே பேசாத் திருமுகமே
அடியேன் சின்னண்ணன் தேவியரே செல்வத்திருமுகமே
அடிநாத்தி இளங்குயிலே என் நல்மாமன் தன்மகனே
2055 நான் அஞ்சடுக்குப் பஞ்சுமெத்தை அதுநிறைந்த தூளிமெத்தை
தூளிமெத்தை மேல்படுத்து நான் துய்யுறக்கம் போகையிலே
அடி ஒரு நாளுங் காணாத ஒருசொப்பனங்கள் கண்டனடி
என்ன என்னசொர்ப்பனங்கள் கண்டீ ரிளங்குயிலே
அடி ஆகாத சொர்ப்பனங்கள் அனந்தலிலே கண்டனடி
2060 நான் பொய்க்கொடியாள் கண்டகினா பொய்பொருனாள் போகாது
நான் அருந்ததியாள் கண்டகினா அசமுகஞ்சாயாது
நான் உத்தமியாள் கண்டகினா ஒருநாளும் பொய்யாது
நான் பத்தினியாள் கண்டகினா என்பக்கம் பலிச்சதடீ
மேனாட்டு வேடுதளம் வெகுதளங்கள் வந்துதென்று
2065 அயிவருங் கூடி அதிரப் படைபொருத
அத்தைப் பிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
நம்ம செய்யபெருமாளும் சிலைக்கேத்த வன்னியரும்
நம்ம சின்னரண்ண ரண்ணருமே சேரபடைஎடுத்தார்
படைஎடுத்துப் போனவர்கள் பட்டார்களென்று சொல்லி
2070 விரபோகச் சாம்பானும் விருசாய்ப் பறையரைஞ்சான்
கடிங்காலுச் சத்தமடி எனக்குக்காதாரக் கேட்டுதடி
பட்ட படுகளததை நான்பார்க்க முடிவேணுமடி
அவர் இறந்த இடம்பார்த்து இனித்திரும்பி வருவமடி
தாவந்தணிக்க வங்கே தண்ணிவிடாயி தீர்க்கமுடி
2075 நீங்கள் ஒக்கதுணை வாங்களடி உறுதியுண்டு முங்களுக்கு
நாமளிங்ககிருந்தாப் போலே அங்கிருப்போம் வாங்களடி
வாங்களடி தேவிமாரே நீங்கள் மறுவார்த்தை பேசாமல்
அந்தமொழி கேட்டு அவளண்ணமார் தேவியரும்
வாங்களென்ற போதே மறுவார்த்தை யேதுசொல்வான்
2080 நாங்கள் வாழ்ந்தகதை பாத்திருந்து நீவருகமுடிச் சொன்னாயே
வாழரசன் தங்கையரே நீமனங்கோணாமல் சொன்னாயே
முன்னும் பழிகாரன் எங்களுக்கு னொண்ணமார் முதனாளுந்தாயாதி

பின்னும் பழிகாரன் பொன்னர் பின்னாளுந் தாயாதி
தாயாதி தன்பழிதான் பொன்னமார் தானே முடித்தார்கள்
2085 வையகத்தார் போலே வாழ்ந்து இருந்ததில்லை
மண்டலத்தார் போலேபொன்னர் கிட்ட மருவியிருந்ததில்லை
வாழ்ந்து முகப்பாரி பொன்னமார் மனையிடத்தே வாழ்ந்ததில்லை
நாங்கள் எல்லோரும் போலே ஒருஏழைக்கு வாக்கப்பட்டால்
குருணியுண்டும் வாழ்வுமுண்டும் எங்களுக்குக் கூலிபதமுமுண்டு
2090 எல்லோரும் போலே நாங்களிருப்போமே வையகத்தில்
தாயதி தன்பழிதான் பொன்னமார் தானே முடிக்கவென்று
உங்களய்யமார் படையெடுத்து எங்களய்யா மார்வாசல்வந்து
வல்லபிராமணரை மறையோரைத் தானழைத்து
நல்லநாள் கேட்டு நாலு முகிர்தமிட்டு
2095 எங்களுக்கு மூனுபிராயமதில் நீங்கள் முடிசூட்டும் நாளையிலே
பொன்னர் அஞ்சு பிராயமதில் அறியாத நாளையிலே
இவள் தாரமென்று சொல்லி பொன்னருக்கு எங்களையும் மாலையிட
பட்டுப் பாய்போட்டு பருஷந்தனைப் பொருதி
நால்சதிரமாக நன்றாகத் திண்ணையிட்டு
2100 பவளக்கால் நாட்டிப் பந்தலது தான்போட்டு
ஆச்சாமரம் பிளந்து அடிஅளந்துப் பந்தலிட்டு
தேக்கமரம் பிளந்து மாமமார்ப் பந்தலிட்டு
பந்தலிட்டு மணவறையில் பட்டுமேல் பட்டுகட்டி
2105 பட்டுகள் மேலே பருமுத்துத் தொங்கல்விட்டு
மேல்கட்டுக் கட்டி விதவிதமாய் அலங்கரித்து
அம்மி வலமாக அரசாணி முன்னாகப்
பிரம்பு வலமாகப் பேய்க்கரும்பு முன்னாக
சாலுங் கரகமும் தண்ணீரும் முன்னாக
2110 முளப்பாரி போட்டு முன்பாகப் பந்தலிட்டு
ஓமம் வலித்து உத்தமர்கள் வேதியர்கள்
தேங்கா யொடைத்துத் திறமாக முன்னேவைத்து
ஓமப் புகையிலுற்றரிச்ச மங்கிலியம்
அஞ்ஞூறு பாப்பாரும் தொட்டிட்ட மங்கிலியம்
2115 தொண்ணூறு பாப்பாரும் தொட்டிட்ட மங்கிலியம்
நல்லவர்கள் பெரியோர்கள் நாதாக்கள் தானறிய
பொன்னமார் எட்டித் தரித்ததுண்டும் அவர்ஏற்ற முகங்கண்டதில்லை

மாம னெடுத்து மணவறையில் வைத்ததுண்டாம்
2120 கோலத்தின் கீழேநான் குனிந்திருந்த தோஷமுண்டு
னொண்ணர் சுண்டுவிரல் கொடுத்தால் தோஷம்வருமென்று சொல்லிப்
பொன்னால்குழாய்கள் பண்ணி னொண்ணர்போத விரலிலிட்டுச்
சுண்டுவிரல் குடுத்துப் பொன்னர் சூதாக வீத்திருந்தார்
அரசாணிசுத்தி பொன்னர் அரமணைக்கிப் போகையிலே
2125 பொன்னர் பின்னழகைக் கண்டதுண்டு முன்னழகைக் கண்டதில்லை
என்நாத்தி இளங்குயிலே என் நலமான தன்மகளை
அடி கர்ணனுட பிறப்பே காரிழையே உத்தமியே
னொண்ணரண்டா மலிருந்த கதைஅறிஞ்சு மிருப்பீரே
அண்ணுமுத லிண்ணளவும் னொண்ணமார் அருஞ்சிறையே போட் [டார்கள்
2130 நாங்கள் அன்போடழைத்தாலும் னொண்ணமாரண்ணாந்து பார்த்தறியார்
எங்கள் செம்ம மொழியமட்டும் நாங்கள் சிறையோடிருக்கிறதும்
நாங்கள் கண்டுமகிழ்ந்ததில்லை னொண்ணமார் கண்ணாரப் பார்த்த [தில்லை
நாங்கள் பாத்து மகிழ்ந்ததில்லை பக்கயிருந்து பேசவில்லை
நாங்கள் கூடிப் பிரிந்ததில்லை கூடயிருந்து வாழ்வதில்லை
2135 நாங்கள் ஆக்கியிடுஞ் சோறுகறி னொண்ணமா ரணல்காய்ந்து வீசுதென்பார்
நாங்கள் பொங்கியிடுஞ் சோறுகறி னொண்ணமார் புகைக்காந்தல் வீசுதென்பார்
ஆலாமரமேரி நாங்களருஞ்சருக தான்பொரித்து
நாங்கள் புங்க மரமேறி புதுச்சருகும்தான் பொரித்து
நாங்களாக்கிடுஞ் சோறுகறி னொண்ணமாராகாது என்றுசொல்வார்
2140 நாங்கள்யிழத்து மஞ்சள்தேக மெங்குமே குளித்து
சருவாபரணமுடன் நாங்கள் தகதகென்று நின்றாலும்
இழையாயிரம் பொன்பெத்த இந்திர நீலப்பட்டுடுத்திக்
கரிக்குருவி வாலதுபோல் கடைக்கண்ணுக்கு மைஎழுதி
நெத்தியிலே நீறணிந்து நேராகப் பொட்டுமிட்டு
2145 நாங்கள் அரிபிளவும் வெத்திலையும் அள்ளியே கைபிடித்துக்
காசுண்டைக் கற்பூரம் கடல்கரையில் சுண்ணாம்பும்
அள்ளி எடுத்து அலர்ந்தமலர்க் கைப்பிடித்துக்
காமன் கணக்கில்காய்க் கண்ணெதிரே நின்றாலும்

நாங்கள் மன்மத வாணங்கொண்டு மறவில் நின்றுசெய்தலூம்
2150 ஏழரைநாட்டுச் சனியன் யெதுக்கவந்து தென்பார்கள்
பெண்ணாவி பட்டாலே பெலங்குறைந்து போகுமென்பார்கள்
எங்கள் மஞ்சள் மண்பட்டாலே வல்லாண்மை போகுமென்பார்
நாங்கள் எதுக்கநின்று வார்த்தை சொன்னால் ஏறிட்டுப் பார்த்தறியார்
வங்கண்ணார் அண்டாம லிருந்தகதை அறிந்து மிருப்பீரே
2155 நாங்கள் சிஷன் குருவுமாகச் சேர்ந்து யிருந்ததும்
நாங்கள் மகிழ்ச்சியடைந்து மகிழ்ந்திருந்து வாழ்ந்ததுவும்
நாங்கள் சந்தோஷமாகத்தான் கூடிவாழ்ந்ததும்
நீயொண்ணுமறியாயோ உத்தமியே நாத்திபரே
நாத்தியிளங்குயிலே நல்லதங்காள் உத்தமியே
2160 நாங்கள் மனங்காணு மூதேவி புனங்காண வருவதில்லை
நாங்கள் குணங்காணா மூதேவி புனங்காண வருவதில்லை
நாங்கள் வாறதில்லை வாறதில்லை வளநாடன் தங்கையரே
நீ வழிநடந்து போறதுக்கு வாய்த்ததுணை வாறதில்லை
நீ யொருவிவழி நடப்பதற்கு உத்ததுணை வாறதில்லை
2165 வனக்காட்டில் போறதுக்கு வழிக்குத்துணை வாறதில்லை
வாறதில்லை என்று வளநாடன் தேவிசொல்ல
அந்தமொழி கேட்டு அறிவுடைய நல்லதங்காள்
நான் ஒருவி பிறந்தவள்கு உற்றதுணை என்றிருந்தேன்
நான் பெண்பிறந்த பேதையர்க்குப் பெரியதுணையென்றிருந்தேன்
2170 என்னை முகம் பாருங்கடி தேவிமாரே எனக்குத்துணை வாருங்கடி
நாமிங்கிருந்தாப் போலே அங்கிருப்போம் வாங்களடி
எனக்கு ஒக்கதுணை வந்தாலே உறுதியுண்டு உங்களுக்கு
எனக்குப் பக்கதுணை வாங்களடி பதவிஉண்டு உங்களுக்கு
அடி நானிருவருடப் பிறந்து ஒருவர் துணையில்லாமல்
2175 இனிய துணை வாருங்கடி என்முகத்தைப் பாருங்கடி
அந்த மொழிகேட்டு அண்ணமார் தேவியரும்
நாங்கள் வழிநடக்க மாட்டமடி வாளரசன் தங்கையரே
எங்கள் பெண்ணாவி பட்டாலே உங்கண்ணர் பிலங்குறைந்து போகுமென்பா
கன்னிமனம் பட்டாலே காலசந்தே போகுமென்பார்
2180 எங்கள் மஞ்சள்மணம் பட்டாலே வல்லாண்மை போகுமென்பார்

அவராண்டாமலிருந்த கதை அறிஞ்சு மிருப்பிரே
இப்படிப்பட்ட படுகளத்தைப் பக்கம்வரச் சொன்னாயே
நாங்கள் வருவதில்லை நாத்தி யிளங்குயிலே
விருமாவின் கரப்பிணையால் விதித்த படியொளிய
2185 நாங்கள் விடுவிட்டுப் போவோமென்று வேறுமனம் வையாதே
எங்களுக்கு அக்கினியை மூட்டி ஆன கடன்தீர்ந்து
கல்லுங் கடன்தீத்து எங்களைக் கயிலாசஞ் சேத்துவிட்டுத்
தாதியரை நீகூட்டி நாத்தியரே தாகந்தணிக்கமுடி
வழிநடந்து போங்களடி வாள்வீரன் தங்கையரே
2190 அச்சேதி தான்கேட்டு ஆயிழையாள் நல்லதங்காள்
நான்பத்தினியாள் போறதுக்குப் பலதாரி துணையாமோ
நான் உத்தமியாள் போறதுக்கு ஊதாரி துணையாமோ
நான் அருந்ததியாள் போறதுக்கு அசலார் துணையாமோ
நான் தங்கையரும் போறதுக்குத் தாதி துணையாமோ
2195 என்ன மதியுரைத்தாய் என்அண்ணருட தேவியரே
நான் ஒருவி வழிநடக்க உலகத்துக் கேற்காது
நீங்கள் கூடவழி வாங்காளடி கொடியசத்தி உண்டுமடி
வெளிப்பட்டு வாங்களடி உங்களுக்கு வீரியங்கள் உண்டாகும்
வழிக்குத்துணை வாங்களடி எனக்கு வாய்த்ததுணை நீங்களடி
2200 நாமள் வழிநடந்து போறதுக்கு வகுப்பாக வாருங்கடி
அந்த மொழிகேட்டு அண்ணமார் தேவியரும்
நாங்கள் வருவதில்லை நாத்தி யிளங்குயிலே
அச்சேதி கேட்டுத் தங்காளரிய புரவியரும்
குப்பையிலே தான்விழுந்து கோவென்று தானழுதாள்
2205 அண்ணமார் தேவியரும் அகலநின்று தோழியரும்
பக்கமே ஓடிவந்து பத்தினியே தானெடுத்து
புழுதி மிகத்துடைத்துப் பொற்கொடியாள் தங்கையர்க்கு
அழுகாதே அழுகாதே நாத்தியரே ஆனதுணை வாறமடி
நாங்கள் கூடதுணை வாறமடி எங்கள் குலக்கொடியே மாதாவே
2210 நாங்கள் பூண்டு இருந்ததொரு புதுப்பணிதி அத்தினையும்
பூம்பட்டுச் சோலைகளும் பொற்கம்பிச் சருகைகளும்
வேணுமடி மாதாவே எங்கள் வெள்ளர் மிகவரசு
அச்சேதி கேட்டு ஆனதங்காள் உத்தமியும்

பெட்டகத்தைத் தான்திறந்து பூஷணப் போழைகளை
2215 எடுத்துவரச் சொல்லி அங்கே ஏந்திழையாள் நல்லதங்கு
பூட்டு மிகத்துறந்து பொற்பணிதி உள்ளதெல்லாம்
அண்ணமார் தேவியர்க்கு ஆனதொரு சேனைகளும்
பொற்கம்பிச் சேலைகளும் பூவாடை தானுடுத்தி
வேண்டிய ஆபரணம் மெய்நிறையத் தான்பூண்டு
2220 வாழ்ந்த மனைதான் பாத்து வாறமென்று தானுரைத்து
இருந்த மனைதான் பாத்து இனித்திரும்பி வாறமென்று
என்றுசொல்லித் தேவியர்கள் இருவருமே தானுரைத்துத்
துள்ளிவழி நடந்து தோகை இருவருமாய்
அரமணையில் உட்புகுந்து அண்ணமார் தேவியரும்
2225 சாத்திக் கதவடைத்தாள் தாள்பூட்டி மண்ணறைந்தாள்
அடைத்தாள் திருக்கதவை அன்பாகத் தாள்போட்டாள்
வருவாள் வருவாளென்று வழிபாத்துத் தானிருந்தாள்
நின்றாள் நெடுநேரம் நேரிழையாள் நல்லதங்காள்
என் சின்னண்ணன் தேவியரே சீக்கிரமாய் வாருங்கடி
2230 பொழுதுமிங்கே போகுதடி எங்கள் பெரியண்ணன்தேவியரே
என்று சொல்லித் தங்காளும் இப்படியே தான்கூறக்
கேட்டுமங்கே தேவியரும் கிளிமொழியாள் ஏதுசொல்வாள்
நாங்கள் வருவதில்லை நாத்தி இளங்குயிலே
வருவதில்லை வருவதில்லை வாளரசன் தங்கையரே
2235 இந்த நாதாக்கள் தானறிய நாங்கள் வருவதில்லை
மூதாக்கள் தானறிய முன்னே நடப்பதில்லை
நின்று மயங்காதே நெருப்பை அள்ளிப்போட்டீயோ
அந்த மொழிகேட்டு ஆனதங்காள் உத்தமியும்
அடி அண்ணமார் தேவியரை அரமணையைத் தான்பாத்து
2240 வாறமென்று போனவர்கள் மறுவார்த்தை பேசவில்லை
கல்லோடி உன்மனது கரையாத நெஞ்சகமோ
இரும்போடி உன்மனது தேவிமாரே இளகாத நெஞ்சமடி
வன்னெஞ்சே தேவிமாரே வெகுநேரமாகுதடி
சீக்கிரமாய் வாங்களடி எங்கள் சின்னண்ணன் தேவியரே
2245 அந்த மொழிகேட்டு அண்ணமார் தேவியரும்
நாங்கள் வருவதில்லை யெங்கள் நல்யாமன் தன்மகளே
நின்று மயங்காதே நெடுமூச் செரியாதே

சிக்கிரமாய்த் தானடந்து செல்லுமென்றாள் கானகத்தே
அப்போது நல்லதங்காள் அண்ணமார் தேவியர்க்கு
2250 உன்தகப்பன் இங்கே வந்தார் உன்னையுமே பார்ப்பதற்கு
உங்கள் பெரியப்பா இங்கு வந்தார் பிரியமுடன் பார்ப்பதற்கு
உங்கள் சித்தப்பார் இங்குவந்தார் தேன்மொழியைப் பார்ப்பதற்கு
உங்களைப் பிரியமாய் வளத்த ஆச்சியரும் வந்தார்கள்
நிங்கள் ஆபரணபணி பூஷணங்கள் அடையாளந்தான் கொடுத்து
2255 வாழ்த்தி அனுப்புங்கடி எங்கள் வாளரசன் தேவியரே
எங்களைப் பெத்து வளர்த்துப் பிரபலங்கள் பாத்ததுவும்
நிங்கள் வன்னியரைத் தேடிவாளைப் பதித்ததுவும்
வையகத்தார் தாமறிய வகையாய்க் குடிவச்சதுவும்
இந்தக் கொத்தவரைத் தேடிக் குடிகள் பதிச்சதுவும்
2560 நாங்கள் வாழும் பிராயத்திலே மக்கள் பெருநாளையிலே
வன்சிறையோ காக்கமுடி மகாதேவர் எழுதிவிட்டார்
பாவி வயிற்றில் நாங்கள் படுத்திருந்த தோஷமடி
நாங்கள் கொடியாள் வயிற்றில் குடியிருந்த தோஷமடி
எங்கள் செம்மமொழிய மட்டும் சிறையோடிருக்கமுடி
2265 அங்க மடியமட்டும் ஆரிருப்பார் சிறைகாணும்
எழுதும் விருமாவும் எங்கள் தலையில் இசகா எழுதிவிட்டார்
என்ன செய்வேன் தாயாரே எங்கள் தலைஎழுத்தே
எங்கள் வாழ்வும் பிரபலமும் எங்கள் மகிழ்ச்சியுந்தான்
பார்த்தாயோ மாதாவே உங்கள் பாரமனம் ஊடுருவ
2270 போதும் போதெங்களுக்கு நீங்கள் பொன்மாலை சூட்டினதும்
நிங்கள் ஆணழகன் தேடி யெங்களை அரசுபதித்ததுவும்
நிங்கள் வன்னியரைத் தேடிவாளைப் பதிச்சதுவும்
நீங்கள் தண்ணவரைத் தேடித்தென்னை பதிச்சதுவும்
போதும் போதெங்களுக்கு நீங்கள் பொன்மாலை சூட்டினதும்
2275 நாங்கள் ஆரிலையுமில்லாத அழகைப் படைத்ததுவும்
நாங்கள் அண்ணாவி அண்டாமல் அருஞ்சிறையே காத்ததுவும்
போதுமடி என்தாயே பொன்பதிச்சுப் பதிச்சுப்பார்த்ததுவும்
இந்தமட்டும் போதுமடி என்னுடைய மாதாவே
ஊர்தேடி நீயுமிப்போ உத்தமியே போகுமென்று
2180 அழுது புலம்பி அண்ணமார் தேவியரும்

என் நாத்தி இளங்குயிலே என்நல்மாமன் தன்மகளே
நின்று மயங்காதே நெருப்பை அள்ளிப் போட்டீர்தான்
அப்போது நல்லதங்காள் ஆங்காரக் கோலமுடன்
பொங்கி மிகவழுது பொற்கொடியாள் நல்லதங்காள்
2285 பொன்னம்பல நாதரையும் பொந்தியிலேயும் நானினைந்து
ஆதிசிவன் மாயவரைத் தங்காள் அச்சினமே தானினைந்து
அலறிமிக வழுதா னாங்காரச் சத்தமிட்டு
ஓங்காரச் சத்தமிட்டு உத்தமியாள் தானழுக
ஆங்கார மிட்டழுகத் தேவி அக்கினியாய் மூணடுமாம்
2290 அரமனையும் சாவடியும் அனல்பத்தி வெந்திடுமாம்
மாடமுங் கூடமும் மண்டபங்கள் சாவடியும்
அரக்குத் திருமாளிகையும் அக்கினிகள் மூண்டிடுமாம்
கொத்தவர்கள் அரமனையும் கொழுந்து விட்டெரிந்திடுமாம்
வெந்துத் தணிந்திடுமாம் வெண்தணலு நூந்திடுமாம்
2295 நல்ல தங்காளுத்தமியும் நாயகியாளப்போது
வருண நல்ல ராசாவே வருந்தித் தனை நினைந்தாள்
மாரிபொழிய வென்று வாளரசன் தங்கை சொல்ல
அப்போது வருணன் அடவாகத் தான்பார்த்து
ஊசிபோல் மின்னல்மின்னி ஓங்கியே காலிறங்கிப்
2300 பாசிபோல் படந்தமேகம் பலபலென்று மழைபொழிய
வெந்து அரமனையும் வெந்தணலும் நூந்திடுமாம்
வெந்து தணிந்து வெண்சாம் பலானதுவே
அப்போது நல்லதங்காள் அங்கம் பொறுக்கவென்று
ஆணும் பிறந்ததல்ல அந்திரட்டி செய்வார்கள்
2305 நான் பெண்ணாய்ப் பிறந்தல்ல புவிகருமஞ் செய்யுறண்டி
புகுக்கும்பம் தானெடுத்துத் தேவியர்க்குப் புவிகருமஞ் செய்யவென்று
அங்கம் பொருக்கியல்ல தங்காள் செங்கையிலே தானும்விட்டு
என் பிறவே துடர்ந்து தேவியரே இனி உறவு நாம வேண்டாமடி
நீங்கள் மூதாக்கள் சீர்பாதம் சேருமென்றாலுத்தமியும்
2310 மூணுலக நீரெடுத்து அரிய புரவியரும் முன்னையள்ளி விட்டாளாம்
மூக்காலும் நீரில் தங்காள் இளைய நல்ல பட்டுடுத்தி
ஈரந்துவட்டித் தங்காள் முழுகிக் கரையேறி
ஈஷ்பரரைத் தானினைந்து எண்ணியவள் தன்மனதில்

கூந்தலைக் கோதிக் குளிரமயிர் தானாத்தித்
2315 தலைவிரித்து நல்லதங்காள் தன்பிறப்பை நொந்துகொண்டு
எழுதும் விருமாவே எமதர்ம ராசாவே
காலசனியர் நீ கற்பிக்குங் கர்த்தாவே
சிவசிவா என்னை இப்போச் சிருதப்பி வெளியில்விட்டீர்
பொன்னாம்பல நாதரையும் பொற்கொடியாள் மனதிலெண்ணி
2320 விபூதிதனை எடுத்துத் தங்காள் விருசாகத் தானணிந்து
வேதினைபை நெஞ்சில்வைத்து விருமாவை நொந்துகொண்டு
அண்ணரையுந் தான்தேடி அரியபுரவியரும்
பச்சைக் குலையொடித்துப் பத்தினியாள் நல்லதங்காள்
ஓலைப்பூச் சித்தாடைத் தங்காளுக்கு ஒருபக்க முக்காடு
2325 வாழைப்பூச் சித்தாடைத் தங்காளுக்குத் வச்சிருக்க முக்காடு
தாழம்பூச் சித்தாடைத் தங்காளுக்குத் தலைநிறைய முக்காடு
தாவங்கள் அண்ணருக்குத் தங்காள் தண்ணிவிடாய் தீர்க்கமுடி
பாளக்கஞ் செய்வதற்குத் தங்காள் [1]படியபுளி தானெடுத்து
ஏலமுஞ் சுக்கும் தாங்கள் இனிய கிராம்புடனே
2330 எடுத்து மங்கே நல்லதங்காள் இனிய கிராம்புடனே
எடுத்து மங்கே நல்லதங்காள் இனியகிராம்புடனே
மடிநிறையக் கட்டியங்கே தங்கள் வழிநடக்க வேணுமென்று
விரமலை திசைநோக்கி வெளிப்பட்டாள் நல்லதங்காள்
ஏந்தினாள் திருக்கரமும் தங்காள் வாங்கினாள் வேப்பங்குலை
2335 ஆதிசிவன் மாயவரைத் தங்காளம்புடனே தானினைந்து
தென்மதுரைச் சொக்கரையும் தேவி மீனாட்சியையும்
காஞ்சிபுரம் வாழும் காமாட்சி அம்மனையும்
சிவந்திலிங்க ஈஷ்பரரைச் சிந்தையிலே தானினைந்து
திருவானைக்காவல் வளர் செம்புலிங்க ஈஷ்பரரை
2340 அகிலாண்ட நாயகியும் அன்புடனே தானினைந்து
பசுபதி ஈஷ்பருட பாதத்தை நெஞ்சில் வைத்து
வடிவுள்ள மங்கையரும் மங்கை சுந்தரவல்லியையும்
பெருங்கருணை அம்மனையும் பேர்போன ஈஷ்பரரும்
தேனார் குழலியம்மா யென்சிந்தையிலே நீதுணையாய்
2345 சுரும்பர் குழலியம்மா சொக்கலிங்க நாயகியும்

1 ஈறைய.

அந்தக் காந்திமதி தாயாரும் எனக்குக் கடிய துணை வருவாய்
சத்தேழு கன்னியரே தையலம்மை நாயகியே
மதுக்கரை குடியிருக்கும் வாழுஞ் செல்லாண்டியம்மா
ஆகாசத் தேவதையே ஆனதொரு கன்னியரே
2350 நான் ஒருவி நடப்பதற்கு நீங்கள் உத்ததுணை வரவேணும்
நான் பெண்பிறந்த பேதையர்க்கு நீங்கள் பெரியதுணை வரவேணும்
நான் வனத்தில் நடப்பதற்கு நீங்கள் வாய்த்த துணைவரவேணும்
நான் புனத்தில் நடப்பதற்கு நீங்கள் பெரியதுணை வரவேணும்
நான் காட்டில் நடப்பதற்கு நீங்கள் கடிய துணை வரவேணும்
2355 என்றுசொல்லித் தங்காளும் இறைஞ்சியே தெண்டனிட்டு
அண்ணரையும் நான்தேடி அன்னம்போல் நடைநடந்து
பெரியண்ணர் அண்ணாவி பேர்போன காராளர்
சின்னண்ணர் வாள்வீரா சிறுபுலி குமாரசங்கர்
அத்தைபிள்ளை அத்தாவே எனக்கு அன்பான மச்சினரே
2360 என்னைத் தனியவிட்டு எங்கே நீர் ஒளிந்தீரோ
என்று சொல்லித் தங்காளும் இருகண்ணும் நீர்சொரிய
பாதத்தைப் பாத்த கண்ணும் அரிய புரவியரும் பலதிக்கும் பாராமல்
பூமியைப் பாத்த கண்ணும் புரவியின் திரும்பிப் பாராமல்
பாதையைப் பார்த்த கண்ணும் புரவிப் பாங்காகத்தான் நடந்தாள்
2365 விதியை நினைந்துகொண்டு வேதினையை நெஞ்சில் வைத்து
அண்ணரையும் தான்தேடி அருங்கானகம் புகுந்தாள்
சின்னண்ணரைத் தேடி புரவி செடிங்கானகம் புகுந்தாள்
ஏங்கானகம் போன அண்ணாவி என்பிறப்பே ஏன்காண்பேன்
தண்டிகை போனதொரு அண்ணாவி தடமோ தெரியவில்லை
2370 நம்ம பல்லாக்குப் போனதொரு அண்ணாவி பாதை தெரியவில்லை
ஆனபடை சேனைகளும் அண்ணாவி ஆனதொரு கால்தளமும்
நம்ம சதிரங்க சேனை படைபோன தடமோ தெரியவில்லை
நம்மகாவலாளும் சேவுகரும் கண்கொள்ளாச் சேனைகளும்
நம்ம அத்தைபிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
2375 செய்ய பெருமாளும் சேனைபடை கால்தளமும்
மாண்டவிடம் பார்ப்பமென்றால் அண்ணாவி வாய்த்ததுணை யாரு [மில்லை
நாந்தானோ பெண்பிறந்தேன் அண்ணாவி நாட்டிலையும்
நான்பெண்பிறந்து பட்டகதை பின்சொல்வார் மண்டலத்தில்

நான் மயிரால் ஒழக் கெண்ணைவாத்து முழுகுந்தலை
2380 செடியாலொரு மயிறு சிக்குப்பட்டே வாரநிற்ப
கல்லுநித்த முள்ளுருத்த சின்னண்ணர் தான்கடிகி வழிவாரநிப்ப
தூரு துயிலுரிய பெரியண்ணர் தூள்ளி வழிவாரநிப்ப
நான் இருவருடன் பிறந்து அண்ணாவி ஒருவர் துணையில்லாமல்
நான் தனித்து வழிவாரொன் அண்ணாவித் தடமோ தெரிந்ததில்லை
2385 நான்பெண் பிறந்த பேதையர்க்கு அண்ணாவி பெரியதுணை வரவேணும்
நான் சிறகுபறிகொடுத்து செங்குளத்து நாரைப்போல
நான்மயிறு பறிகொடுத்து மாடப் புறாப்போலே
நான்பிறப்பே பறிகொடுத்துப் புறம்பட்டேன் கானகத்தில்
நான்புரவிதனை இழந்தேன் போனவிடந் தான்தேடி
2390 நீங்கள் பட்டவிடம் தான்தேடி பாவியிங்கே வாரநிப்ப
நீங்கள் இறந்த விடந்தேடி அண்ணாவி ஏங்கிவழிவாரநிப்ப
இந்தப் பெருங் கானகந்தனிலே அண்ணா புலம்பி வழிவாரேன்
இந்த அருங்கானகந்தனிலே யாருமில்லா அயிவனத்தில்
நான் ஒருவி வழிநடந்து உளறிவழி வாரநிப்ப
2395 ஏன்காண்பேன் போன அண்ணாவி இறந்த விடந்தான் தேடி
வாரே நான் அண்ணாவி எனச்கு வாய்த்த துணை யாருமில்லை
ஆணை நெறிஞ்சி அல்ல அண்ணாவி அடிவைக்கப் போகுதில்லை
செப்பு நெருஞ்சியல்ல அண்ணாவி அடிவைக்கப் போகுதில்லை
செப்பு நெருஞ்சியல்ல அண்ணாவி சேரப்படுத்துதிங்கே
2400 இண்டம் புதையல்லவோ அண்ணாவி இருண்டவனம் காடு
கோறிண்டம் புதையல்லவோ கோத்திருந்து வாங்குதிப்போ
காரிண்ட முள்ளுமிங்கே சின்னண்ணர் அண்ணாவி கடித்து இழுக்குதங்கே
வெல்வேலர் முள்ளல்லவோ அண்ணாவிவிரல் நீட்டப்போகுதில்லை
கருவேலர் முள்ளல்லவோ அண்ணாவி காலுதைக்கப் போகுதில்லை
2405 பெருங்கிளர் முள்ளல்லவோ பிறிக்கிழிக்குதிங்கே
சிறுகிளர் முள்ளல்லவோ அண்ணாவி சீறிக்கிழிக்குதிங்கே
என் அங்கமெல்லாம் புண்ணாக அறுத்துத்திரம் பாய்திங்கே
எட்டி நடப்பதென்றால் எலந்தமுள்ளோ தைக்குதிப்பேய
தூக்கி அடிவைப்பமென்றால் சூரிமுள்ளோ மெத்தவிப்போ
2410 கடுகி நடப்பமென்றால் காரமுள்ளோ மெத்தவிப்போ
கல்லு மலையுமல்லோ கானகமோ ரொம்பவிப்ப

சில்லென்னகாடு அண்ணா செடியும் வனாந்திரமும்
இருண்ட வனக்காடு அண்ணாவி இலந்த வனக்காடு
மூங்கி வனக்காடு அண்ணாவி புள்முருங்கை வனக்காடுமிது
2415 முள்ளு வனக்காட்டில் மதிச்சுவழி வாறதிப்ப
தனித்துவழி வாறேன் அண்ணாவித் தடமோ தெரியவில்லை
நான் இருவருடன் பிறந்து அண்ணாவி ஏழைபோலானேமோ
நான் அறையிலே பெண்பிறந்து அண்ணாவி அருமையுடனென்னை
வளர்த்து
என்னைத் தரையிலே விட்டாலே தண்டைக்கால் நோகுமென்று
2420 என்னைப் பூமியிலே விட்டாலே அண்ணாவி புழுதிபதிக்குமென்று
என்னை வீதியிலே விட்டாலே வீரியங்கள் குன்னுமென்று
நீங்கள் மார்மேல் நடைபழக்கி வளத்திரே என்னையுமே
நான்நெல்லி நிழலறியேன் நெய்க்காந்தக் கொம்பறியேன்
நான் தேங்காயைக் கண்டதுண்டும் தென்னைமரம் நானறியேன்
2425 நான் மாங்காயைக் கண்டதுண்டும் அண்ணாவி மாமரமே நானறியேன்
நான் தண்ணீர்துறைக்குத் தடமறியாப் பத்தினிதான்
வாய்க்கால் துறைக்கு அண்ணாவி வழியறியாப் பத்தினிதான்
சந்திரரை சூரியரை சத்து அறிந்ததில்லை
அப்படி நீஎனை வளத்து அண்ணாவி அருங்காட்டில்விட்டீரோ
2430 இப்பக்கல்லு முள்ளுருத்த சின்னண்ணா அண்ணாவி கடிகிவழிவாரேன்
பூப்பட்டால் கொப்பளிக்கும் என்பொன்னூரு திருமேனியிலே
தண்ணிப்பட்டால் கொப்பளிக்கும் என் தங்கத் திருமேனியிலே
உலையிலிரு மெழுகதுபோல் உள்ளமெல்லாம் புண்ணாகி
என்பவளத்திருமேனி அண்ணாவி பாதமெல்லா முள்ளுகுத்த
2435 எலந்தப்பழ மேனியெல்லாம் இருபுறமுங் கல்லமுத்த
என் முருக்கம்பூ மேனியெல்லாம் முள்ளுகுத்தமையமிப்போ
ரத்தம் வடியுதல்லோ அண்ணாவி எனக்கு ரேகமெல்லாம் புண்ணாக
உனக்குக் கல்லுமனசு அண்ணாவி கரையாத நெஞ்சகமோ
உனக்கு இரும்பு மனசோதான் அண்ணாவி இளகாதநெஞ்சமிப்போ
2440 வன்னெஞ்சோ அண்ணாவி எனக்கு வழியுந்தெரிந்ததில்லை
நான் இனம்பிரிந்த மானதுபோல் ஏங்கி பழிவாரரிப்ப
நான் பெண்ணாய்ப் பிறந்ததுதான் அண்ணாவி மண்ணாய்ப்
பிறந்ததில்லை

மண்ணாய்ப்பிறந்து அண்ணாவி யொருமரமாய்ப் பிறந்ததில்லை
அந்த மரத்தினிலேதான் ஒருமல்லிகையாய்ப் படந்தனில்லை
2445 மல்லிகையாய்ப் பூத்தால் அந்த மகாதேவர்க்கொப்பிதமாய்
அந்தப்பலனுமில்லை அண்ணாவி ஆரணங்கும் பெண்பிறந்து
நான் பிறந்து பட்டகதை அண்ணாவி பின்சொல்வர் மண்டலத்தில்
நான் வளநாட்டுக் கோட்டையிலே அண்ணாவிவாழுகின்ற நாளையிலே
என்கூடிருந்து விளையாட ஒருகுயில் வேணுமென்றேன் நான்
2450 எனக்குப் பக்கமிருந்து விளையாட அண்ணாவி பஞ்சவர்ணக்கிளி வேணும்
என்று சொல்லிக் கேட்டேன் எனக்கு நீ இப்போது
எந்த மலைக்கிளிதான் தங்கையரே இதமாக வார்த்தைசொல்லும்
தோகை மலைக்கிளியானால் தங்கையரே துணையிருந்து பேசாது

## தங்கை அருக்காணி படுகளம் தேடிப் போகுதல்

பச்சை மலைக்கிளியானால் பக்கமிருந்து பேசாது
2455 கொல்லிமலைக் கிளியானால் குரல்மங்கி வார்த்தைசொல்லும்
வீரமலைக் கிளியானால் தங்கையரே விதமாக வார்த்தைசொல்லும்
என்று சொல்லி அண்ணாவி இதமாக வார்த்தை சொன்னீர்
நீ வீரமலை யென்றுசொல்லி விருப்பமுடன் கேட்டிருப்பேன்
வீரமலை பார்க்க அண்ணாவி விதிச்சாரே என் தலையில்
2460 ஆதிசிவன் மாயவரும் அண்ணாவி அன்று எழுதிவிட்டாய்
எழுத்தும் படிக்கல்லலோ எனக்கு வந்து மூண்டுதிப்போ
என்று சொல்லித் தங்காளும் இப்படியே தானுரைத்து
வீரமலைக்காடு புரவி விதமாக உள்புகுந்து
வழிமுழுதுங் கண்கலங்கி வாணாளே நல்லதங்காள்
2465 வெம்முடியைத் தான்பார்த்து அரியபுரவி விதமாகத்தான் புலம்பி
ஆங்காரச் சத்தமிட்டு நல்லதங்காள் அருகில் கானகம் புகுந்தாள்
அவள் ஓங்காரச் சத்தமிட்டுப் புரவியரும் உத்தமியாள் தானடந்தாள்
நல்லதங்காள் குரல்கேட்டு வீரமலைக்காடு நல்லதொரு பட்சியெல்லாம்
பத்தினியாள் குரல்கேட்டு பாலனும் பாலுண்ணாது
2470 உத்தமியாள் குரல்கேட்டு ஒருவரும் புசியாராம்
மரங்கள் குலையாட தாம்மறுப் பேசாறாம்
பட்ட மரமத்தினையும் புரவியர்க்குப் பாலாச் சொரிந்திடுமாம்
உளுத்த மரமத்தினையும் ஓங்கித் தழைத்திடுமாம்

பூத்த மரமத்தினையும் புலம்புரதைத்தான் கேட்டால்
2475 பூத்த மரமத்தினையும் பூவுதிர்ந்தே கேட்டிடுமாம்
காச்ச மரமத்தினையும் புரவி காவியத்தைக் கேட்டாலே
காச்ச மரமத்தினையும் காயுதிர்ந்து போயிடுமாம்
பழுத்த மரமத்தினையும் தங்காள் பழமொழியைக் கேட்டாலே
பழுத்த மரமத்தினையும் பழமுதிர்ந்து போயிடுமாம்
2480 மண்ணுமர மத்தினையும் வாய்விட்ட ழுதிடுமாம்
நான் பத்தினியாள் புலம்பரது அண்ணாவி பாங்காகக் கேள்க்கலையோ
நான் உத்தமியாள் புலம்பரது உன்செவிக்குக் கேட்கலையோ
காராம் பசுவுகளும் கன்றும் பால்குடிக்காது
பசுவும் பால்குடியாது பாலனும் பாலுண்ணாது
2485 வனத்திலுள்ள மிருகமெல்லாம் வாய்த்த பணிசெய்திடுமாம்
ஆங்காரச் சத்தமிட்டுப் புரவி அண்ணரையுந் தான்தேடி
அன்னம் போலத்தான் நடந்து புரவி ஆதர்சக்கை வீசி
அவள் பாதத்தைப் பாத்த கண்ணும் பலதிக்கும் பாராமல்
வீரமலை திசைநோக்கி அரியபுரவி விதமாக வருகையிலே
2490 அத்தைப்பிள்ளை அத்தாவும் ஆனபடை சேனைகளும்
செய்யபெருமாளும் நம்ம சேனைபடை காலாளும்
பட்டு விழுந்திடத்தில் பாதரென களத்தில்
கண்டாளே நல்லதங்காள் கண்ணுரெண்டு முத்துதிர
அத்தாவே மச்சினரே எனக்கு ஆனதுணை என்றிருந்தேன்
2495 செய்யபெருமாளே எனக்குச் சேந்த துணை என்றிருந்தேன்
நீங்கள் மச்சினரும் மச்சினரும் வங்கணம் பிரியாமல்
நீங்கள் சேந்து படை வெல்லாமல் சிவயோகஞ் சேர்ந்தீரோ
நீங்கள் கூடிப்படை வெல்லாமல் போனீரோ
நீங்கள் இருந்து படைவெல்லாமல் இரந்து மடிந்தீரோ
2500 ஓடுகிற தண்ணியிலே ஒருகோரை நின்றாப்போல
வாடித்தவித்து இங்கே நீங்கள் மாண்டவிடந்தான்தேடி
நான் இருவி பிறந்தவள்கு உத்ததுணை என்றிருந்தேன்
நீர் தனியாகப் பள்ளி கொண்டீர் தாஷ்டிகனேமச்சினனே
என்னைத் தனியே விட்டு எமலோகஞ் சேர்ந்தாயோ
2505 உனக்கு வரப்போ தலகாணி வாய்க்காலோ பஞ்சுமெத்தை
உனக்குப் புல்லோ தலகாணிப் பூமியோ பஞ்சுமெத்தை

உனக்குக் கல்லோ தலகாணி அத்தாவே கானலோ பஞ்சுமெத்தை
திருப்பாக் கடலிலேதான் சீராமர் மாயவரும்
பள்ளிகொண்டவர் வினையைப் பாத்து மிருந்தீரோ
2510 பாத்திருந்த அத்தாவே பள்ளிகொண்டா இவ்வனத்தில்
நீங்கள் அப்பவருங் கூடியிங்கே ஆனபடை வெல்லாமல்
நீங்கள் தனித்துப் படைபொருதி தானிறந்து விட்டீரோ
என்று சொல்லித் தங்காளும் ஏங்கி மிகவழுது
அத்தாவும் பட்டதொரு ஆனபடு களத்தை
2515 ஈ எறும்பு தீண்டாமல் இனியகொலை தானொடித்து
மெய்க்காவல் வைத்து விருசாக நல்ல தங்காள்
அந்த வனங்கடந்து புரவி அடுத்தவனம் உள்புகுந்தாள்
அண்ணரையும் தேடிப் புரவி அலறிப் புலம்புகிறாள்
பெரியண்ணா வாள்வீரா பேர்போன காராளா
2520 சின்னண்ணா வாள்வீரா சீறுபுலி குமார சங்கர்
ஏனங்காண்பேன் உங்களைத்தான் இந்தவனக் காட்டிலேதான்
அலறி வழிநடந்தாள் ஆயிழையாள் நல்லதங்காள்
குயில்போலே தான்புலம்பி தங்காள் கூடிவழி நடந்தாள்
அண்ணாவி என்ற சத்தம் வீரமலை அடிவாரம் சிலையோடும்
2525 மலையோ கிடுகிடெனும் வனங்கள் சிலையோடும்
வழிமுழுதுங் கண்சிவந்து மங்கைநல்லாள் உத்தமியும்
மயில்போலேதான் புலம்பி வருகிறாள் உத்தமியாள்
வீரமலை வெம்முடியில் வீத்திருக்கும் மாதாவே
ஏழுபேர் சத்தகன்னி இணை பிரியலாட கன்னி
2530 ஏழுபேர்க் கிளைய கன்னி இயல்பெரிய மாதாவும்
ஆதிசிவன் தனக்கு அரனார் திருமகளும்
வீரமலை வெம்முடியில் வீற்றிருந்தாள் தன்தவசு
ஊசிமுனை மேலே பெரியக்காள் உளுக்காந்தாள் தன் தவசு
பாசிமுனை மேலே பெரியக்காள் பத்தினியாள் வீத்திருந்தாள்
2535 ஆருமறியாமல் பெரியக்காள் அருந்தவசு பண்ணுகிறாள்
மானிடச் சத்தமங்கே மனுசர் சத்தங் கேளாமல்
உரல்சத்தங் கேளாமல் பெரியக்காள் உத்தமியாள் தவசிருந்தாள்
சடைமுடியுடன் பெரியக்காள் சன்னாசி மார்க்கமதாய்

போற்றும் புலித்தோலும் பெரியக்காளுக்குப் புள்ளிமானாசனமும்
2540 மேலெல்லாம் வெண்ணீறு மேனியெல்லாம் உத்திராச்சம்
அங்கமெல்லாம் வெண்ணீறு ஆபரணம் உத்திராச்சம்
சித்தன் மகளாகப் பெரியக்காள் தேவி தவசிருந்தாள்
அயிந்தலை நாகமங்கே பெரியக்காளுக்கு அரவங் குடைபிடிக்க
நாகங்குடிடைபிக்க பெரியக்காளுக்கு நற்பாம்புத் தாலாட்ட
2545 வனத்திலுள்ள மிருகமெல்லாம் பெரியக்காளுக்கு வந்துபணி ஏவல்செய்ய
இருந்தாள் பெருந்தவசு பெரியக்காள் எல்லவருங் கொண்டாட
வெம்முடி வேல்மாதாவும் வீற்றிருந்தாள் பெருந்தவசு
மலைபுரக்கும் நாளையிலே கூடப்பிறந்த முனி
மந்திர மகாமுனியும் மலைக்காவலுடையவனும்
2550 சடாமுனிகள் தான்சூழ தனிக்கருப்பன் அண்ணனுந்தான்
சத்தேழு கன்னியரும் தானுமங்கே சூழ்ந்திருக்க
இந்தப்படியாகப் பெரியக்காளிருந்தாள் பெருந்தவசு
அந்தப்படியாகப் பெரியக்காள் ஆத்தாள் தவசிருக்க
இருக்குமந்த மலைதனிலே நல்லதங்காளுத்தமியும்
2555 வீரமலைக் காட்டில் வெம்முடியைத் தான்பாத்து
அண்ணாவி என்று சொல்லித் தங்காளறியங்கே வாராளே
சின்னண்ணா அண்ணாவி என்று சிறியவள் வருகையிலே
வீரமலை மாதாவும் விருசாகத்தான் கேட்டு
மானிட சத்தமங்கே மனுசர் சத்தமாக முடி
2560 அண்ணாவி என்ற சத்தம் பெரியக்காள் அனந்தலிலே தான்கேட்டு
கோவித்துத் தான்பார்த்துக் கொடுஞ்சூரி மாதாவும்
சீறியே தான்பார்த்து சினந்துமங்கே ஏதுசொல்வாள்
வனத்திலுள்ள மிருகங்களைப் பெரியக்காள் வாருமென்று தானழைத்து
கரடிபுலி சென்னாயும் காட்டானை உள்ளதெல்லாம்
2565 வனத்திலுள்ள மிருகமெல்லாம் பெரியக்காள் வாருமென்று தானழைத்து
நாகமீன்ற கன்னியரே நல்லகன்னி மாதாவே
சடையாய்ப் பெருத்தவளே தவசுக் குடையவளே
இத்தனை காலமிங்கே பெரியக்காள் யிந்தமலைதனிலே
இந்த வீரப்புரக்காடு வனம் வெம்முடி மலைதனிலே
2570 மானிடச் சத்தமங்கே மனுஷர் சத்தங் கேட்டதில்லை
இப்ப ஏதோ தெரியாது இனிய சத்தங் கேள்குதடா

இது பேயோ பெசாசோ தான் பிணந்தின்னும் பூச்சியோதான்
இது ஆரென்று நீபாத்து அடித்துத் துரத்துமடா
அச்சேதி தான்கேட்டு அங்கிருந்த மிருகமெல்லாம்
2575 ஆச்சியரைத் தெண்டநிட்டு அந்தமலை வாழ்மிருகம்
ஆக்கரித்து கொக்கரித்து அதட்டி வழிநடந்து
தண்டைமிக முறுக்கி தாண்டி மிருகமெல்லாம்
நாலுதிக்குமே பாத்து மிருகம் நாடி வருகையிலே
அன்னருடப் பிறந்த அருக்காணி நல்லதங்காள்

## அருக்காணி புலம்பல்

2580 பாதத்தைப் பாத்த கண்ணும் தங்காள் பலதிக்கும்பாராமல்
மயில்போல நடைநடந்து அரிய புரவி குயில்போல புலம்புகிறாள்
புலம்புகிற சத்தமதை புலிகரடி தான்கேட்டு
கும்புகும்பு தானாகக் கூடி மிருகமெல்லாம்
கிட்டவந்து மிருகமெல்லாங் கிளிமொழியைத் தான்பாத்து
2585 இவள் ஆதி பராபரியோ எங்கள் அகிலாண்ட நாயகியோ
இவள்தாயே பராபரியே தய்யலரோ இங்குவந்தாள்
மாயோ பறியோ தான் இந்த வனக்காடு வந்தாளோ
ஆரோ இவள்தானும் இவளை அறிய முடிக்கூடாது
நகர் சோதினையாக எங்கள் நாயகியாளிங்குவந்தாள்
2590 பாதம் பணிந்திடுமாம் மிருகங்கள் பணிவிடைகள் செய்திடுமாம்
கல்லு முள்ளுந்தான் பொறுக்கி மிருகங்கள் காடுகரை செப்பனிடும்
தடங்கள் மிகக்கூட்டி மிருகங்கள் தையலர்க்கு முன்னேவரும்
வழிகாட்டியே நடக்கும் வாய்த்த முள்ளுந்தான் பெருக்கும்
குலைபுரித்து முன்போட்டு மிருகங்கள் கூட்டி மிகநடக்கும்
2595 மிருகங்கள் அத்தனையும் புரவியற்கு வேணபணிகள்செய்து
அந்த வனத்திலிருக்கும் அடவான சர்ப்பமெல்லாம்
நாகங் குடைபிடிக்கப் புரவியற்கு நற்பாம்புத் தாலாட்ட
அயிந்தலைநாகம் புரவியற்கு அரவம்வந்து குடைபிடிக்க
மயிலுங் குயிலுகளும் புரவியற்கு மாடப்பிறாவினமும்
2600 அன்னமுந் தாராவும் புரவியற்கு அழகான புள்ளினமும்
வர்ண வரிக்குயிலும் புரவியற்கு வாகான நற்குயிலும்
மார்மேலுந் தோள்மேலும் புரவியற்கு மருவி விளையாடும்
தன்னினமென்று சொல்லிப் புரவியற்குத் தாவாட்டி முன்னேவரும்

வனத்திலுள்ள மிருகமெல்லாம் புரவிபற்கு வழி கூட்டி முன்னேவர
2605 அவள் பாதத்தைப் பார்த்த கண்ணும் அரியபுரவி பலதிக்கும்பாராமல்
அண்ணாவி என்ற சத்தம் புரவி அலறி மிகப்புலம்பி
பெரியஅண்ணா அண்ணாவி பேரான காராளர்
என் சின்னண்ணா வாள்வீரா சிறுபுலி குமாரசங்கர்
நான் [1]இருவருடப் பிறந்து ஒருவர் துணையில்லாமல்
2610 பதறிவனம் வாரநிப்பப் பாரவழி நடக்க
நீ போன தடந்தெரியாமல் புலம்பி வழி பாரநிப்ப
நீங்கள் மாடத்தைக் கட்டியல்ல மயிலந்தனை வளத்து
மாடம் இருக்கவல்லோ அண்ணாவி மயில்போன நீதிஎன்ன
நீங்கள் கூடத்தைக் கட்டியல்லோ குயில்தனை வளத்து
2615 நீங்கள் கூடம் இருக்கவல்லோ குயில்போக நீதியுண்டோ
நீங்கள் ஆணையிருக்குதென்று அச்சமில்லை என்றிருந்தேன்
இப்ப ஆணைக்குச் சற்றே அச்சம் வந்து நேர்ந்துதிப்ப
நம்ம குதிரை படையிருக்குதென்று குறையொருநாள் இல்லைஎன்றேன்
குதிரைபடை பட்டதினால் குறைவந்தே நேந்துதிப்ப
2620 என்னைவிட்டுப் பிரிஞ்சதில்லை அண்ணாவி வேறுமுகப்பட்டதில்லை
நான் பத்தினியாள் புலம்பறது பலதிக்குங் கேட்கிலையோ
நான் உத்தமியாள் புலம்பறது உன்செவிக்குக் கேட்கிலையோ
நான் அருந்ததியாள் புலம்பறது இந்த அயிவனமோ கேள்க்கிலையோ
நான் வனத்தில் புலம்பி அவளோ அண்ணாவி காட்டிலிங்கு வந்தோம்
2625 உங்கள் வல்லாமை வீரியமும் மகாதேவர் வாங்கினரோ
உங்கள் ஆண்மை பிறபலமும் அண்ணாவி ஆதிசிவன் வாங்கினரோ
நான்மயில்க்கூவுஞ்சத்தம் அன்று நீங்கள் மனதாரக் கேள்க்க
கோஓலன்று தானழுது புரவியரும் தொடுங்கானகம் புகுந்து
ஓங்காரச் சத்தமிட்டு புரவியரும் ஊறிவழிநடந்தாள்
2630 அண்ணாவி யென்று புரவி அலறி வழி வருகையிலே
வீரமலை அடிவாரம் வெம்முடி சிலையோட
அண்ணாவியென்ற சத்தம் பெரியக்காள் அரவமதுதான் கேட்டு
சத்தமது தான்கேட்டு தாயார் பெரிய அக்காண்டி
ஏதடி கன்னிமாரே இனிய சத்தங் கேள்க்குதடி

---

1 இருவராய்ப்

2635 மானிட சத்தமது கன்னிமாரே மனுஷசத்தங் கேள்க்குதடி
பெண்பால் சத்தமாய் கன்னிமாரே பெரிய சத்தங் கேள்க்குதடி
தவசு குலையுதடி தங்கைமாரே தவசுநிலை ஆடுதடி
என் சிந்தை கலங்குதடி தங்கைமாரே சீறுதப்பிப் போகுதடி
பூசைமறக்குதடி தங்கைமாரே புத்திதப்பிப் போகுதடி
2640 என்னேமங் குலையுதடி கன்னிமாரே நினைவுதப்பிப் போகுதடி
நீங்கள் ஆரென்று சொல்லி அளவறுத்து வாங்களடி
அவளை நெருப்பா யெரியுங்கள் அவளை நீருதணலாக்குங்கடி
அக்கினியாய் மூட்டுங்கடி அவளை ஆராங் கொள்ளுங்கடி
வீரமலை மாதாவும் கன்னியர்க்கு விபரமுடன் சேதிசொல்லி
2645 அச்சேதிகேட்டு அதிந்து கன்னி யெழுவருந்தான்
நல்லதென்று கன்னியர்கள் நாயகியாளோடிவந்து
கண்கள் சிவந்து கன்னிமார் கடுங்கோப மூண்டாகி
சிரிநெடுமூச் செறிந்து கன்னிமார் செங்கண் நெருப்பெரிய
நெருப்பாயி யெரிக்கவென்று நெறுத்துளியாக்கவென்று
2650 கொடுஞ்சூரி கன்னியர்கள் கோபங்கொண்டே நடந்தார்கள்
கன்னியர்கள் நடக்கக் கானகங்கள் உள்ளதெல்லாம்
அதிர்ந்து நடுங்கிடுமாம் அந்தவனம் உள்ளதெல்லாம்
அப்போ வீரமலைக்காடு வெம்முடி கிடுகிடெனும்
நாகமலை தோகமலை அப்ப நடுங்கிப் புயந்திடுமாம்
2655 கன்னிமாரேழு பேரும் கடிகியே ஓடிவந்து
பொற்கொடியாள் நல்லதங்கு போறவனந்தனிலே
கிட்டவந்து கன்னியர்கள் கிளிமொழியைத் தான்பாத்து
இந்த வீரமலை அக்காட்டி வெம்முடியில் வீத்திருக்கும்
அவளியு மிஞ்சினவள் ஆனதங்காள் உத்தமியும்
2660 கண்டுமங்கே கன்னியர்கள் கானகத்தே வருகையிலே
நாகங் குடைப்பிடிக்க நல்லபாம்புத் தாலாட்ட
அயிந்தலை நாகம் புரவியர்க்கு அரவங்குடைப்பிடிக்க
ஆனை புலிகரடி புரவியர்க்கு ஆன்புரதவே புண்ணிய
பேயும் பிசாசுகளும் பிணந்தின்னும் பூச்சிகளும்
2665 கண்ட பேரண்ட பட்சி கனகமுனியுள் ளதெல்லாம்
கல்லு மூள்ளுந்தரனம் பெரிக்கிக் கதிவழி செப்பநிட்டு
செம்முனிகளுள்ள தெல்லாம் செடிபிடிங்கி முன்னேவர

கருமுனிகளுள்ள தெல்லாம் காடுவெட்டி செப்பநிட
இந்தப்படி முனிகள் யியல்பாகக் கூட்டிவர
2670 அவள் பாதத்தைப் பாத்த கண்ணும் பலதிக்கும் பாராமல்
அவள் பெருவிரலைப் பாத்தகண்ணும் பின் திரும்பிப்பாராமல்
அவள் அன்னம்போல நடைநடந்து அவள் ஆசாரக்கைவீசி
மயில் போலப் புலம்பியவள் வழிநடந்து வாராள்காண
கண்டார்கள் கன்னியர்கள் கண்கள் களிகூற
2675 கூடியே பாத்திருந்து கொடுஞ்சூரி ஏதுசொல்வாள்
பேயும் பிசாசுமல்ல பிணந்தின்னும் பூச்சியல்ல
இவளாஎன்று சொல்லி யிவள் தங்கையரே ஆராய்ந்து பாருங்கடி
இவள் வரத்தால் பிறந்தவடி வரமிகுத்த தங்கையடி
சத்திமுத்தியுள்ள வடியிவள் தங்கையரே ஆகுமடி
2680 இவள்கூட நடந்தார்கள் கன்னியர்கள் கூட்டிவழி போறார்கள்
அஞ்சாதே அஞ்சாதே தங்கையரே ஆனதுணை வாரமடி
நீயொருவி துணைவாரதுக்கு நாங்கள் உத்ததுணை வாரமடி
அச்சேதிதான் கேட்டு புரவியரும் அண்ணரையுந்தான் கூடி
ஆங்காரச் சத்தமிட்டு புரவியரும் அலறி புலம்புகிறாள்
2685 இவள் புலம்புகிற சத்தம் பெரியக்காள் பொன்மலையில் கேட்டிடுமாம்
வெம்முடியில் மாதாவும் வெகுகோபந் தானாகி
சங்கிலிக் கருப்பண்ணே சடாமுனியைத் தானழைத்து
விலங்கிலே போட்டிருந்த வீரமுனி உள்ளதெல்லாம்
பாங்காய்த் தனையழைத்து பத்தினியாளேது சொல்வாள்
2690 என் தவசு குலையுதடா தம்பிதவசு பரிபோகுதடா
பூசை மறக்குதடா தம்பி புத்தி தப்பிப் போகுதடா
என்சிவபூசை தப்பியடா சீருதப்பிப் போகுதடா
அந்த அர்ப்பப் பிசாசையடா தம்பிமாரே அடித்துத் துரத்துங்கடா
என் தவசைக் குலைக்கமுடி ஒரு சத்திறுதிவாறாடா
2695 பெண்குரல் சத்தமடா தம்பியரே பொறுக்க முடிக்கூடுதில்லை
ஓடிமரியுங்கடா தம்பிமாரே ஒரு நொடியில் சொல்லுங்கடா
அந்த அற்பப் பிசாசுதனை தம்பிமாரே அனலா யெரியுங்கடா
நெருப்பா யெரியுங்கடா தம்பிமாரே நீராய் தணலாக்குங்கடா
அவளைக் கொண்ணு சரிபிடித்து அவள்குடல் பிடிங்கி மாலையிட்டு
2700 இரத்தங்களைக் குடித்து நாடியிங்கே வாருமென்று

வீரமலை மாதாவும் விருசாகத் தானனுப்ப
ஒண்டிக் கருப்பணனும் ஒத்தைச் சடாமுனியும்
விலங்கிலே போட்டிருந்த வீரமுனி உள்ளதெல்லாம்
கூடியே கூட்டமிட்டுக் கொக்கரித்துத் தானெழுந்து
2705 அதட்டித் தடியெடுத்து ஆக்கரித்துப் பல்கடித்து
சீறிச்சினந்து மங்கே சீக்கிரமாய்த் தானடந்து
பக்கம் வந்து நின்று பார்த்தார்களெல்லோரும்
அவள் பாதத்தைப் பார்த்த கண்ணும் பலதிக்கும் பாராமல்
அவள் குனிந்த தலைநிமிராமல் குலக்கொடியாள் நல்லதங்காள்
2710 அண்ணாவி என்ற சத்தம் அனந்தலிலும் மறக்காமல்
அவள் குயில்போலே தான்புலம்பி மயில்போலே வருகிறாள்
நாமங் குடைபிடித்து நாடியங்கே வாரதைத்தான்
வாழ்முனிகளத்தனையும் வனங்கள் வெட்டி முள்பெருக்கி
கன்னியர்களெழுவருந்தான் புரவியர்க்குக் கல்பெருக்கி முன்னேவர
2715 கண்டு மனமகிழ்ந்து கடிய கருப்பணனுந்தான்
இவளாரோ தெரியாது அறியாமலிங்கு வந்தோம்
அந்த அக்காண்டி அம்மனுக்கு அதிகமே தப்பாது
என்று சொல்லிக் கருப்பணனும் ஏற்றமுனி உள்ளோரும்
காடுவழி செப்பனிட்டுக் கல்லு முள்ளுந்தான் பெருக்கி
2720 கூட்டி வழி நடந்தான் இவளைக் கொல்லவந்த முனிகள் எல்லாம்
அப்போது நல்லதங்காள் ஆங்காரச் சத்தமிட்டு
புலம்புகிற சத்தமது பெரியக்காள் தான்கேட்டு
மலைபுரக்கும் நாளையிலே கூடப்பிறந்த முனி
மந்திர மகாமுனியை வாருமென்று தானழைத்து
2725 என் தவசு குலையுதடா தவசு நிலை யாடுதடா
என்பூசை மறக்குதடா எனக்குப் புத்தி தப்பிப் போகுதடா
ஆரோதான் பெண்ணொருவி அழுதுவழி வாராடா
எனக்கு அனலாகத் தாவுதடா அவடத்திலே கொல்லுங்கடா
அவள் புலம்பி வருகுறது எனக்குப் பொறுக்கமுடி கூடுதில்லை
2730 அந்த அற்பப் பிசாசையடா அடித்துத் துரத்துங்கடா
எனக்குந் தவசை குலைக்கமுடி அவள்தான் புலம்பிவாராடா
அவளைச் சரிபிடித்து அங்கேதான் கொல்லுங்கடா
சீக்கிரமாய் நீபோடா அவள்சீவனை கொள்ளைகொண்டு

உன் இருப்புத் தடியாலே இருதுண்டாய் வீசி
2735 வாடா நீ தம்பியென்று மாதாவுந் தானனுப்பி

அப்போ வீரமகாமுனியும் விருசாகத் தானெழுந்து
சடையை விறுகது மங்கே சாம்பல்தனை அணிந்து
ஆக்கரித்துப் பல்கடித்து அதட்டி தடி எடுத்து
இருப்புத் தடிஎடுத்து இனிதாகத் தோளில்வைத்து
2740 உசந்த மலையேறி ஊடுருவத் தான்பாத்து

அன்னம்போல் தானடந்து அரியபுரவி ஆகாசத்லை கவீசி
குயில்போலே தானடந்து தங்காள்கூடிவழி வாராள்காண்
சத்தேழு கன்னியரும் தடங்கூட்டி வாரதுவும்
வனத்திலுள்ள மிருகமெல்லாம் வாரவழி செப்பனிட்டு
2745 கானகத்துப் பேய்களெல்லாங் கல்லுமுள்ளும் தான்பெருக்கி

அயிந்தலை நாகம் அரவம்வந்து குடைபிடிக்க
இத்தனைத் திருக்கூட்டம் ஏந்திசைச்கி முன்னேவர
வாரதுவைக் கண்டானே மாமுனியு மப்போது
ஆரோ இவள் தானுமிவளை அளவிடவுங் கூடாது
2750 ஆதிபராபரியே நம்ம அயிலாண்ட நாயகியே

மாதாவைக் காணவென்று மகாயீஷ்பரியாள் வாராளோ
மனத்தில் நினைந்துகொண்டு மகாமுனிவன் ஓடிவந்து
மாதா தவசிருக்கும் வாய்த்த முடியில்வந்து
தாயே பராபரியே சங்கரியே மூக்கன்னியே
2755 மயேஷ்பரியே வல்லவனே மாதாவே

நாகமீன்ற கன்னியரே நல்லகன்னி மாதாவே
சடையாய்ப் பெருத்தவளே தவசுக் குடையவளே
பூசைக் கருத்தியரே பூலோக நாயகியே
பேரால் பெருத்தவளே பெரியமலை மாதாவே
2760 சங்கரியே என்தாயே தாயே பெரிய அக்காண்டி

வீரமலைத் தேடி விரும்பித் தவசிருந்தாய்
ஒருவர் சத்தங் கேளாமல் உத்தமியாள் வீத்திருந்தாள்
நீ பெண்குரல் சத்தம் பெரிய சத்தங் கேட்குதென்று
பேயோ பெசாசோ பிணந்தின்னும் பூச்சிஎன்று
2765 போயிமங்கே நீ அடித்துப் பொட்டிடண்வே வாருமென்று

அனுப்பி விட்டாயே மாதாவே அருந்துதியைப் போலப்பார்த்தேன்
அவள் உன்னிலையு மிஞ்சினவள் உனைமிகுத்தத் தங்கையடி
அவள் பொன்னார்புலத்திலடி பேறு பெத்து வந்தவடி
சன்னாசி வரம்பெற்ற சதுர்புடி பொன்னர் சங்கர்
2770 வரத்தால் பிறந்தவர்கள் வர்மமுள்ள காராளர்
போருக்குச் சங்கரென்றுப் பொறுமைக்குப் பொன்னரென்று
காராளர் தம்பிசங்கர் கதித்ததொரு அண்ணருடன்
பொன்னருடன் பிறந்த பொற்கொடியாள் நல்லதங்காள்
சங்கருடன் பிறந்து தையலரும் வாராள்காண்
2775 அவளாலே உன் தவசு அப்புனையுந் தப்பாமல்
ஆதி சிவன் மாயவரும் அண்ணு சொல்புடிக்கி
இருந்தாய் பெருந்தவசு யெல்லவரும் கொண்டாட
இருந்தாய் பெருந்தவசு குலைக்கமுடி தையலவள் வாராள்காண்
தவசை விட்டு நீயிரங்கித் தாயாரே இப்போது
2780 தேருமேல் நீயேறி சீக்கிரமாய்த் தான் நடந்து
வாரவழி பாத்து மனுக்குடுத்து நீ அழைத்து
குணமாக நீ அழைத்து அவளைக் கொண்டணைக்க வேணுமென்று
அச்சேதி கேட்டுமங்கே அதிபிரிய முண்டாகி
எனக்குத் தவசு முடிந்ததுவோ சங்கரனார் சொல்புடியோ
2785 வேதாளவத் தானினைந்து மாதாவிரும்பியே நொந்துகொண்டு
தவசை விட்டுக் கீழிறங்கித் தவரிச்சான் மாதாவும்
பூந்தேரு மேலே பொற்கொடியாள் மாதாவும்
தேரு மேலேறி மாதா சிவமுனியைக் கூட்டமிட்டு
சத்தேழு கன்னியரும் தாயாருட முன்னடக்க
2790 மந்திர மகாமுனியும் மனமகிழ்ந்து ஓடிவர
கன்னியரைக் காத்திருக்கும் கதித்த மலையாளம்
தந்திரமான கருப்பன் சன்னாசி கூட முனி
எல்லோரும் முன்னடக்க எழுந்திருந்தாள் மாதாவும்
தாயாரும் முன்னடக்க மாதா தன்சேனை பின்னடக்க
2795 மாதாவும் முன்னடக்க மகாமுனியும் பின்னடக்க
தேருடைக்க மாதாதேரு மணி ஓலமிட
ரதமோ நடந்து ரதமணிகளாட வர
வெம்முடியை விட்டு மேலோகம் புறக்க
பொ-21

ஆகாசமாய்ப் பறந்து மாதா அந்திரமாய்த் தேர்நடத்தி
2800 கானகத்தில் வந்துநின்று மாதா கண்டாரே தங்கையரே
ஆரடி தங்கையரே நீ அறிய உரையுமென்றாள்
அடியிந்த வனக்காடு வர எமனும் பயப்படுவான்
வீரமலை அடிவாரம் தங்கையரே விரும்பிவந்த காரியமென்
நீ மானிட சென்மமதாய் மனுசசென்மமாய்ப் பிறந்தாய்
2805 நீ மெத்தச் சிருதி யின்னம் உனக்கு வீரியங்கள் போதாது
எந்துஞ் சிறுகுழந்தை தங்கையரே இங்குவந்த காரியமென்ன
சத்தும் பயமில்லாமல் தாண்டி வந்தாய் யிவ்வனத்தே
அஞ்சாமல்த் தங்கையரே யிவனமே வந்தாயிவ்வனத்தே
அஞ்சாமல் தங்கையரே அயிவனமே வந்ததென்ன
2810 அண்ணாவியென்று சொல்லி அலறிமிக வழுது
நீ வீரமலை அடிவாரம் விரும்பி வந்த காரியமென
உன்பேருடனே ஊரு நீ பிறந்து வாழ்ந்ததுவும்
நீயாரு மகளென்று சொல்லி அரிய உரை தங்கையரே
நீஒண்ணு மொழியாதே உள்ளபடி சொல்லுமென்றாள்
2815 ஒக்கத் துணை வாரோம் உத்தமியே அஞ்சாதே
நீ ஒக்கத் துணை வந்ததுக்கு நாங்கள் உத்ததுணை வாரமடி
உன்பக்கத்துணை வாரமடி பத்தினியே அஞ்சாதே
நீ பெண்ணொருவி வந்தவள்க்கு நாங்கள் பெரியதுணை வாரமடி
அச்சேதி தான்கேட்டுப் புரவி அண்ணாந்து பாராமல்
2820 பாதத்தைப் பாத்த கண்ணும் புரவி பலதிக்கும் பாராமல்
அண்ணாவி என்ற புரவி அனந்தலிலும் மறக்காமல்
சின்னண்ணா என்ற சத்தம் சிந்தை தப்பிப் போகாமல்
குயில்கூவும் பாவினைபோல் புரவி கூவிப் புலம்பிடுவாள்
அப்போது மாதாவும் அந்திரத்தில் தேரைவிட்டு
2825 பூந்தேரைத் தான்சுழற்றி பொற்கொடியாள் மாதாவும்
அந்திரமாய்த் தேர்நிறுத்தி அக்காண்டி மாதாவும்
தங்காள் புரவி நிற்கும் தலைமேலே பூரணத்தை
கொண்டுவந்து மாதாவும் பூந்தேரைக் குணமாகத் தானிறுத்தி
நல்லதங்கா ளுத்தமிளே நடுவே தனை நிறுத்தி
2830 சுத்திவிட்டாள் பூச்சரத்தை சொட்டிவிட்டாள் பூரணத்தை .
ரதமாடும் பூச்சரங்கள் நல்ல தங்காளுத்தமியும்

சுத்தி வளைந்திடுமாம் தங்காள் தூர விலகாமல்
பத்தி வளைந்திடுமாம் புரவிபரைப் பாதைவிட்டுப் போகாமல்
இடமும் பிசகாமல் எடுத்தடியும் வையாமல்
2835 பக்கம் பிசகாமல் மாதாபாங்காயி வளைந்துகொண்டு
அஞ்சாதே அஞ்சாதே நங்கையரே ஆனதுணை வாரமடி
தலையெடுத்து நீபாத்து உன்தாழ்வு குறைசொல்லுமடி
என்று சொல்லி மாதாவும் தங்காளை இதமாகத்தான் கேள்க்க
அப்படியும் நல்லதங்காள் மாதாவை அண்ணாந்து பாத்தறியாள்
2840 அவள் பெருவிரலைப் பாத்த கண்ணும் பின்திரும்பிப்பாராமல்
அண்ணாவி என்ற சத்தம் அனந்தலிலும் மறக்காமல்
ஓங்கார சத்தமிட்டு உத்தமியாள் தான்புலம்ப
அடி அற்பப் பிசாசுமடி அவரதி நான் தாண்டி
பேயும் பிசாசுமடி பிணந்தின்னும் பூச்சியடி
2845 அடி உன்னைப்போல் நானொருவி உடப்பிறப்பே நானிழந்து
நான் பிறப்பே பறிகொடுத்துப் பிறப்பட்டேன் கானகத்தில்
அடியென்புறப்பை நானிழந்து ஒளியைப் போலானேண்டி
நான் வல்ல புறப்பிழந்தேன் வாய்த்ததுணை இழந்தேன்
நான் வாள்வீரனைத் தோற்று வாழ்ந்தேன் வனக்காட்டில்
2850 என்னை ஆரென்று கேள்க்கவடி அதிகாரமேதடிதான்
இந்த வனக்காட்டில் நீ மரிக்க வல்லான்மையேதடிதான்
என் உடப்பிறப்பே நானிழந்து ஓடிவந்தேன் கானகத்தில்
என் குறையை நீ கேள்க்க யெங்கிருந்து வந்தையடி
என்பக்கம் வந்து கேள்ப்பதற்கு பாங்கி ஒருவரில்லை
2855 தூரநின்று கேள்ப்பதற்கு எனக்குத் தோழி ஒருவரில்லை
நீ அந்திரத்தை நின்றடித்தான் அதபடியிங்கே கேள்க்கவந்தாயி
அடிபேபை சரிபண்ணி பெண்பெருமாள் கேள்ப்பாயோ
நாயைச் சரிபண்ணியடிநாயகமோ கேள்க்கவந்தாய்
நான் பிறப்பை பரிகொடுத்துப் பேச்சியைப் போலானேண்டி
2860 நான் வாள் வீரனைத் தோற்று மதிமயங்கி யிங்குவந்தேன்
அயிவரிருந்து அரசாண்டோம் வள நாட்டை
அயிவரும் போனபின்பு அற்பப் பிசாசானேன்
பொன்னாம்பலத்திலே தான்நாங்கள் பேறுபெத்து வருகையிலே
அம்பலத்துக் காணுரெண்டு அடுக்கிளைக்கிப் பெண்பிறந்தேன்
2865 பெரியண்ண அண்ணருமே பேர்போன பொன்னாண்டார்

சின்னண்ண அண்ணருமே சிறுபுலி குமாரசங்கர்
அத்தைப்பிள்ளை அத்தாவும் அம்மான் பெருமாளும்
செய்ய பெருமாளும் சிலைக்கேத்த வள்ளியாரும்
அஞ்சுபேர்க் காராளர் அதிவீரராய்ப் பிறந்து
2870 வளநாட்டுக் கோட்டையிலே வாழ்ந்திருந்தோம் சிலகாலம்
கல்லுக்கு மேற்கு கடைக்கரைக்கி நேர்கிழக்கு
எல்லையொத்த காடு இருகரையும் பேறுபெத்தோம்
வயசு பதினாறாயி வாங்கிவந்த வரம்படிக்கி
நாளு முகிஞ்சுதம்மா எங்களுக்கு நல்லோலை வந்ததினால்
2875 அயிவற்படை யெடுத்து அயிவனத்தே பட்டார்கள்
நான் ஒருநாள் பிரியாதாள் ஒருறவு தங்காதாள்
அண்ணமார் விட்டுப் பிரிந்ததில்லை வேத்துமுகப் பட்டதில்லை
எங்களுக்கு விதிவந்து நேர்ந்ததினால் வீரியங்கள் பட்டார்கள்
நாளும் [1]முகிஞ்சுதம்மா எங்களுக்கு நல்லோலை வந்துதம்மா
2880 காலம் வந்து சூழ்ந்ததினால் எங்களுக்குக் கடைஓலை வந்துதம்மா
ஓலைச்சுருள் படிக்கி அண்ணமார் உளப்படுத்திக் கொண்டார்கள்
அண்ணமார் பட்டார்களென்று சொல்லிப்பார்க்க முடிபோனமம்மா
சாலங்க பூண்ணருக்குத் தண்ணி விடாயி தீர்க்கமுடி
தனித்துவழி வந்தநம்மா தானொருவ ரில்லாமல்
2885 நான் இருவருடன் பிறந்து ஒருவர் துணையில்லாமல்
நான் பேயும் பிசாசானேன் பிணந்தின்னும் பூச்சியடி
நான் பிறப்பே பறிகொடுத்துப் பிறப்பட்டேன் கானகத்தில்
நான் வேஷங் குறைந்தவடி வேத்தூருப் பட்டவடி
நான் கானகத்தில் வாழும் தனிமிருகம் போலானேன்
2890 நான் பெண்பிறந்துப் பட்டகதை பெரியகதை மாதாவே
அச்சேதி தான்கேட்டு அக்கானடி ஏதுசொல்வாள்
உங்கள் சேனைபடை மாண்டதோன் ரெணகளத்தில்
உங்கள் சதிரங்க சேனைதனமும் மடிந்திடிந்ததை
உங்களண்ணமாறிருவருக்கும் அடையாள முண்டோதான்
2895 என்று சொல்லி மாதாவும் இதுமாகத் தான்கேள்க்க
அச்சேதி தான்கேட்டு அழிய புரவியுருடி
எங்களண்ணமார்பட்ட அடையாளமம்மா

[1] முடிஞ்சுதம்மா.

பட்டாலு மெங்களண்ணர் பாடா விழுவதில்லை
செத்தாலு மெங்களண்ணர் சிரித்தமுகமாயிருப்பர்
2900 மாண்டாலு மெங்கழண்ணர் மண்டியிட்டா போயிருப்பார்
அஞ்சுக் குத்துச் சல்லி அடையாள முண்டுமம்மா
வலது கையில் வாள்பிடித்து இடதுகையில் கேடயமும்
பிடித்து அவர் வித்திருப்பார் பின்பாடாயி விழுவார்கள்
இந்தப்படியாக ஞொண்ணமார் இதமாக வீற்றிருப்பார்
2905 அச்சேதி தான்கேட்டு அக்காண்டி மனமகிழ்ந்து
சத்தேழு கன்னியரே தாமழைத்து மாதாவும்
வனங்காக்கும் கன்னியரே தாமழைத்து மாதாவும்
மந்திர மகாமுனியே மலைக் காவலுடையவளே
எல்லோரும் நீர்கேளும் நம்ப இலந்தவகைக் காட்டிலேதான்
2910 நம்ம வீரமலைக் காட்டிலேதான் நீங்கள் மேவி வருகையிலே
போகையிலே நீராடி நீங்கள் பூத்தமலர் தானெடுத்து
நீங்கள் வனங்கள் சுத்தி வருகையிலே வாள்வீரர் பட்டவிடம்
குன்னுடையான் பெற்றெடுத்த குலவீரர் பட்டவிடம்
வளநாட்டுக் காராளர் அங்கே மாண்ட விடங்கண்டதுண்டோ
2915 கொத்தவர்கள் பட்டவிடம் நீங்கள் குறிப்பறிந்து வந்ததுண்டோ
இவள் அத்தைப் பிள்ளை பட்டவிடம் அடையாளங் கண்டதுண்டோ
இவள் இளைய தம்பி பட்டவிடம் யிந்தவகைக் காட்டிலேதான்
பொன்னர் இறந்தவிடம் இந்த புங்கிருண்டஞ் சோலையிலே
கண்டதுண்டோ சொல்லு கன்னியரே சொல்லுமென்றாள்
2920 மாதாவுங் கேள்க்க மந்திரகன்னி ஏதுசொல்வாள்
பெரியமலை மாதாவே பேரால் பெரியவளே
காணாச் சுனைதனிலே நாங்கள் கன்னியர்கள் நீராடி
அருஞ்சுனையில் நீராடி நாங்கள் அந்தவனம் பின்னெரிந்து
நந்தவனம் புகுந்து நல்லமலர் தானெடுத்து
2925 பூத்தமலர் தானெடுத்துப் பொய்கையிலே நீராடி
அந்தவனம் பின்னெரிந்து நாங்கள் அடவாய் வருகையிலே
வெம்முடிக்கிக் கீழ்புறமாய் விருசாய் வருகையிலே
வீரமலைக்கும் வெம்முடிக்கி வட பிறமாய்
வரம்கல்லு ஓரமதாய் மானிட வனங் கணவாயில்
2930 செப்பூலாங் காடுத் திருவுகள்ளி நுளைக் கடவும்

ஆகாசத் தீர்த்தமங்கே அருஞ்சுனையு முண்டுமம்மா
அந்த இருண்ட வனக்காட்டில் ஏத்த சுனையுமுண்டு
சுனைக்கும் வடபுறமாய் சூழ்ந்திருக்கும் வேங்கைமரம்
அந்த வேங்கை மரத்தடியில் மேற்கு முகமாக
2935 மிருண்ட சிங்கம்போல அவன்மேல் புருவம்நுடாமல்
உருட்டி முழித்து உருவின வாள் கைப்பிடித்து
மண்டியிட்ட பாவினையும் மன்மதனைப் போலழகும்
சிரிந்த முகமுஞ் சீதேவி குன்றாமல்
பஞ்ச கல்யாணி பக்கத்திலே நிற்குதம்மா
2940 அஞ்சுகுத்து சல்லிக் குதிரைக்கி அடையாளம் உண்டுமம்மா
அந்தவாள் வீரர்முன்பாக ஒருமானிடவன் தானுமங்கே
வாள்தனைத் தானிறுத்தி அவன் வல்லுயிரைத் தான்மாய்த்து
இறந்த படுகளமாய் இருக்குதம்மா மாதாவே
கண்டுவந்தோம் மாதாவே இதிலே கலக்கமில்லை என்றுசொன்னாள்
2945 ஏழுபேர் கன்னியர்கள் எடுத்துரைக்கத் தான்கேட்டு
பெரியமலை மாதாவும் பிரியமுடன் மனங்குளுந்து
நல்லதங்காள் உத்தமியே நாயகியே கேளுமம்மா
பொண்ணமார் பட்ட படுகளத்தை கன்னியர்கள் பாத்துவந்தார்தப்பாமல்
பொன்னமாரிறந்த படுகளத்தைக் கன்னியர்களிப்பவேகண்டுவந்தார்
2950 நீ அடையாளஞ் சொன்னபடி தங்கையரே அடவாகப்பாத்துவந்தார்
அடையாளந் தங்கையரே ஏற்குமடி உன் அண்ணனுக்கு
இப்ப கெளங்கள் பார்க்குமடி ஆனதுணை வாரமடி
உங்கள் அண்ணரையும் நானெழுப்ப ஆனதுணை வாரமடி
எல்லோருங் கூடித்தங்கையரே எட்டிவழிப் போவோமடி
2955 தங்கையர்க்கு வேணுதெல்லாம் தானுரைத்த மாதாவும்
பூச்சரத்தால் தான்தடுத்த பொருப்போல வரந்தான்விலத்தி
நடநடக்கச் சொல்லியங்கே தங்காளே மூன்னடத்தி
பெரியமலை மாதாவும் பின்நடந்தாள் கானகத்தில்
படுகளத்தைத் தான்தேடிப் புரவிபதறி வழிநடந்தாள்
2960 அண்ணாவி என்று சொல்லி அனந்தலிலும் மறவாமல்
சீறுபுலி தம்பிசங்கர் என்சின்னண்ணர் அண்ணாவி
அண்ணாவி என்ற சத்தம் அனந்தலிலும் மறவாமல்
என் சரீரத் துணையே தம்பிசங்கர் வாள்வீரா

கூடப்பிறக்க வல்லோ அண்ணாவி கோடிநாள் சொல்லுமிப்ப
2965 நாம் ஒக்கப்பிறக்க அண்ணாவி ஒருகோடி காலஞ்சொல்லும்
நாம் சேந்துபிறக்க அண்ணாவி சேணைநாள் சொல்லுமிப்ப
என்னை விட்டு நீபிரிய என்ன மனமுண்டாச்சோ
என் சரீரம் துடிக்குதடா தாடாளர் தம்பிசங்கர்
என் அங்கம் உருகி அண்ணாவி ஆத்துமா வேகுதிப்ப
2970 என்னைத் தனியவிட்டு எங்கே நீபோய் ஒளிந்தாய்
நல்லதங்காள் தான்புலம்ப நாயகியாள் மாதாவும்
நீ புலம்பி அழுகாதே பொற்கொடியாள் நல்லதங்காள்
நீ அழுது புலம்பாதே ஆனதொரு புத்தினியே
நீ ஒருவி வழிவந்தவள்க்கு நாங்கள் உத்ததுணை வாரமம்மா
2975 என் தவசைக் குலைத்தநடி தங்கையரே உன்னாலே
ஆதிசிவன் மாயவரும் அவர் சொன்னபடி நீர்தானும்
என் தவசைக் குலைப்பதற்குத் தங்கையரே இங்குவந்தாய்
என்னைக்கிக் காண்பனென்று எண்ணியிருந்ததுக்கு
ஆதிசிவனாரும் அப்புனையுந் தப்பாமல்
2980 மனதில் நினைந்தபடி வந்தாயே தங்கையரே
உன்னாலே உங்களுக்கு பேத்துப் பதமுண்டு கண்டாயே
அஞ்சாதே தங்கையரே ஆனதுணை வாரமடி
நீ வாய்திறந்து அழுகாதே வாய்த்த துணை வாரமடி
பெரியமலை மாதாவுந் தங்கையர்க்குப் புத்திமதி தானுரைத்து
2985 தேறுதலைச் சொல்லி மாதாதேவி வழிநடக்க
வழிகூட்டித் தானடந்தாள் வைகைமலை மாதாவும்
விருசாகத் தானடத்தி வீரமலை அயிவனத்தில்
உத்தமியாள் நல்லதங்காள் உருவிப் புலம்பரது
வீரமலையும் மெய்ப்பான கானகமும்
2990 கூடப் புலம்பிடுமாம் தங்காள் குரலோசைக் கேட்டு
சிதேவி புலம்பறது சிலையோடும் வீரமலை
வழிமுழுதுந் தான்புலம்பி வருகிறாள் நல்லதங்காள்
செப்பூலாங் காடு திருவுகன்னி அயிவனமும்
மானிட வனங்கண்பாயும் வாயித்த நிழல் சோலைகளும்
2995 ஆகாசத் தீர்த்தம் அருஞ்சுனையுங் கண்டங்கள்
சுனைக்கி வடபிறமாயி சூழ்ந்திருக்கும் வேங்கைமரம்
வேங்கை மரத்தைக் கண்டு விருசாகத் தானடந்து

அலறிமிகப் புலம்பி அண்ணாவி யென்று சொல்லி
பதறியங்கே ஓடிவந்தாள் தங்காள் படுகளத்தைப் பார்க்கவென்று
3000 கண்டுமங்கே நல்லதங்காள் கடுகிவழி போயிவிழவே
அண்ணாவி என்பிறப்பே என் உட்காணச் சகோதரமே
என் உதிரப் பிறப்பே என் உடன்பிறப்பே தம்பிசங்கர்
என் சரீரப்பிறப்பே என்தம்பி சங்கர் வாள்வீரர்
என் கோபமறிந்து கொடுமைகளும் கண்டிருந்து
3005 என்னை விட்டுப் பிரியமுடி வேறுமன முண்டாச்சோ
என்னைத் தனியவிட்டு எங்கேநீ போயொளிந்தாய்
உன்னை எதுத்துப் போர்செய்ய முடி எமனும் பயப்படுவான்
ஆதிசிவன் மாயவரும் அவர்தானும் யீடல்லவோ
வல்லாண்மை வீரியமும் மகாதேவர் வாங்கினரோ
3010 அடித்து விழுந்தழுது அய்யோ சிவனை யென்று
வாயிலறைந்து கொண்டு மண்மேலே விழுந்தழுதாள்
கைதலைமேல் வைத்துக்கொண்டு கதறியழும் வேளையிலே
கன்னியர்களோடி வந்து கடுக எடுத்தணைத்து
சத்த கன்னி ஏழுபேரும் தங்கையரை எடுத்தணைத்து
3015 அழுகாதே தங்கையரே உங்களண்ணார் பக்கம் போவமென்று
கூட்டிவரும் வேளையிலே குலவீரன் காராளன்
வேங்கைமரத்தடியில் தம்பிசங்கர் மேற்கு முகமாக
வீத்திருக்குந் தம்பியரை வருசாகத் தான்பார்த்து
தவறித் தடுமாறித் தங்காள் தரையில் விழுந்திடவே
3020 விழுந்து பிரண்டழுதாள் தம்பி வாள்வீரா என்றழுதாள்
பெரியமலை மாதாவும் பொற்கொடி யாளப்போது
பொஷ்ப ரதம் விட்டிறங்கிப் பொய்கையிலே நீராடி
வீர மரத்தடியில் வீத்திருந்தாள் மாதாவும்
அரிய புரவியரும் அண்ணரையும் வந்து கண்டாள்
3025 அவர் மண்டியிட்ட பாவனையும் மன்மதனைப் போலழுகும்
சிரித்த முகமும் சீதேவி குன்றாமல்
வேடுதிசை நோக்கி சங்கர் மேற்கு முகமாக
தம்பி சங்கர் வீத்திருந்த தாட்டிடையைத் தாபாத்து
நல்ல தங்காளுத்தமியும் ரெண்டு கண்ணும் நீரோட
3030 கிட்டவரப் பயந்து கிளிமொழியாள் நிற்கையிலே

அகலநின்று புரவியரும் சின்னண்ணரைத் தான்பாத்துச்
சின்னண்ணா வாள்வீரா சிறுபுலி குமாரசங்கர்
அண்ணாவி என்றுசொல்லித் தங்காள் அலறிமிகவழுது
அய்யோ சிவனேயென்று அலறிஅவள் கீழ்விழுந்து
3035 பெரியண்ணா அண்ணாவி பேர்பேரன காராளர்
பொறுமை பொறுத்தருளும் பொன்னம் பலசுவாமி
சின்னண்ணரைப் பார்த்துச் சீக்கிரமாய் வாறமென்று
என்னுடனே தானுரைத்து இங்குவந்தாய் அண்ணாவி
தம்பியரைக் காணாமல் நீதனிவழியே போனதென்ன
3040 தம்பி இறந்திடத்தில் தானுயிரு மாய்க்காமல்
சின்னண்ணர் தானும் சேரவிங்கே பட்டிருக்க
எங்கேதான் போயொளிந்தாய் என் அண்ணாவி என்றழுதாள்
என்னைவிட்டுப் பிரிந்ததில்லை வேத்துமுகப் பட்டதில்லை
உனக்குப் புல்லோ தலைகாணி பூமியோ பஞ்சுமெத்தை
3045 உனக்குக் கல்லோ தலைகாணி கானலோ பஞ்சுமெத்தை
ஆருமறியாமல் அண்ணாவி அயிவனத்தே பட்டாயோ
இந்த வீரமலைக் காட்டியில் நீங்கள் வேடுபடை தன்னாலே
மாண்டு இறக்கமுடி வைதாரோ யீச்பரரும்
அண்ணனுந் தம்பியரும் அத்தைபிள்ளை மூவருமாய்
3050 சேந்துபடை பொருதாமல் சேரவே பட்டுவிட்டீர்
நீங்கள் ஆராய்ந்து பாராமல் அதுந்துபடை பொருதாமல்
தட்டான் சதிகாரன் நமக்குத் தலைநாளுந் தாயாதி
செம்பகொல்லன் இங்குவந்து நயக்குச் செம்மப் பழிமூண்டான்
மரமரக்கால் கொண்டுவந்து பொன்மரக்கா லென்றுசொல்லிப்
3055 போராடிச் செம்பகொல்லன் பொன்னாண்டவரைத் தான்கூட்டி
வெள்ளாங் குளத்தாரு அண்ணர் சத்தியமும் போயிருக்க
அவர்போய் வருமுன்னே பொல்லாங்குந் தானிழந்து
மேனாட்டு வேட்டுவரும் நமக்கு மிக்கபகை தானினைந்து
நம்ம வளநாட்டுச் சீமைக்கி வஞ்சினைகள் தானினைந்து
3060 கொள்ளையிட வந்து குலாவிவந்த வேட்டுவரை
அண்ணர் வருமளவும் நீங்கள் அடங்கிருந்து வெட்டாமல்
அத்தாவும் நீயும் அசந்துபோர் செய்யாமல்
நீங்கள் தனித்துப் படைபொருதி தானிறந்து போகமுடி

ஈச்பரனார் நம்மளுக்கு இந்தெழுத்தோ எழுதிவிட்டார்
3065 பட்ட படுகளத்தில் பத்தினியாள் தான்விழுந்து
பெண்பெருமாள் நல்லதங்காள் பிரண்டுருண்டு தானழுது
தும்பிப் பறந்தாப்போல் தங்காள் துள்ளி அழுகையிலே
பெரியமலை மாதாவும் தங்காள் பிரண்டு அழுகிறதை
கண்டுமங்கே மாதாவும் கடைக்கண்ணால் நீருவிட்டுக்
3070 கண்ணீரைத் தான்துடைத்துக் காரியமாய் வார்த்தைசொல்லிப்
புரவியரைத் தானெடுத்து அவனுக்குப் புத்தி மதிஉரைத்து
அவள் அண்ணமாரிருவரையும் அத்தைபிள்ளை மூவரையும்
இச்செனமே நானெழுப்பி இதமாக இப்போது
தருகிறோமென்றுசொல்லி அந்தத் தங்கையர்க்கு நீ உரைத்து
3075 அவள் அழுகைத்தனை நிறுத்தி அனைத்து இங்கே வாருமென்றாள்
அப்போது கன்னியர்கள் ஆனதங்காள் பக்கம்வந்து
வாரி எடுத்து மார்போடே தான்சாத்திப்
புழுதிதனைத் துடைத்துப் பொன்னருட தங்கையர்க்குக்
கண்ணீர்தனைத் துடைத்துக் கன்னியர்கு ளேதுரைப்பார்
3080 நீ அழுது புலம்பாதே அண்ணரையு மிப்போது
எழுப்பித் தருவனென்று மாதா இன்பமுடன் சொல்லுகிறாள்
அருங்கிளியே நல்லதங்காள் அழுகாதே இப்போது
நீ அழுகாதே மாதாவும் நின்று மயங்குகிறாள்
கூடப் பொலம்புகிறாள் குலக்கொழுந்து மாதாவும்
3085 கன்னியர்கள் சொல்லக் காரிழையாள் நல்லதங்காள்
புலம்பி அழுகிறதைப் பொற்கொடியாள் தானிறுத்தி
நல்லதங்காளுத்தமியும் நாயகியாள் தானெழுந்து
மாதாவுடன் அருகில்வந்து நின்று தங்காளும்
எங்க வண்ணரையுந் தானெழுப்ப எனக்கான
3090 எனக்குப் பக்கத்துணையிருந்து பாவித்து வந்தைஎன்றால்
உந்தனுக்கும் எந்தனுக்கும் உறவுண்டு மாதாவே
தங்காளிவை உரைக்கத் தான்கேட்டு மாதாவும்
அப்படியே தங்கையரே உனக்கு ஆனதுணை நாமிருந்து
நீ ஏதேது கேட்டாலும் இங்கிருந்து நான்குடுப்பேன்
3095 அஞ்சாதே தங்கையரே உனக்கு ஆனதுணை யாயிருந்து
ஒத்தாசை செய்யுகிறேன் உதவிபண்ணி நான் வாறேன்
என்று சொல்லிமாதாவும் இவ்வார்த்தை தானுரைக்க

அப்போது நல்லதங்காள் அன்பாய் மனங்குளுந்து
நான் ஓமம் வளர்க்கவேணும் ஆச்சியரே ஓம்சாந்தி பண்ணவேணும்
3100 சாத்திரத்தி லுள்ளபடி ஆச்சியரே தப்பாமல் செய்யவேணும்
எனக்கு ஒத்தாசை செய்வதற்கு ஒருவரில்லை மாதாவே
இப்பசாத்திரங்கள் செய்யவென்றால் தக்கவகை ஒன்றுமில்லை
என்றுசொல்லித் தங்காளும் ஏங்கிமுகம் வாடிநிற்க
அப்போது மாதாவும் அவளுமங்கே ஏதுசொல்வாள்
3105 தங்கையரே உந்தனுக்குத் தாழ்வுகுறை ஏதுசொல்லும்
அப்போது நல்லதங்காள் என் ஆத்தாளே நீகேளும்
இப்பச் சாந்திமிகச் செய்வதற்குத் தக்கவகை சொல்லுகிறேன்
காவேரி தீர்த்தமுடன் கரையில் தெர்ப்பைப் பில்லுடனே
காராம் பசுவுநெய்யும் கறந்தபால் வேணுமென்றாள்
3110 ஓமம் வளப்பதற்கு உத்தமியே மாதாவே
ஏழுவகைச் சுப்பி எந்தனுக்கு வேணுமென்றாள்
மாவிலையும் தோரணமும் மண்டபமும் வேணுமென்றாள்
ஓமம் வளக்கமுடி ஆச்சியரே உபாயந் தெரியுமென்றாள்
ஓமம் வளக்குகிறேன் உத்துயிரை எழுப்புகிறேன்
3115 குருக்கள் செய்யுமந்திரங்கள் குறைபாமல் செய்யுகிறேன்
தங்காளிவை யுரைக்கத் தான்கேட்டு மாதாவும்
காவேரி தீர்த்தமம்மா இந்தக் கானகத்தில் கிடையாது
நம்ம காணாச் சுனைத் தீர்த்தம் கலந்துநீ கூட்டுமம்மா
காராம் பசுவு நெய்யும் இந்தக் கானகத்தில் கிடையாது
3120 நம்ம குறிஞ்சிவனத் தேனைக் கூட்டடித் தங்கையரே
தெர்ப்பையில் வேணுமென்று சிறந்ததொரு பொய்கையிலே
காணாச் சுனைதனிலே கரையி லிருக்குதம்மா
தருவித்து நான் தாறேன் தங்கையரே உந்தனுக்கு
மாதாவுந் தானழைத்து அந்த வனத்திலுள்ள மந்திரிகளை
3125 எல்லாம் வரவழைத்து ஏது சொல்வாள் மாதாவும்
இன்னைக்கி நீங்கள் என்னருகில் தானிருந்து
சொன்னதொரு ஊழியங்கள் துருசாகச் சொல்லுமென்றாள்
நல்லதென்று மந்திரிகளை நாடியங்கே தெண்டனிட்டு
வாய் பொத்திக் கைகட்டி வகையாகத் தானிருந்து
3130 காத்திருக்கும் மந்திரிகளைக் கன்னியவள் மாதாவும்

மண்டபமும் உண்டுபண்ணி வாய்த்ததலை வாசல்விட்டு
வாழை கமுகு வகையாகத் தானிறுத்துப்
பூவா லலங்கரித்துப் பொற்கொடியா ளிருப்பதற்கு
நால் சதிரமாக வங்கே நடுவாலே பந்தலிட்டுப்
3135 பச்சிலையுந் தோரணமும் பந்தலுக்குக் கட்டிவைத்துப்
பூவாலலங்கரித்துப் பூச்சரங்கள் தொங்கல்விட்டுப்
சிறப்பாய் அலங்கரித்துத் தேவியர் வீத்திருக்கப்
பந்தல் சுத்திபண்ண வேணுமென்று பசுமாட்டுக் கோமியமும்
வேணுமென்று சொல்லியங்கே வீரமலை தான்தேடிக்
3140 கானகத்தில் மேயுமந்தக் காராம்பசுவு பாத்துப்
பாலும் கறந்துமங்கே பசுமாட்டுச் சாணியுடன்
கோமயமும் தான்பிடித்துக் கொண்டுவந்தா ரப்போது
கோவிலின் மண்டபத்தில் கொண்டுவந்து வாரணமும்
சாணிக் கரச்சுமங்கே சாங்கமாய்த் தான்தெளித்துக்
3145 கோமயத்தைத் தெளித்துக் கொண்டுவந்து பாலைவைத்துக்
குறிஞ்சிவனத் தேனே கொண்டுவந்து முன்னேவைத்தார்
சமித்துவகை யுள்ளதெல்லாம் தானெடுத்து முன்னேவைத்தார்
வைத்துமங்கே வானரங்கள் மாதாவைத் தான்பணிய
மாதாவுமப்போ மனங்குளுந்து யேதுசொல்வாள்
3150 தங்காள் புரவியரைத் தானழைத்து மாதாவும்
உன்மனதில் நினைந்தபடி வாய்த்துநம்மா உந்தனுக்கு
சாத்திரத்தி லுள்ளபடி சடங்கறுத்து வாருமென்றாள்
அப்போது நல்லதங்காள் அண்ணரையுந் தானினைந்து
மைத்துன மாரை மனதில் மிகநினைந்து
3155 பொன்னம்பல ஈச்பரரைப் பூந்தியிலே தானும்வைத்து
ஆயன் பெருமாளே அச்சினமே தானினைந்து
பெரியமலை மாதாவும் புத்தியுடன் தான்பாத்து
அருஞ்சுனைக்கிப் போறவழி ஆச்சிநீ சொல்லுமென்றாள்
வானரத்தைத் தானழைத்து மாதாவு மேதுசொல்வாள்
3160 நம்மக் காணாச் சுனையைக் காட்டுமென்றாள் தங்கையர்க்கு
அப்போது வானரமும் அடவாக முன்னடக்கப்
பின் நடந்தாள் தங்கையரும் பெருங்கா னகம்புகுந்தாள்
வனங்கள் கடந்த வாய்த்த சுனையருகே

கூட்டிவந்து வானரமும் புரவியர்க்குக் கொடியசுனை காட்டலுற்றார்
3165 காணாச்சுனை யிருக்கும் கரையருகே விட்டதுவே
நல்லதங்கா ளுத்தமியும் நல்லசுனை கண்டவுடன்
சந்தோஷப் பட்டுத் தானிறங்கி உத்தமியாள்
மாரளவு கெங்கையிலே மங்கைநல்லாள் வந்துநின்று
ஆதிசிவன் மாயவரை அன்புடனே தான்பணிந்து
3170 பொன்னம்பல நாதரையும் பொந்தியிலே தானினைந்து
வைகைமலை மாதாவும் எனக்கு வழிக்குத் துணைவந்தவளே
அண்ணமா ரிருவரையும் அன்புடனே மனதிலெண்ணி
முக்காலும் நீரில் மூழ்சிக் கரையேறி
கூந்த லுதறியவள் கோடாலி தான்முடித்து
3175 ஈரந் துவட்டி இளையநல்ல பட்டுடுத்தி
சிவாசிவா யென்று தங்காள் திருநீறு தான்சாத்தி
அஞ்செழுத்து மந்திரத்தை அழுத்தி இருதயத்தில்
விருமாலை நேர்ந்துகொண்டு வேதாவைத் தானினைந்து
ஆயன் பெருமாளே அண்ணரே மைத்துனரே
3180 எனக்குத் துணையாக இருக்கவென்று நல்லதங்காள்
பொன்னம்பலம் வாழும் புகழ்பெரிய ஈஷ்பரரை
சன்னாசி அய்யரையும் தன்மனதிலே நினைந்து
கரை நாணல் பில்லைத் தங்காள் சுருதி மிகப்பிடிங்கி
ஒற்றைத் திருக்கரம் தங்காள் ஒருகையிலே தானெடுத்து
3185 காணாச் சுனை தீர்த்தம் தங்காள் கலசத்திலே தான்மோந்து
உள்ளங் கையிலேந்தி உத்தமியாள் நல்லதங்காள்
வேப்பங் குலையொடித்து விருசாகத் தானடைந்து
செடிகள் புனங்கடந்து தீரனுடத் தங்கையரும்
வீரமரத்தடியில் தங்காள் விருசாக வந்துநின்று
3190 மாதாவைப் பார்த்து மறுவார்த்தை ஏதுசொல்வாள்
விழிக்குத் துணைவந்த வீரமாதாவே உத்தமியே
நான் ஒருதுணை வந்தவள்க்கு உத்ததுணை வந்தவளோ
மண்டபத்துக் குள்ளாக மாதாவே வாருமென்றாள்
மாதாவைக் கூட்டிவந்தும் மண்டபத்தில் உள்ளேவைத்து
3195 நல்ல தங்காளுத்தமியும் அந்த நடுக்குழியின் முன்பாக
அத்திப் பலகையிட்டு தங்காளது மேலே வீத்திருந்தாள்
பூப்பந்தல் குள்ளாகப் பொற்கொடியாள் வீற்றிருந்தாள்

இருந்து மங்கே நல்லதங்காள் ஏது சொல்வாளப்போது
வேள்விக்கி முன்னாக் வினாயகனே உண்டுபண்ணி
3200 மோசிக விநாயகனே முக்கண்ணனே தெண்டநிட்டு
சமித்து வகைகளெல்லாம் தங்கை நல்லாள் கைஎடுத்து
அஞ்செழுத்தை ஓதி அதிவீரன் தங்கையரும்
ஒடித்துக் குழியில் வைத்து ஓம்நமோ என்றுசொல்லி
அக்கினியை மூட்டி ஆரணங்கே நல்லதங்காள்
3205 மாவிலையைத் தானெடுத்தாள் மாயவள் உத்தமியாள்
கொம்பிலிறக்கி வந்தக் குறிஞ்சித் தேனை தனையெடுத்து
அக்கினியி லிட்டாள் ஆத்தாளுக்குச் சேவித்தாள்
ஓமம் வளத்து விட்டாள் ஓங்கிக் கொழுந்துவிட
ஆருநல்ல வேதமுடன் ஆராய்ந்து தானோதி
3210 பலகலைக ளுள்ளதெல்லாம் பாராமல் தானோதி
இவள் ஓமம் வளக்கிறது உத்தமியாள் மாதாவும்
பாத்து மனமகிழ்ந்து பைங்கொடியாள் வீத்திருக்க
இவள் ஓமம் வளக்கிறது உலகமெங்கும் தானறிய
கப்புது லோகமெங்கும் கருக்குது வானமெங்கும்
3215 அதிராது லோகமெங்கும் அண்டமெங்கும் ஊடுருவ
ஓமப் புகைகள் வந்து உலகமெங்குந் தான்மறைக்க
ஓசந்தப் பருவதம்போல ஓங்கிக் கொழுந்துவிட
ஓமம் வளத்தாளே உலகமெங்கும் கம்மமூடி
தெய்வலோக மெங்கும் திசைகெட்டு மெய்மறந்து
3220 ஒருவர்முகம் ஒருவருக்கு ஒண்ணுந் தெரியாமல்
சிந்தைகெட்டு மெய்மறந்து தெய்வசபை குலைந்து
ஆதிசிவன் மாயவரும் அரனுமிகப் பயந்து
இந்த அதிசயத்தை ஏதென்று நாமறியோம்
நாலுலகந் தானறியும் நாரதனைத் தானழைத்து
3225 ஏது புதுமையென்று ஈஷ்பரனார் தான்கேட்க
அப்போது நாரதனும் ஆராய்ந்து தான்பார்த்து
அதிசயங்க ளொன்றுமில்லை அரனாரே நீர்கேளும்
கம்ம லிருளூர்து கறுக்கால் வந்து கட்டுறதும்
புகைகள் கம்மிரதும் புகைச்சல் வந்து மூடுறதும்
3230 பூலோகந் தன்னில் புகழ்பெரிய காரிகையாள்

நெல்லி வளநாடு நேர்சூழ்ந்த கோனாடு
சுத்தாலைப் பட்டணத்தில் சூழ்ந்தநெல்லி வளநாட்டில்
குன்னுடையா னென்றொருவன் குலக்கொழுந்து காராளன்
வளநாட்டுக் காராளன் மைந்தனில்லை என்றுசொல்லி
3235 பொன்னாம்பலத்திலவன் பேறுபெற்று வந்தவனாம்
வயசு பதினாறாயிரம் வாங்கி வந்தான் ரெண்டுமைந்தன்
வயசு பதினாறாகி மாண்டார்கள் கானகத்தில்
பொன்ன சங்கருடன் பிறந்து பொற்கொடியாள் நல்லதங்காள்
பட்டப் படுகளத்தைப் பாடெழுப்ப வேணுமென்று
3240 ஓமம் வளத்துவிட உத்தபுகை என்று சொன்னார்
அச்சேதி கேட்டு ஆதிசிவன் மாயவரும்
சந்தோஷப்பட்டு சதாசிவனார் அப்போது
பொன்னரையுஞ் சங்கரையும் போத வரவழைத்து
உந்தனுடன் பிறந்த உத்தமியாள் நல்லதங்காள்
3245 நீங்கள் பட்ட படுகளத்தில் பாடெழுப்ப வந்திருந்து
அவள் ஓமம் வளர்க்கிறது இங்கே ஒண்ணுந்தெரியவில்லை
நீங்கள் ஓமப்புகை வழியில் ஒருநொடியில் தான்போய்
உன் தங்காள் புரவிகிட்டே தான்போய்ச் சேருமென்று
அப்பனையுந் தான்கொடுத்து ஆதிசிவன் அனுப்பிவிட்டார்
3250 பொன்னூசி பொற்சரடு பொருந்தியவ ரெடுத்து
தங்காள் புரவியுட தன்பிடியில் தான்விழுக
ஓமப் புகையிலேதான் ஆதிசிவன் உத்தரிச்சு விட்டார்கள்
நல்லதங்காள் உத்தமியும் இங்கே நாலாறு வேதமுடன்
ஓமம் வளர்த்து உத்தமியாள் நல்லதங்காள்
3255 கடலைப் பொரிவிழுது கையினிறையத் தானெடுத்து
மந்திரங்கள் சொல்லிப் புரவி வாரிமிக வரைத்து
நெற்பொரியுந் எள்பொரியும் நேராகத் தான்போட்டு
வாளைக் கறியுமங்கே மங்கைநல்லாள் தான்போட்டு
கையை நெரித்துமங்கேக் காரிழையாள் நிற்கையிலே
3260 சந்தோஷப்பட்டு சதாசிவனாரையனுப்பி வச்சு
பொன்னூசி பொற்சரடு தங்காள் புரவிமடி வீழ்ந்திடவே
அடிமடியில் வீழ்ந்த ஆனபொன்னூசி தன்னை
கண்டு தங்காளுத்தமியும் கடுகி மிகவெடுத்து

அண்ணர் வந்தாரென்று ஆடலித் தெழுந்திரிருந்து
3265 கரகத்து நீரைக் கையிலெடுத்து மவன்
பொன்னூசியை எடுத்துப் புகழ்பெரிய சங்கருக்கு
காயம் பொருதி விட்டாள் கன்னியவள் நல்லதங்காள்
கைக்குலையுந் தானெடுத்துக் கரகத்தில் நீர்தெளித்தாள்
தீர்த்தந்தெளித்திடவே தீரனவன் தம்பிசங்கர்
3270 பொய்க் கூட்டுக்குள்ளாகத் தம்பிசங்கர் போய்ப்புகுந்தார்
எள்ளுக்குள் எண்ணெயிருந்த கதைபோலே
நல்ல தங்காள் உத்தமியும் நலமாகச்சுத்தி வந்து
கரகத்து நீர்தெளித்துக் கன்னி குலவையிட்டாள்
கரகத்து நீர்தெளித்துக் கன்னி குலவையிட்டாள்
3275 அந்தநல்ல வேளையிலே தம்பிசங்கர் வாள்வீரன்
பெருவிரலைத் தானசைத்துத் தம்பிசங்கர் பிறண்டு எழுந்திருந்து
இரண்டு பல்லைத் தான்கடித்து மேனாடுதிசைநோக்கி
கண்கள் சிவந்திடுமாம் சங்கருக்குக் கடகடன்று
நீலமுழிக்கண்கள் ரெண்டு நெருப்புப் பொறிபறக்க
3280 மீசைத் துடித்திடுமாம் மேல்புருவமாடிடுமாம்
மண்டியிட்ட பாவனையும் வலதுகையில் வாள்பிடித்து
இடதுகையில் கேடயமும் அவர் இடுக்கிவந்த பாவனையும்
ஆங்காரக் கோசமுடன் அதட்டியவர் தான்பார்த்து
அப்போது நல்லதங்காள் அஞ்சிமிகப் பயந்து
3285 வேங்கைமரத்தடியில் மிக மறைந்தாள் நல்லதங்காள்
வீசினார் தம்பிசங்கர் வேங்கைமரம் அற்றுவிழ
வேங்கைமரம் மூணு துண்டாய் விழுந்ததுகாண் அப்போது
தங்கையரே தான்பாத்து தம்பிசங்கரேது சொல்வார்
சாதி மருக்கொழுந்தே தங்கையரே இங்குவந்தீர்
3290 என் உதிரப்பிறப்பே உடப்பிறப்பே தங்கையரே
நீ தனித்து ஒருவியுமாயிந்த தனிக்காடு வந்ததென்ன
உத்தமியே நீர்தானும் ஒருவி வழி வந்ததென்ன
சந்திரரும் சூரியரும் தானொடிங்கிப் போனாரோ
நீ இந்த வனக்காடு எங்குவந்தாய் தங்கையரே
3295 தேவிமார் எங்கேயென்று சங்கர் திரமாகத்தான் கேள்க்க
அப்போது நல்லதங்காள் அண்ணருக்கு ஏதுரைப்பாள்
நான் பொல்லாத் தெரிசினங்கள் பொற்கொடியாள் கண்டதினால்

நான் ஆகாத தெரிசனங்கள் அனந்தலிலே கண்டதினால்
அண்ணர் படைபொருத அயிவனத்தில் போனவர்தான்
3300 பட்டார்களென்று சொல்லி சாம்பான் பாங்காக அப்போது
கழங்காலடி சத்தம் என் காதாரக் கேட்டதினால்
அண்ணமார் தேவியரே ஆவழைத்து வாங்களென்று நானழைத்தேன்
கூப்பிட்டு நானழைத்தேன் என்கூட வழிவாங்களென்றேன்
அவள் வாரதில்லை என்றுசொல்லி வண்ணக் கதவடைத்தாள்
3305 சாத்திக் கதவடைத்தாள் தாள்பூட்டி மண்ணரைத்தாள்
ஆகையினா லண்ணாவி நான் ஆங்காரச் சத்தமிட்டு
அழுதேன் குரலெழுப்பி அந்தணலாயி மூண்டுதங்கே
வெந்து தணிந்தார்கள் வெண்சாம்ப லானார்கள்
அந்த வெள்ளர் மிகவரசு வெந்து தணிந்தபின்பு
3310 அவள் அங்கம் பெருக்கிக் கங்கையிலே நான் போட்டு
தீக்கடனும் நீர்க்கடனும் செய்துவந்தேன் அண்ணாவி
அவர்களுக்குக் கல்லுங்கடன் தீர்த்துக் கயிலாசம் போகவிட்டு
எள்ளுமிரைத்து இதமுடனே நீர்தெளித்து
எந்தன் பிறகே நீங்கள் இனித்துடந்து வாராமல்
3315 கெங்கையிலே நீராடி கேணியிலே தலைமுழுகி
அண்ணமார் பட்ட படுகளத்தைப் பார்க்கமுடி வேணுமென்று
சின்னண்ணர் பட்ட சீரத்தப் படுகளத்தை
பெரியண்ணர் பட்ட பெரியகளம் பார்க்க வந்தேன்
சாலங்கள் அண்ணருக்குத் தண்ணி விடாய் தீர்க்கவென்று
3320 வந்தே நானண்ணாவி வளியு மறிந்ததில்லை
இந்த வனக்காட்டில் நான் ஏங்கி வருகையிலே
வீரமலைக் காட்டில் விரும்பி வந்தேன் அண்ணாவி
நான் ஒருவி வந்தவள்க்கு உத்த துணையாக
வீரமலை வாழும் வெம்முடியில் அக்காண்டி
3325 வழிக்குத் துணையாக மாதாவும் வந்துநின்று
அஞ்சாதே அஞ்சாதே அரியதங்கை அஞ்சாதே
நீ யொருவி வழிவந்தவள்க்கு உத்ததுணை வாரமென்று
னொன்னர் பட்ட படுகளத்தை இந்தப்பார வனந்தனிலே
காட்டித் தருவனென்று கானகத்தில் கூடவந்தார்
3330 கூட்டி வந்தாரண்ணாவி நீங்கள் குலவீரர் பட்டவிடம்
கண்டேநான் என்புறப்பே நீங்கள் காராளன் பட்டதைத்தான்

நீங்கள் வேடுபடை பொருதி மிரண்டு இங்கே வருகாமல்
நீ எந்தவிதம் பட்டாய் என்பிறப்பே சொல்லுமென்றான்
அந்த ஆகாத வேடுபடை அடித்தவகை சொல்லுமென்றாள்
3335 உன் வீரியமுந் தானிழந்து வேடுபடை பொருதி
எதுத்துப் போர்செய்யமுடி எங்கிருந்தான் மாயாவி
உன்னுயிரைக் கொன்னவகை ஒளிபாமல் சொல்லுமென்றாள்
நீ மாண்டவகை எனக்கு வாள்வீரா சொல்லுமென்றாள்
உன்னை எதுத்துப் படைபொருத எமனும் பயப்படுவான்
3340 உன் வல்லாண்மை வீரியமும் மகாதேவர் வாங்கினரோ
வாயிலரைந்து கொண்டு மண்மேல் விழுந்தழுதாள்
அழுகுமந்த வேளையிலே அண்ணர் பொன்னாண்டவரும்
பூங்கோயில் தானிருந்து பொன்னருமே வந்திடவே
வந்து பொன்னாண்டவரும் வாள்வீரனைப் பார்த்து
3345 பூமியிலே தான்விழுந்து பிரண்டு உருண்டழுது
பெரியமலை மாதாவும் பொட்டெனவே ஓடிவந்து
வாரி எடுத்தணைத்து மகனாரைக் கண் துடைத்து
மந்திரிகன்னி ஏழுபேரும் மண்ணுகளைத் தான்துடைத்து
தூசினைத் துடைத்தாள் துயிலாடை தன்னாலே
3350 கண்ணீர்தனைத் துடைத்துக் கலங்காதே தம்பிஎன்று
தேறுதலை சொல்லி அங்கே திரமாக வந்துநிற்க
கண்டு பொன்டாண்டவரும் கடுகி மிக விழுந்து
தங்காள் முகம் பாத்துத் தங்கையரே இப்போது
நீ ஒருவி வழிதெரிந்து ஓடிவந்த வகையேது
3355 நீ தனித்து வனந்தனிலே தானொருவ ரில்லாமல்
பொற்கொடியே தங்கையரே புனத்திலே வந்ததென்ன
பொன்னாண்டவனார் தான்கேள்க்கப் பொற்கொடி வந்ததென்ன
பொன்னாண்டவனார் தான்கேள்க்கப் பொற்கொடியாள் நல்லதங்காள்
பூங்குயிலாள் கேட்டுப் பொன்னருக்கு ஏதுசொல்வாள்
3360 நீங்கள் படைபொருதப் போனவர்கள் பட்டார்களென்று சொல்லி
பார்க்க வந்தேனண்ணாவி இந்தப் பார வனந்தனிலே
நீங்கள் எறந்த படுகளத்தை என்னுயிரைப் போக்கவென்று
நான் அருங்கானகம் புகுந்து அலறிவரும் வேளையிலே
நம்ம வீரமலை மாதாவும் வெம்முடியில் வீத்திருக்கும்
3365 நாகமலை கன்னியர்கள் எனக்கு நல்ல துணையாக

நாள் ஒருவிவழி வந்தவள்க்கு உத்ததுணை ஆகவந்தாள்
எனக்குப் பக்கத் துணையாக பயம்தீர்ந்து மாதாவும்
கூட்டிவந்தாள் மாதாவும் நீங்கள் குலவீரர் பட்டவிடம்
நீங்கள் பட்ட படுகளத்தை நான்பார்த்து அழுகையிலே
3370 என்னை அழுகைதனை நிறுத்தி அங்கிருந்த மாதாவும்
ஓமம் வளர்த்துவிட்டால் உங்களுயிர் தானெழுப்ப
ஓமப்புகை வளியில் உங்களையும் இங்கழைத்தாள்
நீங்கள் பட்டுக் கிடந்தவர்கள் வல்லுயிருமப்போது
நீங்கள் மாண்டு கிடந்தவர்கள் வல்லுயிருமப்போது
3375 எழுந்திருந்து இங்குவந்தீர் இனியென்று நானறியேன்
தங்காளுரைத்த மொழி தமபி தங்கர் தான்கேட்டு
நம்ம அத்தைபிள்ளை அத்தாவும் ஆனபடை சேனைகளும்
நம்ம கடிங்காலுஞ் சாம்பானும் கதித்ததொரு ஊழியமும்
எங்கையென்று தம்பி சங்கர் இதமாகத் தான்கேள்க்க
3380 பெரியமலை மாதாவும் பிரியமுடனேது சொல்வாள்
தம்பி நீங்களெழுந்த பின்பு நிமிஷத்திலிப்போது
எழுப்பித் தருவனடா ஏதுக்கு மஞ்சாதே
என்றுசொல்லி மாதாவும் இயல்பாக நல்லதென்று
கன்னி எழுவரையுங் கடுக வரவழைத்து
3385 தங்காளுட கையிருக்கும் பொற்கரகம் நீர்வாங்கி
இவர் ஆனபடை சேனைதளம் இவர் அத்தா படுகளமும்
பட்ட படுகளத்தில் பாங்காக நீபோயி
பொற்கரகம் நீர்தெளித்துப் பொட்டெனவே இப்போது
எழுப்பி அங்கே வாருமென்று ஏந்திழையாள் தானனுப்பி
3390 அப்போது கன்னியரும் அடைவாகத் தானோடி
மாண்ட படுகளத்தில் மாயமாய் நீர்தெளிக்க
அத்தைபிள்ளை அத்தாவும் அவர் ஆனை படை சேனைகளும்
கடிங்காலுஞ் சாம்பானும் ககரணமாகத் தானெழுந்து
ஆக்கரித்துச் சேனை அதட்டி மிகவெழுந்து
3395 கொக்கரித்துச் சேனைதளம் குலவையிட்டுத் தானெழுந்து
வெத்தித் தமுக்கடித்து வெத்திக் கொம்பு தானூதி
சங்கர் படுகளத்தில் தளங்களெல்லாம் வந்தபின்பு
கண்டு மனங் களிகூர்ந்து காராளர் பொன்னர் சங்கர்
சந்தோஷந் தானாகி தம்பிபொன்ன சங்கருமே
3400 பெரியமலை மாதாவைப் பிரியமுடன் சுத்திவந்து

முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
அட்டம் பணிந்து அடவா ஒடுங்கி நின்று
கைகட்டி நின்று காராளர் இருவோரும்
என்தாயே மாதாவே இனிச்சொல்ல நீகேளும்
3405 குன்னுடையான் எங்களய்யா குலக்கொழுந்து காராளன்
பிள்ளையது இல்லாமல் பெருந்தவசு தானிறுந்து
பொன்னம்பலத்திலவர் பேறு பெற்று வந்தபடி
வயசு பதினாறாயி வாங்கிவந்தா றெங்களய்யர்
இன்று முடிஞ்சுதம்மா எங்கள் வயதாச்சு
3410 இனி நாங்கள் இருப்பதில்லை மாதாவே நடப்போம் கையிலே என்றார்
வரம் வாங்கி வந்தபடி வாச்சுதம்மா யன்னோடே
காராளர் வங்கிஷத்தில் கர்த்தனுட சொல்படிக்கி
புறந்து அரசாண்டு இந்தப் புதுமை எல்லாந் தானடத்தி
மறுப்படா வங்கிஷத்தில் நாங்கள் வந்து பிறந்ததம்மா
3415 மறுப்பட்டு யெங்களுயிர் வச்சிருக்கப் போறதில்லை
மாதாவே உன்பாதம் வருவதே நிட்செயந்தான்
இனி எங்கே இருப்பதில்லை நாங்கள் எமலோகஞ் சேர்வமென்றார்
அப்போது மாதாவும் ஆயிமனங் குறுந்து
பெரியமலை மாதாவும் பொன்னர்சங்கர் பாத்து
3420 இன்னம் வளநாடு நீங்கள் இருந்து அரசாண்டு
வாழ்ந்து முசுப்பாரி வையகத்தை நீயாண்டு
நீங்கள் சலித்து யாரோ பின்பு தான்வருவாய் தம்பியரே
அந்த மொழிகேட்டு வாள்வீரர் பொன்னர்சங்கர்
மாறுபட்டுயிரை நாம் வச்சிருக்கப் போறதில்லை
3425 இனிமேலிருப்ப தில்லை என்தாயே மாதாவே
வலதுகையில் வாளுருவி தம்பிசங்கர் வாய்த்த கலத்தில் வைத்தார்
கழுத்தில் வாள் பூட்டிடவே காரணமாய் ஈஷ்பரனார்
அந்தநல்ல வேளையிலே ஆதிசிவன் மாயவரும்
கெருடாழ்வார் மேலேறி கிஷ்ணனும் வந்துவிட்டார்
3430 அன்னத்தின் மீதேறி ஆதிசிவன் மாயவரும்
வந்தாற் படுகளத்தில் மகாதேவ ரெல்லோரும்
சங்கர் படுகளத்தில் சதாசிவனார் வந்துநின்று
பொன்னரையும் சங்கரையும் போதவே கைப்பிடித்து

சிரசை அறுக்காதே சிவனையும் போக்காதே
3435 என்றுசொல்லி யீஷ்பரரும் இருவரையும் கைப்பிடித்துத்
தேறுதலைச் சொல்லி சிவனாரும் நிற்கையிலே
பெரியமலை மாதாவும் பின்பிறந்த நல்லதங்காள்
வாள்வீரா பொன்னசங்கர் வாய்த்ததொரு நால்வருமாய்
ஆதிசிவன் மாயவரை அன்பாகச் சுத்திவந்து
3440 சாஷ்ட்டாங்கமாகத் தாள் பணிந்து தெண்டநிட்டார்
காராளர் பொன்னசங்கர் கைகட்டி நின்றுகொண்டு
வாய்பொத்தி நின்று மன்னவர்களேது சொல்வார்
பொன்னம்பலத்திலவர் தேவர் புத்தியுட சொல்படிக்கி
வயசு பதினாறாயி நாங்கள் வாங்கிவந்த சொல்படிக்கி
3445 எழுத்து முடிந்ததனால் இறையவனார் பொற்பாதம்
சேருவோம் ஈஷ்பரரைத் தேவருட சீர்பாதம்
காறாளரிருவர் சொல்லக் கறுத்தன் அவாகேட்டு
பொன்னாம்பல நாதர் போத மனமகிழ்ந்து
நீங்கள் என்றும் பதினாறா யிருந்து அரசாண்டு
3450 அரசாண்டு வளநாட்டை ஆசையெல்லாந் தீத்தபின்பு
நம்முடைய சீர்பாதம் நாம் சேர்த்துக் கொள்ளுகிறோம்
பொன்னம்பல நாதர் புத்திமிகத் தானுரைக்க
கேட்டு இருவோரும் கிருபைக் கடலாகி
மற்றுமொரு காலம் மகாதேவனைப் பணிந்து
3455 மறுப்படா வங்கிஷத்தில் வந்து பிறவு மென்றீர்
மறுபட்டு எங்களுயிர் வைத்திருக்கப் போறதில்லை
பொன்னருஞ் சங்கரும் பொறுமையுடன் தானுரைக்க
ஆதிசிவன் மாயவரும் ஆலோசினை புரிந்து
அந்த வீரமலை மாதாவே வேதாமிக வளைத்துப்
3460 பொன்னரையுஞ் சங்கரையும் போதவாய் கைப்பிடித்து
பெரியமலை மாதாவே உனக்குப் பிள்ளையிது என்றுசொல்லி
ஆதி சிவனாறும் ஆண்டிச்சி கைக்குடுத்தாற்
நல்ல தங்காளுத்தமியை நாடி வரவழைத்து
உன்தங்கையென்று சொல்லிதான் குடுத்தாற் யீஷ்பரனார்
3465 இவன் அத்தைபிள்ளை அத்தாவும் ஆனைபடை சேனைக்களும்
சதிரங்க சேனையுடன் தான்கூட்டி யிப்போது
வீரமலை தனிலே மெய்ப்பாக வாழுமென்றார்

ஆதிசிவன் மாயவரும் மாதாவுக்கு அப்பனையுந் தான்கொடுத்து
நீங்கள் கலியுகமுள்ள மட்டும் காரணமாய் தெய்வமென்று
3470 தேசங்கள் தோறும் சிறப்பாகப் பூசைகொண்டு
அண்ணமா ரெண்டு அட்டால தேசமெங்கும்
முப்பூசைகொண்டு இந்தப் பூவுலகை யாளுமென்று
சிவனார் வரங்கொடுத்து தேக்கமலைக் கன்னியர்கள்
பெரியமலை மாதாவே பிரியமுடன் மாதாவும்
3475 பாத்துமங்கே ஏதுசொல்வார் பாரளந்த ரெகுராமன்
அத்தை பிள்ளை வேரையும் அயன்மிகவளைத்து
மாதாவுங் கைலைமாயவரும் யொப்பி வைத்து
நீயிந்த சேனைதளத்துடனே தேசமெங்கும் பூசைகொண்டு
இருமென்று மாயவரும் ஏங்கினா ரப்போது
3480 போனார்கள் தேவர்களும் பூலோகம் யிஷ்டரும்
தேவர்கள் போனபின்பு தேன்மொழியாள் மாதாவும்
பொன்னரையுஞ் சங்கரையும் பொற்கொடியாள் மாதாவும்
வீரமலை வெம்முடியில் வித்திருப்போம் வாங்களென்றாள்
பொன்னரையும் சங்கரையும் பொற்கொடியாள் தான்பாத்து
3485 வீரமலைக்கி நீங்கள் விருசாக யிப்போது
வாள்வீரா தம்பியரே வைகை மலைதனிலே
வாழ்ந்து யிருப்போம் மகனாரை வாருயென்றாள்
காறாளர் பொன்னர் சங்கர் காதில்மிக தான்கேட்டு
நலச்சின்னமாயிப் பிறந்து நல்லபடை தானெடுத்து
3490 வேடுபடை பொருதி வெத்திகொண்டு நாங்கள் வந்தோம்
வந்து யிளப்பாரயிலே வந்து தம்மாயிவ் வினையும்
பட்டுநாம் யிவ்விடத்தில் பாடுவந்து நேந்துதம்மா
இந்தச் சின்னமெல்லாம் யிவ்விடுத்தில் நாங்கவிட்டு
தெயிவ வடிவெடுத்த சேரவே நாங்களெல்லாம்
3495 அண்ணமாரென்று சொல்லி ஆனதளத்துடனே
மாதாவே உன்பிறகே வருவோமென விரைத்தாற்
பொன்னறிவை யொரைக்க பொற்கொடியாள் மாதாவும்
நல்லதென்று சம்மதிச்சு நாயகியாள் மாதாவும்
கன்னிதனை யழைத்துக் கமண்டலத்து நீர்தெளித்து
3500 இவர் பாளையத்தைச் சுத்திப் பாங்காக யிரையுமென்றாள்
அப்படியே நல்லதென்று அவ்வனத்துக் கன்னியர்கள்

சொன்னமொழி தப்பாமல் சுத்தியவர் தெளிக்க
நீரு தெளித்தவுடன் நிறைந்த படைத்தளமும்
அச்சினம் விட்டுஆவி அப்பால் குதித்திடுமாம்
3505 வாள்வீரா பொன்னர்சங்கர் வாய்த்த படுகளத்தில்
அத்தைபிள்ளை அத்தாவும் அவன்தம்பி இருவருமாய்
அயிவருயிர் விட்டு ஆனைபடை சேனையுடன்
தங்காள் புரவியரும் நன்னுயிரும் விட்டகன்று
படுகளத்தில் சடலம் பாங்காகப் போட்டுவிட்டு
3510 அரியக்காள் பாதம் அன்பாக வந்து நின்றாள்
எல்லோர் சின்னம்விட்டு எழுந்திருந்தார் தேவதைத்தாய்
ஆதிசிவன் சொல்படிக்கி அரியபெரிய மலைமாதாவும்
வீரமலை மெம்முடியில் வீத்திருப்போம் வாங்களென்று
போவோம் வாதம்பி என்று மாதாபொன்னு ரதமேறினளாம்
3515 மாதாரதமேரி யிந்தவாள் வீராதங்கையர்க்கு
புஷ்ப மலர் கொடுத்த பெரியமலை மாதாவும்
தங்காள் ரதமேறி தானிருவர் நிற்கையிலே
அண்ணமார் யிருவருந்தான் ஆலித்துக் கொக்கரித்து
மேகவர்ணப் புரவியின்மேல் எங்கள் வெள்ளாமிகவரசு
3520 பொருமை பொருத்தருளும் பொன்னாம்பல சுவாமி
ஆலித்துப் பாய்ந்து பெரியண்ணர் அப்புரவி யேறிடவே
சிறுபுலி குமாரசங்கன் சின்னண்ணன் வாள்வீரன்
சாம்பமட்டஞ் சீனிவைத்து சாரிவிட வேணுமென்று
ஏறினார் சின்னாண்டவரும் யெண்ணமத் தேசியின்மேல்
3525 ஆக்கரித்துக் கொக்கரித்து அமட்டியவர் வாளெடுத்து
தேசிநடத்தி நின்றான் சின்னண்ணன் வாள்வீரன்
சாம்பானை முன்னைவிட்டுச் சாரிவிட்டார் சின்னாண்டவரும்
அத்தைப்பிள்ளை அத்தாவும் அவர்தம்பி மூவோரும்
மாதாவைத் தாள்ப்பணிந்து மன்னவர்கள் இருவருந்தான்
3530 வெள்ளானை மேல்கொண்டார் வேந்தர் பெருமாளும்
மாதாவுந் தங்கையரும் மற்றுமுள்ள கன்னியரும்
வீரமகாமுனியும் மின்னடி கறுப்பண்ணன் முதல்
மாதாவை முன்னடத்தி மக்களெல்லாம் பின்தொடர
அண்ணமார் சேனைதளம் அனவோரும் பின்தொடர
3535 சின்னண்ண ரண்ணருமே சேர்ந்து புரவிவிட்டார்

மாதாவுக்கு முன்னாக மன்னவர்கள் சாரிவிட்டார்
அட்டஞ் சுளத்திவிட்டார் அனவோர் திடுக்கிடவே
பக்கம் சுளத்திவிட்டார் பாத்தவர்கள் தானடுங்க
வட்டஞ் சுவத்திவிட்டார் வளநாட்டுக் காராளர்
3540 சாரிவிட்டு வீதிவிட்டாற் சகலசனங் கொண்டாட
இரும்பு வல்லையத்தாள் யெறிந்து விளையாடி
மல்பொருதி வாள்விரன் வகையாய் விளையாடி
இருவருட கைவாளாள் யேந்தி விளையாடி
அண்ணருந் தம்பியரும் அதிரவங்கே மல்பொருதி
3545 சிலம்பு பொருதி நின்றார் தேவர் திடுக்கிடவே
நமக்கெதிரொருவரில்லை என்று இருவருமே முன்னடந்தார்
பெரியமலை மாதாவும் அண்ணமார் போராடி வாரதைத்தான்
பாத்து மனமகிழ்ந்து பாங்காகக் கொண்டாடி
தம்பியரைப் போலொருவன் சமத்துரொருவரில்லை
3550 மாதா மனதிலெண்ணி வளக்காடு பின்னெரிந்து
வீரமலையில் வந்துமிகுந்த படை சேனையுடன்
வந்தாளே மாதாவே மகாபடைகள் தான் சூழ
சுத்திபடை சூழ மாதா சுகமாய்க் கொலுவிருந்தாள்
அண்ணமார் படைசூழ ஆத்தாளுவும் வீற்றிருந்தாள்
3555 சேனை தனத்துடனே மாதா செல்வக் கொலுவிருந்தாள்
இப்படி மாதாவும் இருந்தாள் மலைதனிலே
மாதாவுந் தங்காளும் மலைதனிலே வீத்திருந்தாள்
இப்படித் தானும் இருக்குமந்த நாளையிலே
பொறுமை பொருத்த பொன்னாம்பல சுவாமி
3560 சின்னண்ணன் வாள்வீறா சீறுபுலி குமாரசங்கன்
அத்தைப்பிள்ளை அத்தாவும் அந்தமலை முனியும்
ஒண்டிக் கருப்பணனும் உத்தபடை தளமும்
எல்லோருங் கூடி நாமள் யிந்தமலைதனிலே
இருந்து மிங்கே வாழ்ந்தமென்றாள் போகாது என்றுசொல்லி
3565 போத்தி பசிதீர போயிமங்கே மாதாவே
கேட்டு வருவமென்று கிறுபையுடனே எழுந்துவந்து
முக்கால் வலம்வந்து மூவிருக்கால் தெண்டனிட்டு
காறாளர் பொன்னசங்கர் கைகட்டி வாய்புதைத்து

கூடவந்து படைநளத்தைக் குலவீரன் தான்பாத்து
3570 ஒருபக்கமாக ஒதுங்கி நில்லுமென்று சொல்லிக்
காராளர் பொன்னசங்கர் கைபினில் வாளெடுத்து
இருவரெண்டு பேரும் எதுத்து விளையாடலுற்றார்
இடதுகையில் கேடயமும் இடுக்கியவர்தம்பி சங்கர்
தத்தி நடையிட்டுத் தானிருவர் தான்பாத்து
3575 வளநாட்டுக் கோட்டையிலே மல்பொருதிக் கொண்டாப்போல
இருவரும் மல்பொருதி எதுத்து விளையாடி
இடசாரி பாய்ந்து வலசாரி சுத்திவந்து
மாதாவைத் தானும் மற்றொருகால் தெண்டனிட்டு
என்தாயே மாதாவே எனக்கு வரந்தந்தவளே
3580 சித்தன் மகளே சிவனார் சுடர்மணியே
வரத்தால் மிகுந்தவளே மகாதவசுக்குடையவளே
சடையால் பெருத்தவ்ளே சன்னாசி மாண்டவளே
நீ உடுத்தும் புலித்தோலும் உள்ளாடை ஆசனமும்
போத்தும் புலித்தோலும் புள்ளிமான் ஆசனமும்
3585 காவியுடையவளே கங்காளரூபியம்மாள்
குஞ்சுச் சடையவளே கோயிலமே மாதாவே
நாகபின்ற கன்னியரே நாயகியே மாதாவே
வீரமலை வெம்முடியில் வீத்திருக்கும் உத்தமியே
நாங்கள் வளநாட்டை விட்டுவனத்தில் வந்துமாண்டபின்பு
3590 இத்தினைநாளும் இருந்தோம் மலைதனிலே
அந்தஆதி சிவனாரும் அரனாருஞ் சொன்னபடி
உந்தனுட கைதனில் ஒப்பித்தார் கண்டாயே
அன்னுமுதல் கொண்டு பென்ஆனை படைசேனைதளம்
நம்ம வெம்முடியைக் காத்திருக்கும் வீரமகாமுனியும்
3595 நம்ம தவசடியைக் காத்திருக்கும் தந்தன் தனிக்கருப்பன்
இத்தனை பேர்களுந்தான் இந்தமலை தனிலே
காய்கனிகள் நாங்கள் தின்று காத்திருந்தோம் மாதாவே
இனிக் காய்கனியுஞ் சிக்காது கானகத்தில் உத்தமியே
இன்று முதல்கொண்டு இனி ஆகாரமில்லை அம்மா
3600 எரியுதம்மா மாதாவே என்வயறுமிப்போது
பொறுக்கமுடியாது பொந்தப்பசி மெத்தவம்மா
இப்படித்தான் உன்னருகில் இருந்தோமே ஆமாகில்

ஏங்கள்பசி ஆறுமோதான் என்னைஆரென்று தானறிவார்
மலைமேலே நாமிருந்தால் மானிடவரறிவாரோ
3605 என்று பொன்னசங்கருந்தான் எடுத்துரைக்கத் தான்கேட்டு
மாதாவுமப்போது மனமகிழ்ந்து ஏது சொல்வாள்
தம்பியடா வாள்வீரா சதிரமுடிப் பொன்னசங்கர்
நீங்கள் பட்டதொரு நாள்முதலாய் பராமரிப்பாருமில்லை
நீ செத்ததொரு நாள்முதலாய் மனிதரொருவர்வந்து
3610 தாகந்தணிந்ததில்லை தண்ணிவிடாய் தீர்ப்பாரில்லை
என்று சொல்லி வந்தாய் உன்துயரத்தை விட்டுவிடும்
இப்பவே நீர்தானும் யிந்தமலை விட்டிறங்கி
வீரப்பூர வாளும் மேவலக்க வாரகுலத்தில்
கம்பய நாயக்கனென்று கனமாகப் பேர்படைத்து
3615 அரசுதனை ஆளுகிறான் அவனருகே தான்போய்
இரைகோலுங் கம்பளத்தில் யிருக்குமந்த ஊர்போய்
அவர்படுத்திருக்கும் வீடுதனில் பாங்காக உள்புகுந்து
சொர்ப்பனமும் உண்டுபண்ணிச் சோதினையாய் தானடத்திப்
பண்ணிவைத்துப் பூசை பாங்குடனே வாங்குமென்றார்
3620 என்தாயே மாதாவே எனக்கிது போதுமென்று சொல்லி
அட்டம் பணிந்து அடிபணி ந்து தெண்டனிட்டு
உத்தாரம் வாங்கி ஓடிவந்தார் பொன்னசங்கர்
வீரமகாமுனியை முன்னே நடவுமென்றான்
கம்பை நாயக்கர் பக்கல் கடுகியே தான்போய்
3625 அரட்டியுஞ் சொர்ப்பனமும் ஆறாட்டம் பண்ணிவைத்துப்
பண்ணிவைத்துப் பூசை பாங்காக வாங்கவென்று
போய் வருவோமென்று சொல்லிப் பொன்னம்பல சுவாமி
அங்கினிச்சாரு தொட்டு அதுமேலே கச்சைகட்டி
கச்சை வரிஞ்சுகட்டிக் கருங்கச்சை சுங்கு விட்டுச்
3630 சந்திரகாவி உருமாலை தலைநிரையாய்த் தானுங்கட்டிக்
காதில் புணுகணிந்து கத்தூரிப் பொட்டுமிட்டு
ஆபரணந்தான் அணிந்து அளகு சமுதாடுதான் சொருகி
இடதுகையில் கேடயமும் வலதுகையில் வாளெடுத்துப்
போர்ப்புரவி மேலே பொன்னசங்கர் மேலேறி
3635 மகாமுனியைத்தானழைத்து வாள்முனியுமப்போது

காவியுடை யணிந்து கனத்தசடை விரித்து
மேலெல்லாஞ் சாம்பல் மெய்நிறையத் தான்பூசிக்
கண்டப கோடாலி கையிலே தானெடுத்து
வளதடியுஞ் சக்கரமும் வாய்த்தடி தோளில்வைத்து
3640 மூவருந்தான் கூடி மூர்க்கமுடன் தானடந்து
சாம்பானை முன்னடத்தி சாமியவர் பின்னடந்தார்
கம்பை நாயக்கருட கருத்தில் வர தானும்
ஆதேஷமாக அன்பாகக் காண லுற்றார்
மங்கையரும் தானும் மணிமெத்தை மேல்படுத்துத்
3645 தூங்குற வேளையிலே சொப்பனமே கண்டாலே
அவள் ஆசாரவாசலிலே அவள்தளங்கள் தான்சூழ
வாசல் பிரதாணி மன்னவர்கள் தான்சூழ
எல்லோருங் கூடி இருக்குஞ் சபைதனிலே
வீரமலை மேலிருந்து மின்னல் பறந்தாப்போல்
3650 மனவேகங் கொண்டு வருது குதிரைரெண்டு
சோடுகுதிரை ரெண்டும் துலங்கும் பட்டாணியைப்போல
வாய்வேகங் கொண்டு வல்லையங்கள் தானெறிந்து
வாறவனைக் கண்டு மயங்கியவன் கம்பையனும்
கண்டு பயந்து கம்பையனும் தானோடி
3655 அவன் மெத்தப் பயந்து யெறண்டுமங்கே ஓடையிலே
வீரமகா முனியும் மின்னல் பறந்தாப் போல்
பின்னாலே தான்துடந்தான் பித்தனைப் போலவந்துநின்று
பத்திப் பிடித்திழுத்துப் பல்கடித்து ஆக்கரித்து
உருட்டி முழித்து உலாவியவர் தான்வளந்து
3660 அண்டரெண்டம் ஊடுருவ அண்டகோளத்தைமுட்ட
ஓங்கி வளந்துமவர் கையிலே தெண்டோங்க
இருப்பு தெண்டாயுதத்தை எடுத்துமவர் ஓங்கிநிற்கக்
கண்டு பயந்து கம்பையனுங் கால்நடுங்கி
வாய்கள் தடுமாறி வாய்த்த உடல்நடுங்கி
3665 ஊனடுக்கம் பாய்ந்து உளறியவன் வாய்வறண்டு
கட்டிப் பிடித்து கையொதறக் கால்உதறச்
சேத்துப் பிடித்து மனந்தேவியர்மேல் தான்விழுந்தான்
அருண்டு அவள்மேல்விழுக அவன்தேவி தானெழுந்து

அஞ்சாதே யென்று அடவாக நெஞ்சுதட்டிப்
3670 பயந்து எழுந்திரிந்து அவன்தேவி தனைப்பாத்து
மங்கையரே பெண்ணணங்கே வார்த்தை அதுகேளும்
இத்தினை காலம் யிதுகாலம் தாமிருந்தோம்
இப்படித்தான் சொர்ப்பனங்கள் கண்டு பயந்ததில்லை
ஆனாலு மிப்போ அதிசெயமாகக் கண்டேநான்
3675 சொர்ப்பனங் கண்டதை நீர்சொல்லுவீர் மன்னவனே
சொல்லுவார் கம்பையனும் சொர்ப்பனத்தை நீகேளும்
நம்மவீரமலை மேலிருந்து மிரண்ட சிங்கம்போலேரெண்டு
மனவேகங் கொண்டுவந்து குதிரை ரெண்டு
புரவியின் பேரில் புகழ்வீர ராசாக்கள்
3680 பதினெட்டு ஆயுதமும் பாங்குடனே தானணிந்து
வல்லையங்கள் கைப்பிடித்து வகையாகத் தானெறிந்து
எறிந்து துடந்தார் என்பேரில் வாளெடுத்து
நான் பயந்து எழுந்திருந்து பாங்காக ஓடிவந்து
பின்னொரு வனோடிவந்து என்னைப்பின்பிடியாத் தான்பிடித்துச்
3685 சடையு முடியுடனே தானொருவன் ஓடிவந்து
ஆகாசம் பூமிமட்டும் அன்பாகத் தானெழுந்து
ஓங்கி அடித்தான் உத்தமியே நான்பயந்து
பதறி எழுந்திருந்தேன் பயிங்கிளியே நான்தானும்
அந்தமொழிகேட்டு அவன் தேவியேது சொல்வாள்
3690 என்ன யிருந்தாலும் எறக்கோலும் பொம்மண்ணும்
ஆதி ரெகுராமா அய்யரிருக்க மட்டும்
மற்றுமொரு தெய்வம் வருமோ தானம்மிடத்தில் என்று
தேறுதலை சொல்லித் தேன்மொழியாள் வீற்றிருந்தாள்
காராளர் பொன்னசங்கர் காதில் கேட்டு
3695 ஆகட்டுமென்று சொல்லி அப்பறமே தானும்வந்து
சாம்பானைத் தானழைத்துச் சங்கர் தயவாக ஏதுசொல்வார்
இவன் ஆலயத்தில் புகுந்துநல்ல புரவிஎல்லாம்
கழுத்தறுத்துக் காவல்கொண்டு கடுகியிங்கே வாருமென்றார்
அப்படியே நல்லதென்று சாம்பான் அலைகொட்டி உள்புகுந்து
3700 குதிரையைக் கழுத்தறுத்துக் குலைகாரன் காவல்கொண்டு
கடியபுரவி எல்லாம் காணப் புல்திங்காமல்
பண்ணிவைத்துச் சாம்பானும் பெரியஅண்ணர் பாதம்பணிந்துநின்றான்

நல்லதென்று காராளன் நல்முனியைத் தான்கூட்டி
வந்து மலைதனிலே வாகாக வீற்றிருந்தார்
3705 பொழுது விடிந்தவுடன் பொட்டெனவே தானெழுந்து
தந்தை சுத்திபண்ணிக் கம்பயன் தயவாக வாய்பூசி
நாம்தீர்த்தம் சேரவே நன்றாய் முடித்துக்கொண்டு
ஆசார வாசல் அன்புடனே வந்திருந்து
காரியக் காரர்களும் கனத்த பிரதானிகளும்
3710 எல்லோருங் கூடி யிருக்குந் தருவாயில்
குதிரை லாயம் விசாரிக்கும் கொண்டப்பன் வந்துநின்று
நம்ம லாயத்துக் குதிரை எல்லாம் நலமாக இப்போது
கானமும் பில்லும் கடுகியே தின்பதில்லை
போட்டபில் போட்டாப் போலப் பிரண்டு கிடக்குதங்கே
3715 என்றுசொல்லிக் கொண்டப்பன் யிதமா யுரைத்துவிட்டான்
அப்போது கம்பையனும் அவர்முகத்தைத் தான்பாத்து
இதுஎன்ன காரணமா யிருக்குதென்று தானுரைத்து
நான் ஒருநாளுமில்லாத சொர்ப்பனமுங் கண்டேன் நான்
சொல்லமுடியாது நான் சொர்ப்பனமுங் கண்டதுதான்
3720 இப்பக் குதிரைகளெல்லாம் குறுகுறுத்து நிற்கிறது
இது காரணமாக இருக்குதென்று கம்பையனும்
இரை கோளுங்கம்பளத்தார் யெக்குலியத் தொட்டியரே
புதுவாடி தனிலிருக்கும் பொம்மன நாயக்கரையும்
சரக்கோடங்கி நாயக்கரையும் தயவாக வரவழைத்து
3725 கம்பளத்தா ரெல்லோரும் கழறியங்கே தான்கூடிக்
கம்பய நாயக்கருக்கு இந்தக் காரணங்களானதுதான்
பாத்துமங்கே கம்பளத்தாற் பலபேர்கள் தான்கூடிச்
சோதிச்சுப் பாத்துத் துணைமகனைத் தான்பாத்து
இந்த வீரமலை வெம்முடியில் மெய்ப்பாக வீத்திருக்கும்
3730 அரியக்கா பெரியக்கா ஆமாருடைய கன்னி
கம்பளத்துத் தெய்வகன்னி அந்தக் கனகமுடி மாதாவும்
காராளர் பொன்னசங்கர் காரணமாய்ப் பட்டவர்கள்
அவர் ஆனைபடை சேனைதளம் அத்தபிள்ளை மூவருமாய்
அவர் பட்டதொரு மானமுதலாய் பராமரிப்பா ராருமில்லை
3735 வந்தார்கள் உன்னிடத்தில் வாய்த்ததொரு காராளர்

குதிரைமேலேறி உன்னை மிரட்டித் துடந்ததுவும்
அவர் குற்றமல்லாமல் பின்னொருவர் குற்றமில்லை
அவருக்கு என்னகுறை செய்தேன் என்னருகில் வாறதுக்கு
அப்போது கோடங்கி அடவுடனே யேதுரைப்பான்
3740 உன் ஆசாரவாசலிலே அடவாகப் பந்தலிட்டு
மேல்கட்டித் தூக்கி விதமுடனே கட்டிவைத்து
வாழைக் கரும்புடனே மாவிலையுந் தோரணமும்
கட்டி யலங்கரித்துக் காவலர்க ளெல்லோரும்
ஏழடுக்குத் திருக்கரகம் ஏந்திழையே முன்னைவைத்துப்
3745 பெரியமலை மாதாவை பிரபலமா யுண்டுபண்ணி
நல்லதங்காள் உத்தமியே நடுவே தனைநிறுத்தி
ஒத்தைத் திருக்கரகம் ஓங்கிஅங்கே முன்னைவைத்துத்
தவசடியைக் காத்திருக்கும் தந்தன் தனிக்கருப்பன்
கடிங்காலுஞ் சாம்பானும் கடக்கவே உண்டுபண்ணி
3750 அவர்பந்தி படந்திருக்கும் பக்கமெங்குஞ் சூழ்ந்திருக்க
இந்தப் படியாக யிதமாக உண்டுபண்ணி
ஆடுபண்ணி கோழியுடன் அலங்கரித்து முப்பூசை
உன்சீமையுள்ள மட்டும் செலுத்தி வந்தாயாமாகில்
உன்லாயத்துக் குதிரை எல்லாம் நன்றா யெழுந்திருக்கும்
3755 உந்தன் அரமணையில் ஒரு சிந்தனைகள் வாராது
என்றுசொல்லிக் கோடங்கி எடுத்துரைக்கத் தான்கேட்டுக்
கம்பய நாயக்கருந் தான்காரியமாய்த் தான்கேட்டுக்
கோடங்கி சொன்னகுறி தப்பாது என்றுசொல்லிக்
காரியப்பேர் மந்திரியைக் கடுகி அவரழைத்து
3760 ஊருக்கு ஊரு நீங்கள் உத்திரங்கள் தானனுப்பிச்
சினத்தில் வருகவென்று சேவுகரைத் தானனுப்பிச்
ஊருக்கு ஊரு உகந்திருக்கும் நாட்டாரே
சீமைக்கிச் சீமை சிறந்தகுடி அத்திணையும்
கம்பய நாயக்கர் கனத்ததொரு சீமைஎங்கும்
3765 ஓலை குடுத்துமங்கே ஓடவிட்டார் தூதுவரை
சேவுகருந் தானோடித் தெள்ளியனார் சீமைஎங்கும்
ஓலைதனைக் கொண்டுபோய் உடனேஅவர் கூட்டிவந்து
வந்து பணிந்தார்கள் மகராசன் கம்பையனை

கம்பைய நாயக்கரும் கண்ணாலே தான்பாத்து
3770 நாட்டாரைத் தான்பாத்து நாயக்கர்வர ஏதுரைப்பார்
கேளுங்கோ நாட்டாரை நீங்கள் கிருபையுட னிப்போது
வீரமலை வெம்முடியில் வித்திருக்கு மாதாவும்
காராளர் பொன்னசங்கர் கன்னிஒரு யெண்ணாளும்
அத்தைப் பிள்ளை மூவருமாய் ஆனைபடை சேனையுடன்
3775 மந்திர மகாமுனியும் மலைக்காவல் உடையவனும்
அவர் பந்திதளத்துடனே பாங்காக யிப்போது
நாளைத் திங்கள் கிழமைக்கிச் சீமையிலே உள்ளோரும்
புதுப்பானை எடுத்துப் பொய்கையிலே நீராடி
ஏழடுக்குத் திருக்கரகம் இதமாக உண்டுபண்ணி
3780 மாதாவை யுண்டுபண்ணி மண்டலத்தில் உள்ளோவைத்துத்
தங்காள் புரவியர்க்குத் தனிக்கரக முண்டுபண்ணி
மாதாவிருக்கும் வடபிரமாய் தானும்வைத்து
அண்ணமார் இருவரிருவரையும் அத்தைபிள்ளை மூவரையும்
வீரமகாமுனியும் விதமாக உண்டுபண்ணிச்
3785 சாம்பான் ஒருவனையும் தனியாக வெளியில்வைத்துப்
பூசைகள் நடத்துமென்று புகழ்வீரன் தானுரைத்தான்
நல்லதென்று நாட்டாரும் நலமுடனே தாள்பணிந்து
நாட்டாரும் போனபின்பு நாயக்கர் அவர்தானும்
ஆசார வாசலிலே அனவோருந் தான்கூடி
3790 வீதிக்கிவீதி வெத்தித் தமுக்கடித்து
நாளைத் திங்கள்கிழமைக்கித் தெய்வமது செய்வமென்று
ஊரிலுள்ள பேர்களெல்லாம் ஒருமித்துத்தான்கூடி
ஆசார வாசல்முன்னே அன்பாய் இடம்பார்த்து
நாட்டினார் பந்தல் நாயக்கர் அவர்தானும்
3795 பந்தலும் போட்டுப் பட்டுமேல் கட்டுக்கட்டி
வாழைக் கரும்புடனே மாவெலையுந் தோரணமும்
சிங்காரஞ் செய்து சிறப்பாய் அலங்கரித்துப்
பூவாலலங்கரித்துப் பூச்சரங்கள் தொங்கல்விட்டுப்
படத்திலுள்ளோரைப் பாங்காய் வரவழைத்து
3800 வைகையிலே தலைமுழுகி வாருமென்று தானழைத்துக்
கரகமெடுக்கக் காரியப்போ வேணுமென்று
ஆரைவைப்போ மென்றுசொல்லி ஆலோசினைபுரிந்தார்

கம்பை நாயக்கருந்தான் காதிலதுகேட்டு
நம்ம ஊழியத்துக்காரன் உக்கிறாண ந்தான்கார்க்கும்
3805 அம்பலக்காரன் வீரமலை ஆண்பிள்ளைகண்டாயே
அந்த மாதாவுக்கேத்த பிள்ளை மன்னவனிருக்க
ஆலோசினை யேது என்று அவருரைத்தார் நாயக்கருமே
நல்லதென்று சம்மதிச்சு நாட்டார்களப்போது
வீரமலை அம்பலனை விருசாகக் கூட்டிவந்து
3810 நீ கெங்கை தலைமுழுகி கிருபையுடனிப்போது
வாருமென்றுசொல்லி வகையாயனுப்பிவைத்தார்
வைகை தலைமுழுகி வந்தானை வீரமலை
அவனுக்குக்கட்டுவர்க்க முள்ளதெல்லாம் தனமாகத் தானணிந்து
ஆபரணம் பூட்டி அழகுபெறத்தானணிந்து
3815 காவியுடையணிந்து கழுத்திலுத்திராக்க மாலையிட்டு
சாந்துபுனுகுஞ் சவ்வாது மிகப்பூசி
மல்லிகை ஆரம் மாராடிதான் போட்டு
முல்லை மலர்ச்சரத்தை முடிமீதிலே சொருகிக்
கரகத்தில் நீர்மோந்து கரைமீதில் தானும்வைத்துக்
கரகந்தனைச் செப்பனிட்டு கனத்தமலர் தான்சூடிப்
3820 பூம்பாளை கொண்டுவந்து பொற்கரகந் தானணிந்து
மருவுங் கொழுந்து வாசமுள்ள செண்பகமும்
மல்லிகை ஆரம் வீரமலைக்கி மாராடிதான்போட்டு
மண்டபத்துக்குள்ளாக வீரமலை வாளையிது போட்டு
மாதா கரகந்தன்னை வகையாகத் தானெடுத்து
3825 வாழையிலை மேலே வைத்தான் மன்னவர்கள் பாத்திருக்கத்
தங்காள் கரகம் தனிக்கரகஞ் செப்பனிட்டு
வலதுபிரம் வைத்தான் மன்னவன் வீரமலை
அண்ணமா ரிருவரையும் அத்தைபிள்ளை மூவரையும்
தங்காள் வலதுபுறம் தயவாக உண்டுபண்ணி
3830 அய்வருக்கு வலதுபிறம் அடவாகத் தானிருத்தித்
தவசு நிலை காக்கவந்த தந்தன் தனிக்கறுப்பன்
வீரமகா முனியும் மின்னடிக் கருப்பண்ண னுடன்
மாதா கொலுவிருக்கும் வலதுபிறந் தானிருந்து
மண்டபத்துக்குள்ளாக வாகாகத் திண்ணையிட்டுக்
3835 கடிங்காலுஞ் சாம்பானும் கடக்கவே முன்னைவைத்து

பச்சிலையும் பாக்கும் பாங்குடனே முன்னைவைத்துத்
தேங்காய்ப் பழமும் திறமாயுடைத்து வைத்துச்
செங்கரும்பு ரசதாளி சீவியே நறுக்கி வைத்துச்
செவ்விள நீராயிரமாம் சீவியே நறுக்கிவைத்துத்
3840 திறமாக முன்னேவைத்துத் திட்டெனவே தானும்வந்து
கைகாலுஞ் சுத்திபண்ணிக் கைகட்டி நின்றுகொண்டு
கம்பை நாயக்கரும் கைமுகஞ்சு தெண்டனிட்டார்
ஏறிட்டுப் பாத்து ஏதுசொல்வான் கம்பையனும்
அஞ்சாதே வீரமலை அம்பலகா இப்போது
3845 மாதாவே இப்போது மனதில் மிகநினைந்து
தீபதூப மங்கை எடுத்துப்பெரி யக்காளுக்குக்
குடடா தீபமென்று நாயக்கருந் தானுரைக்க
நல்லதென்று வீரமலை நாடிமிக நடந்து
மண்டபத்துக் குள்ளாக மன்னவ னோடிவந்து
3850 பெரியமலை மாதாவைப் போற்றி அடிவணங்கி
இடதுகையில் மணிஎடுத்து வலதுகையில் தீபமது
எடுத்து வெளியில் வந்தான் எல்லவருந் தான்சூழ
வீரமலை திசைநோக்கி விரும்பியவன் பாத்து
ஒடுங்கி வணங்கிநின்று ஒழுக்கமுடன் நின்றுகொண்டு
3855 தீபதூபம் பொகைகுடுத்துத் தீரனவன் தன்மேலே
அந்தநல்ல வேளையிலே அக்காண்டி மாதாவும்
மாயமாயவன் பேரில் மாதாவும் வந்திடவே
கண்கள் பொறிபறக்கக் கிடுகிடென்று நீரோட
மருளுமுகங் கொண்டுமங்கே மண்டபத்தில் தான்புகுந்து
3860 முன்னுமொரு திரந்தான் முகம்பழகிக் கொண்டாப்போல்
தீபதூபந்தான் கொடுத்தான் தேவி பெரியக்காளுக்குத்
தங்காள் புரவியர்க்குத் தான்வணங்கி யேகொடுத்து
அண்ணமா ரிருவருக்கு அத்தை பிள்ளை மூவருக்கும்
வீரமகா முனிக்கி மவத்தியுடன் தான்கொடுத்துத்
3865 தனிக் கறுப்பண்ணனுக்குத் தான்வணங்கியே கொடுத்து
வெளியிலே வந்துநின்று வீரமலை அப்போது
கடிங்காலுஞ் சாம்பானைக் கருத்தில்மிக நினைந்து
கடக்க நின்றுதூபங் காட்டினா னப்போது

ஆலாத்தித் தீபம் அனைவோர்க்குந் தான்குடுத்து
3870 ஏந்தியே எல்லோர்க்கும் யினிதுடனே தான்குடுத்து
திருநீறு தான்கலந்தான் திரண்டசபை எல்லோர்க்கும்
அந்த வேளையிலே வீரமலை அதட்டிக் குலவையிட்டு
ஆக்கரித்துப் பல்கடித்து அதட்டியவ னப்போது
கரகத்து முன்னே கட்டழகன் மண்டியிட்டுக்
3875 கரகத்தை ஏந்திக் கையிலே தனைஎடுத்துத்
திருமுடி மேல்வைத்துத் தீர்க்கமுடன் நின்றுகொண்டு
திருநீறு கையெடுத்துத் திருக்கரகம் மேல்போட்டு
வீரப்பூர தானோக்கி மாதாவிரும்பியே தானடந்து
தங்காள் கரகம் தனிச்கரகம் பின்புவர
3880 மாதா திருக்கரகம் வகையாக உள்ளே வைத்துத்
தெய்வநிலை யுண்டு பண்ணிச் சேரஇலை போட்டு
பொங்கல் நிவத்தியமும் போதவேதான் போட்டு
தேங்காய்ப் பழமும் திரமாக முன்னை வைத்து
தூபதீபந்தான் கொடுத்தார் தேவி பெரியக்காளுக்கு
3885 மாதாவும் தங்காளும் மத்துமுள்ள தேவதையும்
குடுத்தான் தீபதூபங் குணமுடனே எல்லோர்க்கும்
அண்ணமா ரிருவருக்கும் அவன்மைத்துனன்மார் இருவருக்கும்
வீரமகா முனிக்கும் மின்னடிக் கருப்பண்ணனுக்கும்
கடிங்காலுஞ் சாம்பானுக்கு கனமாகவே கொடுத்துக்
3890 கற்பூரந் தீவார்த்தினை காவலர்கள் தான்குடுத்து
எல்லோர்க்குந் தானும் ஏந்தி மிகக்கொடுத்துத்
தீபதூபங் குடுத்து வருகையிலே கோடையிடி குமாரசங்கர்
ஆதேசம் வந்து அதட்டியவர் பாய்ந்து
பார்க்கவந்த பேர்மேலே பல்கடித்துக் குலவையிட்டார்
3895 அண்ணமாரி ருவருந்தான் அதுந்து விளையாடயிலே
வீரமகா முனியும் மின்னடிக் கருப்பணனும்
எல்லோரும் வந்து இதமாய் விளையாடிக்
கம்பை நாயக்கரைத்தான் கதறியவர் தான்பாத்து
நான்பட்டதொரு நாள்முதலாய் பாராமல் நீயிருந்தாய்
3900 நான் இரந்ததொரு நாள்முதலாய் நீயேறிட்டுப் பார்க்கவில்லை
பல்லைக் கடித்துத் தம்பிசங்கர் பார்வையிட்டுத்தான்பார்க்கக்
கம்பை நாயக்கருந்தான் கனத்த பிரதானிகளும்

கைகால் நடுங்கிக் கடகடன்று தானுதறிக்
கைகட்டி முன்னே காத்திருக்கும் வேளையிலே
3905 மாதா கரகமதை வீரமலை வகையாகக் கைஎடுத்துத்
திருமுடியில் வைத்துத் தீரனவன் ஓடி
விபூதிதனை எடுத்து விட்டெறிந்து மாதாவும்
விளையாடிப் பந்தெறிந்து வேண்டியவள் பூப்பொரித்து
பூப்பொரித்து மாதாவும் பொற்கரகம் கையேந்திப்
3910 பூப்பந்தற் குள்ளே வைத்தான் புகழான விரமலை
எல்லோர்க்கும் விபூதி எடுத்து அவன்கைகொடுத்துச்
சந்தோஷமாகத் தங்காள் மனைதான் போனார்
அந்தநாள் சென்றுமத்தா நாளாம் பொழுது
உளறிச் சனங்கள் உத்தமர்களெல்லோரும்
3915 ஊட்டுக்கொரு பொங்கல் உகந்ததொரு துள்ளுகுட்டி
எல்லோருங் கொண்டுவந்து ஏற்கையுடன் அண்ணனுக்குக்
கோவிலுக்கு முன்னாகக் கொண்டுவந்து வைத்தார்கள்
அரமனைப் பொங்கலென்று ஆயிரம் பானைபொங்கல்
ஆயிரந் துள்ளுகுட்டி அச்சினமே கொண்டுவந்து
3920 வெட்டி வைத்துக் கம்பையனும் வேடிக்கையாகநின்று
பள்ளையமும் போட்டு பாங்காய் அடசலென்று
ஏகமாய்த்தான் குமித்து இருக்குந் தறுவாயில்
3925 தூபந்தனைக் குடுத்தான் தோகைமலர்க் கன்னியர்க்கு
வைகைமலை மாதாவும் மாதாமனம் மகிழ்ந்து
ஆனந்தமாக அவன்பேரில் தான்பாய்ந்து
வெம்முடியை விட்டு அந்த வீரமலை தன்னருகில்
இருந்து விளையாடி எல்லோரும் வீத்திருக்கக்
3930 கும்மியடித்துக் கூடி விளையாடிப்
பூப்பொரித்து மாதாவும் பொற்கொடியாள் நிற்கையிலே
பொறுமை பொறுத்த பொன்னாம்பல சுவாமி
நெல்லிவளநாடன் நேர்சூழ்ந்த கோனாடன்
காராளர் பொன்னருமே கடகடன்று அப்போது
3935 வீரமலை மேல்பாய்ந்து பொன்னர்விருசாய்க் குலவையிட்டுப்
பந்தல்விட்டுப் பொன்னருமே பாங்காய் வெளியில்வர
சாரியிது பாய்ந்து பொன்னர்சாமி விளையாடித்
தாங்கிநின்று பொன்னர் சனங்களைப்பாத்துக் கொக்கரித்தார்

பல்கடித்துத் தம்பிசங்கர் அண்ணனே பார்வையிட்டுத்தான்பாத்துக்
3940 கோவித்துக் கண்சிவந்து குலவையிட்டுத் தான்பாத்து
ஆணழகன் தம்பிசங்கர் அங்கமெல்லாந் தானடுங்க
மேனாடு பாத்து மிரண்டுமவர் பல்கடித்து
அண்ணனுந் தம்பியரும் அதுந்து விளையாடிச்
சிலம்பம் பொருதிநின்று சிர்வேந்தர் காராளர்
3945 கண்ணால் பொரிபறந்து கடைக்கண்ணால் நீர்ததும்ப
அதட்டியவர்தம்பி சங்கர் ஆக்கரித்துநிற்கையிலே
பார்க்க வந்த சனங்களெல்லாம் பாங்காய்த்தலைவிரித்து
வீரமகாமுனியும் வெம்முடிக் கருப்பளமுதல்
தேக்கந் தெளிந்து திறல்வீமன் தம்பிசங்கர்
3950 கம்பய நாயக்கரைத் தான்கடைக் கண்ணால் தான்பாத்து
மிரண்டு எழுந்திரிந்து மேனாடு திசைநோக்கி
அண்ணர்முகம் பாத்து ஆக்கரித்து மண்டியிட்டு
இருவரு மப்போது எதுத்து விளையாடிப்
படுகளங் காத்திருந்த பாரமுடி அண்ணனுக்குத்
3955 திட்டிக்குட்டிக் காவல் சீக்கிரமாய்த் தான்கொடுத்துத்
தீர்த்தமிக வாடி திருநீறு தானணிந்து
மாதாவைப் பாத்து அண்ணமார் மண்டியிட்டுக் கொக்கரித்துக்
கம்பநாயக்கரையும் கண்ணாலே தான்பாத்து
வலது கையைத்தான்பிடித்து வகையாக மண்டியிட்டு
3960 ஏறிட்டுத் தான்பாத்தார் எதுக்கநின்று நாயக்கருமே
கைகால் மிகநடுங்கிக் கம்பய நாயக்கருந்தான்
சிந்தை மிகக்கலங்கிச் சீக்கிரமாய்க் கை ஏந்தி
ஏறிட்டுப் பாத்து ஏதுசொல்வார் தம்பிசங்கர்
அடாபுத்திரனுமில்லாமல் போத மனஞ்சலித்துப்
3965 பட்டந் தனையாளப் பாலனில்லை என்றுசொல்லி
மெத்தச்சலித்து நீ மேனிஎல்லாம் புண்ணாகி
நிக்குறா யிப்போ நினவு வேறாகமுடி
மெத்த மனம்மகிழ்ந்து நாயக்கர் விரும்பியவர்தொழுது
சின்னண்ணன் வாள்வீரன் சீறுபுலி குமாரசங்கன்
3970 மடிபிடித்துத் தானிழுத்து மண்டியிட்டுத் தான்பாத்து
வீரமலை வெம்முடியில் நாங்கள் விரும்பியே வீத்திருந்தோம்
வீத்திருந்து மாதாவை விரும்பிநான் கூட்டிவந்தேன்

உன்னருகில் பூசை உகந்துடனே நான்வாங்கி
வந்தேநான் உன்னிடத்தில் வையகங்கள் தானறிய
3975 இப்பூசை மிகக் குடுத்தியே எங்கள்பொந்திபசிதீரக்
காவல்மிகக் குடுத்து காத்துநின்ற மன்னனுக்கு
எங்கள் மாதா மிகவரிய மைந்தன் தந்தேனுந்தனுக்கு
அஞ்சாதே கம்பையனே அரசுதனை ஆளுதற்கு
புத்திர சந்தானம் போத மிகக்குடுத்தேன்
3980 என்றுசொல்லித் தம்பிசங்கர் எல்லோரு மிகவறிய
புத்திர சந்தானம் போத மிகக்குடுத்தார்
எல்லோ ரறியமுடி யிதமாகக் கைப்போட்டு
உன்தேச மெல்லாம் உகந்தெனக்குப் பூசைசெய்யப்
பண்ணிவைத்துக் குடுத்தைஎன்றால் பலனுண்டு முந்தனுக்கு
3985 ஏதுக்கு அஞ்சாதே என்றுசொல்லிக் காராளர்
சன்னதங்கள் நின்று தயவாக எல்லோரும்
பூசை முடித்துப் பகழ்பெரிய நாயக்கருமே
அரமனைக்கிப் போய் அன்பாக வீத்திருந்தார்
இப்படித் தானும் இருக்குமந்த நாளையிலே
3990 நாயக்கரும் பிரதானியரும் நலமாக வீத்திருந்து
காராளர் பொன்னசங்கர் காரணமாய்ப் பட்டவர்தான்
அன்றொருநாள் பூசையிலே நமக்கு ஆனபலன்தந்தமென்று
நம்முடைய சீமைஎங்கும் அவர்க்கு நல்பூசை தந்தமென்று
பட்டந்தனை ஆளுதற்குப் பாலகனுந் தாறனென்றார்
3995 ஆகையினா லிப்போது நாமஆண்டதொரு சீமைஎல்லாம்
நாளைத்திங்கள் கிழமையிலே தீரனுக்குப் பூசையிடப்
பண்ணிவைப்போந் தன்பதியைப் பாங்காக இப்போது
நம்ம சீமையிலுள்ள நம்மசிறந்தகுடி அத்தினையும்
வரவழை யுமென்று வாகாகச் சொல்லிடவே
4000 நல்லதென்று பிரதானி நலமாக ஓலைவிட்டு
ஓலைதனைப் பாத்து ஊரிலுள்ள நாட்டார்கள்
வீரப்பூர வந்து வேந்தன் துரை கம்பையனே
கண்டுமிகத் தொழுது கருத்துடனே நிற்கையிலே
கம்பய நாயக்கர் கருத்துடனே தான்பாத்துச்
4005 சந்தோஷமாகத் தயவாக ஏதுசொல்வார்
வாருங்கோ நாட்டாரை வார்த்தைசொல்லக் கேளுமென்றார்

காராளர் பொன்னசங்கர் காரணமாய்ப் பட்டவரை
நம்ம ஊருக்குஊரு உகந்து படைக்கவென்று
நாயக்கருகைக்க நல்லகுடி மன்னவனும்
4010 நாயக்கரைத் தொழுது நலமாக ஏதுசொல்வார்
எந்த விதமாக யான்படைப்போம் ராசாவே
அப்போது நாயக்கர் அவர்கள் தனைப்பாத்து
உங்கள் மனை சுத்திபண்ணி உத்தமரே நீராடி
உங்கள்மனை சுத்திபண்ணி உயர்ந்ததொரு திண்ணையிட்டுப்
4015 பந்தலுங் கீழ்போட்டு பாங்கா யலங்கரித்து
வாழை கமுகு வகுவாகக் கட்டிவைத்துப்
பச்சிலையுந் தோரணமும் பாங்காகக் கட்டிவைத்துத்
திங்கள் கிழமைச் சிவகெங்கை நீராடி
ஏழடுக்குத் திருக்கரகம் இதமாக முன்னைவைத்து
4020 மாதா கரகம் வலதுபிறந் தானும்வைத்துப்
பட்டதொரு நாள்முதலாய்ப் படைமுகத்து வன்னியரை
வலது பிறமாக வைத்து இலைபோட்டு
மந்திர மகாமுனியை வகையாக முன்னேவைத்துத்
தந்திர மாகத் தனிக்கருப்பை பின்னைவைத்துக்
4025 கட்டுவர்க்கஞ் சோடினையாய்க் கனமாக முன்னைவைத்துக்
காராள ரிருவரையும் கைதொழுது வாங்கவென்றாள்
எல்லோர்க்கும் புத்தி யிதமாகத் தானுரைத்துத்
திங்கள் கிழமைக்கி நீங்கள் திறமாகச் செய்யுமென்று
உத்தாரம் பண்ணி யுடனே அனுப்பிவித்தார்
4030 நல்லதென்று ஊராரும் நடந்துபோய் ஊர்சேர்ந்து
ஊருக்கு ஊரூ ஓடி முரசறைந்து
நாயக்கர்சொல் தப்பாமல் நன்றாய் முரசறைந்து
ஊருக்குப் பிரத்தியமாய் உத்தமர்கள் பந்தலிட்டுப்
பந்தல் விளக்குப் பாவாடை தானுங்கட்டிப்
4035 பச்செலையுந் தோரணமும் பாங்காகத் தான்துலங்கக்
கட்டி அலங்கரித்துக் காராள ரை நினைந்து
கெங்கைத் தலைமுழுகிக் சேகணியிலே நீராடி
நீராடிப் பட்டுடுத்தி நெத்தியிலே நீறணிந்து
மாதா திருக்கரகம் வகையுடனே முன்னைவைத்து
4040 எந்தத் திருக்கரகம் இதமாக முன்னேவைத்துப்

பூவா லலங்கரித்துப் பொற்கொடியாள் தன்கரகம்
மருகுக் கொழுந்து வாசமுள்ள மல்லிகையும்
கனமாகச் சூடிக் கரகத்தை முன்னேவைத்து
வலது பிறமாக வாருணிச் சங்கருக்கு
4045 வீர மகாமுனியை விரும்பியங்கே தானும்வைத்துத்
தங்காள் கரகம் தனிக்கவே தானும்வைத்துத்
தேங்காய்ப் பழமும் திரமாக முன்னைவைத்துச்
செங்கரும்பு ரஸ்தாளி சீவி நறுக்கிவைத்துச்
செவ்விளநீர் கண் திறந்து திறமாக முன்னேவைத்துக்
4050 பூம்பாளை கொண்டுவந்து பொற்கரகம் மேலே
சாம்பிராணித் தூபம் கமகமெனத் தான்போட்டு
வீர மலையை வெம்முடியைத் தானோக்கித்
தீபதூபந் தான்கொடுத்துத் திறமாகத் தான்கூடி
மாதா கரகம் வாய்த்தபந்தி தானோக்கித்
4055 தீபதூ பங்கொடுத்துத் தேவியவள் மாதாவும்
அதட்டிக் குலவையிட்டு மாதா ஆவேச மாய்ப்பாய்ந்து
சித்தன் மகளும் தேவிமனங் குளிர்ந்து
கரகந் தனையெடுத்துக் கயிலாச லாடமுனி
திருமுடிமே லேவைத்துத் தேவி தனை நடக்க
4060 நாட்டார் நடந்துமங்கே நாடி வருகையிலே
தேங்கிநின்று மாதாவும் தேம்பி மிகவழுது
ஏறிட்டுப் பாத்தாள் எதுக்கநின்று நாட்டாரை
அப்போது பொன்னசங்கர் அவன்மேலே தான்பாய்ந்து
அதட்டியே பல்கடித்து ஆக்கரித்துத் தான்பாத்து
4065 மாதாவைப் பாத்து மந்திரவாள் கைவாங்கி
அண்ணனுந் தம்பியரும் அண்டி விளையாடிச்
சிலம்பம் பொருதிச் சினந்து விளையாடி
மாதாவைக் கூட்டிவந்து மண்டபத்தில் தானும்வைத்து
ஊரார்கள் கூடி உத்தமர்கள் பூசையிட்டு
4070 ஊருக்கு ஊரு உத்தமர்கள் பூசையிட்டார்
சீர்மைக்குச் சீர்மை சிறப்பாகப் பூசையிட்டார்
வீட்டுக்கொரு பொங்கல் விதமாகத் தானும்வைத்துப்
பாணைக்கொரு துள்ளுகுட்டிப் பாங்காகத் தானும்வெட்டி

ஆடு பன்றி கோழி அலங்கரித்தார்

4075 முப்பூசை மிகப்போட்டுப் பொங்கமுடன் வீற்றிருந்தார்

கம்பையனும் பூசைசெய்து கனத்தமனுத் தான்வாங்கிப்

பட்டந்தனை ஆளுதற்குப் பாலன் மிகக்கொடுத்தார்

வாழி மிகவாழி வானோர்கள் தான்வாழி

தேவர்களும் வாழி திருமாலுந் தான்வாழி

4080 ஆதிபர மேஷ்வரியாள் அம்பிகையுந் தான்வாழி

சத்தேழு கன்னித் தாயாருந் தான்வாழி

வெம்முடியில் வீற்றிருக்கும் வீரமகா முனியுந்தான்வாழி

பெரியமலை மாதாவும் பெரியகாண்டி தான்வாழி

சங்கரும் வாழி சதாசிவனார் தான்வாழி

4085 பொன்னருட காவியத்தைப் பொங்கமுடன் நான்பாடச்

சங்கருட காவியத்தைத் தப்பாமல் நான்பாட

இன்னஞ் சொல்லுமென்று இன்பமுடன் கேட்டவர்கள்

பக்க மிருந்து பண்புடனே கேட்டவர்கள்

தூர மிருந்து செவிஉத்துக் கேட்டவர்கள்

4090 சுத்தி யிருந்து சுகமுடனே கேட்டவர்கள்

ஆலவாய்ச் சொக்கர் அருளுமிக உண்டாவார்

மீனாட்சி யம்மன் மிக்கபதந் தந்திடுவாள்

காமாட்சி யம்மன் கனகவரம் தந்திடுவாள்

என்னும் பதம்பெறுவீர் ஈஷ்பரனைப் போல்வாழ்வீர்

4095 ஆல்போல் தழைத்து அறுகதுபோல் வேரூணி

மூங்கில்போல் சுத்தம் முகியாமல் வாழ்ந்திருப்பீர்!

அண்ணாமலை ஈஷ்பரனார் அருள்பெற்றே வாழ்ந்திருப்பீர்!

ஸ்ரீராமசெயம். சரஸ்வதி துணை உண்டாகவேண்டியது. விரோதி கிருது-ஷு மார்கழி—மீ த்துக்குத் திருச்சினாப்பள்ளி சில்லா கருவூருத் தாலுகா வெள்ளியணைக் கிராமத்தைச் சேர்ந்த தாளியாப்பட்டியிலேயிருக்கும் நாச்சியப்பக்கவுண்டன் மகன் வண்டிக்காரனென்கிற காளியப்பக் கவுண்டனுக்கு ஸ்ரீஹரி புண்ணிய குமாரனாகிய மாரப்பக் கவுண்டன் பொன்னர் சங்கர் அம்மானை யெழுதி முகிந்தது.

— முற்றும் —